# ஆய்வுச் சிந்தனைகள்

நா. மீனவன்





ஐந்தமிழ் ஆய்வாளர் மன்றம்
மதுரை
ஏப்ரல் 1999

# ஐந்தமிழ் ஆய்வாளர் மன்றம்
## மதுரை

நா. மீனவன்

ஐந்தாவது கருத்தரங்கம்
26,27 ஏப்ரல் 1999




தமிழ்த் துறை
தொலைநிலைக் கல்வி இயக்ககம்
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

## கருத்தரங்க அமைப்புக்குழு

**தலைவர் : பேராசிரியர் மீனாட்சி முருகரத்தனம்**

**உறுப்பினர்கள்**

பேராசிரியர் நெல்லை ந. சொக்கலிங்கம்
பேராசிரியர் அ. வண்ணமுத்து
திரு அ. நு ராசன்
திரு மா. கருணாகரன்
திரு க. கண்ணன்
முனைவர் பெ. சிவசுப்பிரமணியன்
திரு க. காசிமாரியப்பன்
முனைவர் இரா. கண்ணன்
பேராசிரியர் இரா. காசிராசன்
பேராசிரியர் சோதிபாய் தேவதாஸ்
முனைவர் வீரா. அழகிரிசாமி
முனைவர் க. பூங்கொடி
முனைவர் க. நாகநந்தினி
திரு ஆ. பாப்பா
முனைவர் தி. பூங்குன்றன்
முனைவர் நா. முருகேசபாண்டியன்
திரு ச. குமார்



# ஆய்வுச் சிந்தனைகள்

## தொகுதி – 2

பதிப்புக்குழு

அ. நடராசன் வீரா. அழகிரிசாமி மா. கருணாகரன்

சு. பூங்கொடி க. நாகநந்தினி சு. கண்ணன்

அரங்க மு. முருகையன்



ஐந்தமிழ் ஆய்வாளர் மன்றம்

மதுரை

ஏப்ரல் 1999

ஆய்வுச் சிந்தனைகள் 5
(ஐந்தாம் கருத்தரங்க ஆய்வுக்கட்டுரைகள்)
தொகுதி 2

பதிப்பு : ஏப்ரல் 1999

விலை : தொகுதி 1, 2 – ரூ 70/–

அச்சு : மாஸ் ஆப்செட்
16 முகமதியர் சந்து, டவுண் ஹால் ரோடு
மதுரை-1

வெளியீடு : ஐந்தமிழ் ஆய்வாளர் மன்றம்
80, செண்பகம் இல்லம்
மேலப்பொன்னகரம் 7–வது தெரு
மதுரை –10

# 28. கோ. கேசவன் திறனாய்வில் பண்பாட்டுப் பார்வை

முன்னவர். ந. முருகேசபாண்டியன்
நூலகர்
க.செ.கல்லூரி, மேலைச்சிவபுரி,

திறனாய்வாளரின் கருத்தியல் அடிப்படையிலே இலக்கியப்படைப்புகள் நுணுகி ஆராயப்பட்டு மதிப்பீடுகள் உருவாக்கப்படுகின்றன. தூய கலைக்கு அழுத்தம் தருவது போல தூய திறனாய்வு என்ற கோட்பாட்டினுக்கு முக்கியத்துவம் தருவது உரிய கற்பனையாகும் திறனாய்வாளரின் சுயவிருப்பு வெறுப்பு நோக்கில் வெளிப்படும் அபிப்பிராயங்களின் வகைகள் பற்றிய பலபட்டியல்கள் உள்ளன. அவை குறித்து விளக்குவது இங்கு நோக்கமன்று. திறனாய்ந்திட தேர்ந்தெடுக்கப்படும் நூல் அல்லது பிரச்னையிலிருந்தே திறனாய்வாளரின் சார்புநிலை புலப்படுகிறது. மேலும் படைப்பினை அணுகிட ஏற்கனவே உள்ள கருவிகள் போதாத நிலையில், முனைப்பான திறனாய்வாளர்கள் பழமையான தடத்திலிருந்து விலகி புதிய அளவுகோல்களைப் பயன்படுத்துகின்றனர். பன்னெடுங்காலமாகத் தனிமனித ரசனைப்பின்புலத்தில் சிலாகிப்பதே ஆய்வெனக் கருதப் பெற்ற தமிழ்ச் சூழலில், இலக்கியவியல் பொருள் முதல் வாத அடிப்படையில், படைப்புகளை வரலாற்றுப் பின்புலத்தில் சமுதாயத்தில்பொருத்திக் காணும் மார்க்சியப் பார்வையுடைய நா. வானமாமலை, க. கைலாசபதி, சிவத்தம்பி போன்றோர் புதிய திறனாய்வாளராக அறிமுகமாயினர். அவர்கள் அமைத்த வழியில், 1979-இல் 'மண்ணும் மனித உறவுகள்' நூல் மூலம் அடியெடுத்துவைத்த கோ. கேசவனின் வருகை பண்டிதர்களிடையவே சலசலப்பை ஏற்படுத்தியது. இதுவரையிலான திறனாய்வுப் போக்குகளிலிருந்து மாறுபட்டு, சங்க இலக்கியத்தைச் சமூகவியல் நோக்கில் ஆராய்ந்து, சிடுக்குகளை அவிழ்த்தும் புதிய தளங்களைக் கண்டறிந்த கோ. கேசவனின் அணுகுமுறை வரவேற்கப்பட வேண்டியதாக அமைந்திருக்கிறது.

திறனாய்வாளராகப் பத்தொன்பது ஆண்டுகள் தீவிரமாகச் செயற்பட்ட கோ.கேசவன், 22 ஆய்வு நூற்களையும் 5 சிறுவெளியீடுகளையும் வெளியிட்டுள்ளார். அவரது மொத்த நூற்கள் 29-ல் இலக்கியம் தொடர்புடையன 13 மட்டுமே. அரசியல், சாதியம், சமூகவியல் குறித்து 16 நூற்களை எழுதியுள்ளார். பொதுவாகக் கோ. கேசவனின் திறனாய்வுப் பார்வை முழுக்க அரசியலை மையமிட்டதாக உள்ளது. அரசியல் தவிர்த்து வேறு எதுவுமில்லை; அதுவே வாழ்க்கைக்கு அடித்தளம் என்ற கருதுகோள் அவருக்குஉண்டு. தமிழ் இலக்கியப் படைப்புகளைச் சமூகவியல் நோக்கில் ஆராய்ந்து, அவற்றிலுள்ள வர்க்கச் சார்பை வெளிப்படுத்தும் போது, பண்பாட்டு ரீதியான செய்திகளுக்கு முக்கியத்துவம் தந்துள்ளார். அரசியலை முதன்மை இலக்காகக் கொண்ட கோ.கேசவனின்

பண்பாட்டுப் பார்வையின் பரிமாணங்க்ளைத் தொகுத்து ஆராய்வதே இக் கட்டுரையின் சாரமாகும். அவரது அரசியல் ஆய்வு நூற்கள், இடவரையறை காரணமாகச் சேர்க்கப்படவில்லை.

சமுதாய இயக்கமென்பது தனிமனித ஆளுமையுடன் நெருங்கிய தொடர்புடையது. தனி மனித உருவாக்கத்தில் பண்பாடு ஆழமாகச் செயலாற்றுகிறது. சமுதாயம் கட்டுக்கோப்பான முறையில் ஒருங்கிணைந்து செயற்பட பண்பாடு அவசியமாகும்.பண்பாடானது, கலை, இலக்கியம், சட்டம், மரபு, நீதி போன்றவற்றிலும் தனிமனித மனநிலை, சமுதாய பழக்க வழக்கம் ஆகியவற்றிலும் முனைப்புடன் வெளிப்படுகிறது. தனி மனிதனைச் சமுதாய மனிதனாக்குவதுடன், அவனைச் சூழலுடன் பொருந்தக் கூடியவனாக்குவது பண்பாட்டின் அடிப்படையாகும். தலைமுறைதோறும் தகவல் பரிமாற்றத்தின் மூலம் நுணுக்கமான முறையில் நெருங்கிய உறவினை ஏற்படுத்தும் பண்பாடு, மாற்றங்களுக்கேற்பதகவமைத்துக் கொள்வதின் மூலம் நிலைத்து நிற்கிறது. நல்லது X கெட்டது, அறம் X மறம், ஒழுக்கம் X ஆபாசம் போன்ற எதிர்மறைப் பண்புகளின் முரண்பாட்டில் பண்பாட்டுக் கூறுகள் ஸ்தூலமாக வெளிப்படுகின்றன.

மனித குல வரலாற்றில் 'சொத்துடைமை' காரணமாக மனிதர்கள் இரு வேறு வர்க்கங்களாகப் பிளவுபட்டு முரண்படுகின்றனர். சமுகத்தில் மனித குல வரலாற்றில் 'சொத்துடைமை' காரணமாகமனிதர்கள் இருவேறு வர்த்தகங்களால் பிளவுபட்டு முரண்படுகின்றனர். சமூகத்தில் பொருளாதாரம் அடிக்கட்டுமானமாகவும், கலை, இலக்கியம், பண்பாடு போல்வன மேற்கட்டுமானமாகவும் உள்ளதென மார்க்சிய – லெனினியக் கோட்பாடு பாகுபடுத்தி வரையறுக்கிறது. உடைமை வர்க்கம், உழைக்கும் வர்க்கம் என இரு வர்க்கங்களாகப் பிரிவுபட்டு முரண்பட்டுள்ள மனிதர்களைப்போலவே பாட்டாளி வர்க்கப் பண்பாடு, ஆளும் வர்க்கப்பண்பாடு என எதிரமறையான பண்பாடுகளை மார்க்சியத் திறனாய்வாளர்கள் முன்னிலைப்படுத்துகின்றனர். அரசியல் ஆய்வு நூற்களில் மார்க்சிய ஆய்வு முறையைக்கையாளும் கோ. கேசவன்,பண்பாட்டு ரீதியானவற்றை ஆராய்கையில், அது மேற்கட்டுமானம்என்ற வலுவான கருத்துடன் செயற்பட்டுள்ளார். அவரது தொடக்க கால நூற்களில் இத்தகைய அணுகுமுறை வெளிப்படுகையில், புதிய வெளிச்சத்தில் பண்பாட்டுக் கூறுகள் மின்னின. நாளடைவில் அது ஒற்றையாக மாறி வாசிப்பில் வறட்சியைத் தந்தது. சகல பண்பாட்டுச் செய்திகளுக்கும், கலை இலக்கியப் படைப்புகளின்விமர்சனத்திற்கும் மார்க்சியப் பார்வை மட்டும் போதுமென்றபார்வை, குறுகிய திசை வழிக்கு இட்டுச் சென்று விட்டது.

கோ. கேசவனின் பண்பாட்டுப் பார்வை, முதல் நூலான 'மண்ணும் மனித உறவுகள் ஆழமாக வெளிப்பட்டுள்ளது. சங்ககாலம் பொற்காலம், சங்க இலக்கியம் பண்டைத் தமிழரின் பதிவென புளகாங்கிதமுற்றுப் போலி பெருமை பேசும் போக்கு ஐம்பதுகளில் தமிழில் உச்சமடைந்தது. அது வலுவடைந்து, திராவிட முன்னேற்றக்

கழகம் ஆட்சியைப் பிடிக்க வலுவான பின்புலமானது. தமிழ்ப் பண்பாடு என்ற பெயரின் கீழ்ப் பண்டிதர்கள் புனைந்துரைக்கும் பொய்மையான பெருமை, வரலாற்றியல் பொருள் முதல் வாதம் கற்ற கோ. கேசவனுக்கு எரிச்சலூட்டுகிறது. இட்டுக் கட்டிப் புனையப்படும் தமிழரின் பண்பாட்டுப் பெருமையின் மறுபக்கத்தை ஆதாரங்களுடன் அம்பலப்படுத்துகிறார். தமிழ்ப்பண்டிதர்களின் வெற்று ஆரவார மனநிலைக்கெதிராக முழங்கும் கோ. கேசவனின் கலகக் குரல் வலுவானது. இனக் குழுவாக வாழ்ந்திட்ட தமிழரின் சமுதாயப் பிரச்னைகளையும் பண்பாட்டுக் கூறுகளையும் நுணுக்கமாக விவரிக்கும் கோ. கேசவன், சங்க காலத்திலே 'சொத்துடைமை' காரணமாகப் பண்பாட்டில் தோன்றிய முரண்களையும் பதிவு செய்துள்ளார். இனக்குழுவினரிடையிலான மாடுபிடிச் சண்டை, நாளடைவில் நாடுபிடிச் சண்டையாக மாறிய போது, வேந்தனுக்காகப்போரில் மடிவது வீரமெனப் புகழ்ந்திடும் புலவர்களின் நோக்கம் உள் நோக்கம் கொண்டதாகும். ஏனெனில் புல் வேய்ப்பட்ட வீட்டில், உப்பில்லாது குப்பைக் கீரையை வேக வைத்து உண்ணும் மக்களின் அவலநிலை, தமிழர் பண்பாட்டில் கோ. கேசவனுக்குமுக்கியமானதாக உள்ளது.

வேந்தனுக்கும் புலவனுக்குமிடையிலான உறவில் நிலவிய சமச்சீரின்மையை வெளிப்படுத்துவதன் மூலம் மரபு வழிப்பட்ட கருத்தினைக் கோ. கேசவன் மறுதலிக்கிறார். வேந்தனைத் தெய்வத்துக்கு இணையாக உருவகித்துப் புலவர்கள் உருவாக்கும் பிம்பம், கருத்தியல் ரீதியில் அடிமைப் பண்பாட்டினை விதைப்பதற்கு வழி வகுக்கிறது. சங்க இலக்கியம் பற்றிய ஆய்வில், பண்பாட்டு ரீதியில் கோ. கேசவன் முன் வைத்துள்ள வாதங்கள், இன்றளவும் உயிரோட்டமிக்கனவாக இருப்பது, அவரதுதிறனாய்வுப் போக்கின் செழுமையைக் காட்டுகிறது.

பக்தி இயக்கக் காலத்தில், சமண சங்கத்திற்கு எதிராகப்பொய்மையாகச் சைவர்களால் புனைந்துரைக்கப்பட்ட கட்டுக்கதையே 'தமிழச் சங்கம்' என்ற கோ. கேசவனின் கருதுகோள் அழுத்தமான சான்றுகளுடன் தர்க்க அடிப்படையில் நிறுவப்பெற்றுள்ளது. சங்கம் பற்றிய புனைவு அடித்துச் சிதைக்கப்படுகையில், பண்டைத் தமிழரின் பண்பாடு குறித்து ஆழமான கேள்விகள் இன்றளவும் தோன்றுவது தவிர்க்கவியலாதது. 'மாபெரும்', 'பிரமாண்டம்,' 'உன்னதம்' - போன்றவற்றைத் தொடர்ந்து கேள்விக்குள்ளாக்கியதில் கோ. கேசவனின் ஆளுமை வலுவாக வெளிப்பட்டுள்ளது.

சோழர் காலப் பெருமைகள் குறித்துச் சிலாகிக்கும் பண்டித வரலாற்றாசிரியர்களின் மலட்டுத்தனமான கருத்தியலுக்கெதிராக, அன்றைய கால கட்டத்தில் நிலவிய சமுதாயப் பிரச்னைகளையும் பண்பாட்டுச் சிக்கல்களையும் முன்வைத்து வாதிடும் கோ.கேசவனின் வரலாற்றுப் பார்வை முழுக்க மார்க்சிய - லெனின் அடிப்படையிலானதாகும். சோழர் காலத்தில் ஆழமாக வேரூன்றிய நிலமான்ய அமைப்பு, பண்பாட்டு நிலையில்வருணாச்ரம முறையை ஊக்குவித்தது.

உழைக்கும் அடித்தட்டு மக்களைச் சாதியின் பெயரால் தாழ்த்தியும் அடக்கியொடுக்கியும் அடிமைகாக மாற்றியும் நிகழ்த்தப்பட்ட அடக்குமுறை, சாதி, சமயத்தின் பெயரால் நடந்த பண்பாட்டுக் கொடுமையாகும். பெண்களின் உடல் மீது நடத்தப்படும் அத்துமீறல்களும், தேவரடியார் முறையும், சோழர் காலத்திய பண்பாட்டின் மிக மோசமான பதிவுகளாகும்.

சங்க காலம் பொற்காலம், சோழர் ஏகாதிபத்தியப் பெருமைகள் எனப் பசப்பும் குரல்களுக்கெதிராகப் பொருளியல் பண்பாட்டு ரீதியில் கோ. கேசவன் முன்னிறுத்தும் வாதங்கள், பண்பாட்டை மேற்கட்டுமானமாக அவதானிப்பதின் விளைவாகும்.

• நிலவுடைமைச் சமுதாயத்தில் நிலத்துடன் கட்டப்பட்டிருந்தபள்ளர்களின் வாழ்க்கைக் குறித்த ஆய்வினைப் பள்ளு இலக்கியங்களை மூலமாகக் கொண்டு கோ. கேசவன் செய்துள்ளது வழமையிலிருந்து மாறுபட்டது. பண்பாட்டு ரீதியில் தீண்டத்தகாதவராக ஒதுக்கப்பட்ட பறையர், பள்ளர் போன்றஇனத்தாருடன் சமரசம் செய்து கொள்ளும் நோக்கிலே பள்ளு இலக்கியம் படைக்கப்பட்டது. அதற்கான சமூகத் தேவை நிலவியது எனக் குறிப்பிடுகிறார். பொருளியல் நிலையில் தாழ்ந்தவரான பள்ளர், பண்பாட்டு ரீதியில் எதிர்கொண்ட அவலங்களுக்கான காரணங்களையும், அவற்றிலிருந்து விடுபடுவதற்கான வழிமுறைகளையும் சுட்டியுள்ள கோ. கேசவனின் ஆய்வு, தமிழாய்வில் புதிய வகைப்பட்டதாகும்.

• புராணக் கதைப் பாடல்களை ஆராய்ந்து ஆண்–பெண் உறவுநிலையச் சித்தரிப்பதன் மூலம் 17–ஆம் நூற்றாண்டில் நிலவிய பண்பாட்டினை மீட்டுருவாக்கம் செய்ய கோ. கேசவன் முயன்றுள்ளார்.

புராணக் கதைகளில் மரபு வழிப்பட்ட பாலுணர்வு மீறப்பட்டுள்ளது.பெயர் சுட்டா மரபு சிதைந்து அடக்கியொடுக்கப்பட்ட பெண்களின் நனவிலி மனதின் பாலியல் உணர்வு, புராணக் கதைப்பாடல்களில் வெளிப்பட்டுள்ளது என்ற கோ. கேசவனின் பார்வை, நாட்டார் பண்பாட்டின் மறுபக்கத்தைச் சுட்டுகிறது. "ஆண்களுக்குச் சமுகயதார்த்தத்தின் மீறலாகவும்" அமைந்துள்ள புராணக் கதைகள் "உளவியல் மகிழ்வின் அடிப்படை" என பண்பாட்டு ரீதியில் கோ. கேசவன் தரும் விளக்கம் இன்னும் ஆராயப்பட வேண்டியதாகும்.

. தமிழ்ச்சிறுகதைகளின் உருவத்தைத் திறனாயும் கோ. கேசவன், பெண் பற்றிய சித்தரிப்பில் கு.ப. ராவுக்கும் தி. ஜானகிராமனுக்குமிடையில் உள்ள வேறுபாட்டினைக் கறாராக வரையறுக்கிறார். பெண் மனதின் நுணுக்கங்களை அற்புதமாகச் சித்தரித்துள்ளவை கு.ப. ராவின் படைப்புக்கள் என சிலாகிக்கும் கோ. கேசவன், தி. ஜானகிராமனின் சிறுகதைகள் வணிக அடிப்படையில் சந்தைக்காக உற்பத்தி செய்யப்பட்டவை என கண்டனம்செய்கிறார். பாலுணர்வைக் காசாக்கும் தந்திரத்தின் வரைப்பட்டவை தி. ஜானகிராமனின் சிறுகதைகள் என்ற வரையில் கோ. கேசவனின் பண்பாட்டு உணர்வு புலப்படுகிறது.

மார்க்சிய – லெனினிய அடிப்படையிலான கோ. கேசவனின் பண்பாட்டுப் பார்வையின் சாரத்தைப் பின்வருமாறு தொகுக்கலாம்.

(i) கோ. கேசவனின் பண்பாட்டுப் பார்வை, சமூகப்பொருளாதாரம்–அடிக் கட்டுமானம், பண்பாடு, கலை, இலக்கியம்–மேல் கட்டுமானம் என்ற கருத்தினை உள்ளடக்கியுள்ளது.

(ii) 'சங்கம்' என்பது சைவர்களின் கட்டுக்கதை.

(iii) சங்ககாலம் பொற்காலம், சோழர்களின் ஏகாதிபத்தியம் போன்ற மிகையானவை புனைவுகள் ஏனெனில் மக்கள் பொருளியல்அடிப்படையில் படும் சிரமங்களைப் போலவே பண்பாட்டு அடிப்படையிலும் சிக்கல்களை எதிர்கொண்டனர்.

(iv) வருணாசிரம முறையினால் தாழ்த்தப்பட்ட பள்ளர் இன மக்கள் பொருள், பண்பாட்டு ரீதியில் அடைந்த அவலங்களும் அவர்களுடன் ஆளும் வர்க்கம் பண்பாட்டு ரீதியில் செய்து கொண்ட சமரசங்களும் பள்ளு இலக்கியம் தோன்ற காரணமாகும்.

(v) புராணக் கதைப் பாடல்களிலும், தற்காலச் சிறுகதைகளிலும்பாலியல் சிந்தரிப்பை விளக்குவது, கோ. கேசவனின் பண்பாட்டுப்பார்வையின் கூறாகும்.

(vi) இலக்கியத் திறனாய்வினுக்குக் 'கலை இலக்கியம்', 'பண்பாடு மேற்கட்டுமானம்' என்ற கோ. கேசவனின் மார்க்சியப்பார்வையிலான திறனாய்வுக் கருவி, எல்லா இலக்கியப் படைப்புகளுக்கும் போதுமானதாக இல்லை. மேலும் அவரது திறனாய்வு நூற்கள் முழுக்க ஒற்றைக் கருத்தே கூறியது கூறலாக வருவது வாசிப்பில் வறட்சியைத் தருகிறது.

## துணை நூற்பட்டியல்


1. கேசவன், கோ. மண்ணும் மனித உறவுகளும், சென்னை புக் ஹவுஸ், 1979
2. கேசவன், கோ. பள்ளு இலக்கியம் – ஒரு சமூவியல் பார்வை. சிவகங்கை அன்னம் (பி) லிட்,1981
3. கேசவன், கோ. இயக்கமும் இலக்கியப் போக்குகளும். சென்னை: சென்னை புக் ஹவுஸ் (பி) லிட், 1982
4. கேசவன், கோ. இலக்கிய விமர்சனம், ஒரு மார்க்சியப் பார்வை: சிவகங்கை அன்னம் (பி) லிட், 1984
5. கேசவன், கோ. கதைப் பாடல்களும் சமூகமும். கும்பகோணம்: தோழமை வெளியீடு, 1985
6. கேசவன், கோ. புராணச் சார்புக் கதைப் பாடல்களில் ஆண்பெண் உறவு நிலை திருச்சி: புதுமைப் பதிப்பகம், 1987
7. கேசவன், கோ தமிழ்ச் சிறுகதைகளில் உருவம் சிவகங்கை: அன்னம் (பி) லிட், 1988.

# 29. இன்றைய மகளிர் நிலை - ஓர் ஒப்பியல் ஆய்வு

பூரணி

ஆய்வாளர், தமிழ்த்துறை

புதுவைப் பல்கலைக்கழகம்

## முன்னுரை

இன்றைய மகளிரின் நிலையை நன்முறையில் அறிவதற்காகவேலைக்குச் செல்கின்ற திருமணமான, வேலைக்குச் செல்லாமல்வீட்டிலிருக்கும் திருமணமான, வேலைக்குச் செல்கின்றதிருமணமாகாத, வேலைக்குச் செல்லாமல் வீட்டிலிருக்கும் திருமணமாகாத மகளிர் என நான்கு வகைப் பிரிவுகளாகப்பகுக்கப் பெற்று கள ஆய்வு நிகழ்த்தப் பெற்றது. இக்கள ஆய்வு புதுவை மற்றும் புதுவையைச் சார்ந்த சில கிராமங்களிலிருந்துபெறப்பட்ட செய்திகளை திருமணமான, திருமணமாகாத மகளிர் என பிரித்து இவ்விரு பிரிவுகளையும் ஒப்பியல் நோக்கில் கூறுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## ஒப்பீட்டு நிலையில் அறியத் தக்கவை

நான்கு வகையான மகளிரும் அவரவர் தம் நிலைக்கருதி அதற்குத்தக ஒப்புமைப்படுத்தி அதன் மூலம் ஒப்பாய்வு செய்யப்பெறுகின்றார். அவ்வகையில், வேலைக்குச் செல்கின்ற திருமணமாகாத மகளிர் எனும் இவ்விருவகைப்பட்ட மகளிரின் நிலைகளும், வேலைக்குச் செல்கின்ற திருமணமான மகளிர், வேலைக்குச் செல்லாமல் வீட்டிலிருக்கும் திருமணமான மகளிர் எனும் இவ்விருவகைப்பட்ட மகளிரின் நிலைகளும், வேலைக்குச் செல்கின்ற திருமணமான மகளிர், வேலைக்குச் செல்லாமல் வீட்டிலிருக்கும் திருமணமான மகளிர் எனும் இவ்விருவகைப்பட்டமகளிரின் நிலைகளும், தனித்தனியே ஒப்பாய்வு செய்யப்பெறுகின்றன.

## பொதுநிலை

இந்நிலையில் நான்கு வகைப்பட்ட மகளிரிடம் வினா நிரல்கள். கொடுக்கப்பட்டு அதன் மூலம் தரப்பட்ட வேலைகளில் ஈடுபடுவோரையும் முன்னிறுத்தி அவர்களின் பொதுநிலை எவ்வாறு உள்ளது என்று அறிந்து கொள்ளப் பெறுகின்றன.

### வேலைக்குச் செல்லும், செல்லாத திருமணமாகாத மகளிர் நிலை

வேலைக்குச் செல்லும், செல்லாத திருமணமாகாத மகளிருக்கும் இடையே நிறைய வேறுபாடுகள் இருப்பதைக் கள ஆய்வுத் தரவுகள் காட்டுகின்றன.

**அவையாவன**

1. வேலைக்குச் செல்கின்ற மகளிரின் பேச்சும், செயல் திறனும் வீட்டிலிருக்கும் மகளிரைவிட மேலோங்கியுள்ளன. வேலைக்குச் செல்லும் திருமணமாகாத மகளிர் தங்களின் நிலை குறித்த தன்னுணர்வாலும், வெளியிடங்களில் கிடைக்கும் அனுபவங்களாலும் நன்கு சிந்திக்கின்றதனால் தெளிவாக விடையளிக்கின்றனர்.

2. இம்மகளிர் கூச்ச சுபாவம் குறைந்து, தைரியம் மிகுந்தவர்களாகவும் இருக்கின்றனர்.

3. வேலைக்குச் செல்லும் மகளிரால் முழுமையாகக் குடும்பநிர்வாகத்தில் ஈடுபட முடியவில்லையே என்ற மன வருத்தம் நிறைந்துள்ளது.

4. இவர்கள் சுயமரியாதையும் பாதிப்பும் பெற்றோராய் உள்ளனர்.தேவைகளைத் தாங்களே நிறைவு செய்து கொள்வதால்யாருடைய உதவியையும் இவர்கள் எதிர் பார்த்திருக்க வேண்டியதேவை இல்லை எனும் நிலை

5. இம்மகளிர் துணிவாக இருப்பதால் அடிமைத்தனத்தைத்தகர்தெறியும் ஆற்றலைப் பெறுகின்றனர்.

6. வெளியனுபவம் தெரிவதால் சம உரிமை வேண்டும் என்கின்றனர். இவ்வாறு வேலைக்குச் செல்லும் திருமணமாகாத மகளிரின் நிலை,வேலைக்குச் செல்லாமல் வீட்டிலிருக்கும் பெண்களின் நிலையை விட உயர்வுமிக்கதாய் உள்ளது.

1. வீட்டிலிருக்கும் மகளிர் குடும்பப் பொறுப்பு மிக்கவர்களாக இருக்கின்றனர்.

2. இம்மகளிர் கணவரைத் தேர்ந்தெடுக்கும் முறை பற்றி வினா நிரலின் மூலம் கேட்கப்பட்ட போது கூச்சப்பட்டுக் கொண்டு பதில் கூற வெட்கும் நிலை காணப்படுகிறது. இதன் மூலம் இவர்களின் தெளிவற்ற மனநிலை புலனாகிறது.

3. இம்மகளிர் சமஉரிமை பற்றி எதுவும் கூறவில்லை. நேர்காணலின்மூலம் இவர்களுக்கு வெளியனுபவம் இல்லை. குடும்பம் என்ற அமைப்புக்குக் கட்டுப்பட்டோராய், ஆண்களைச் சார்ந்து வாழ்பவராய், சுய சிந்தனைத்திறன் அற்றோராய் அல்லது உள்ள நிலை தாம் நிலைக்கும் கருத்தை வெளிப்படுத்த அஞ்சுவோராய் உள்ளனர்.

4. இம்மகளிர் பெண் என்ற கட்டுப்பாடுடன், உரிமைகள் குறித்து ஆண்களிடம் வாதிடுவது என்ற நிலையினை விடுத்து ஆடவர்களுக்கு அடங்கி இருப்பது தான் நல்லது என்கின்றனர். காரணங்கள். இவர்கள்ஆடவரைச் சார்ந்து வாழ்வதே என்பதும், இவர்களுக்கான பொருளாதார கருத்து நிலைச் சுதந்திரம் இல்லை என்பதாகும்.

5. வேலைக்குச் செல்லாத மகளிரில் ஐம்பது விழுக்காட்டினர் "அடிமைகளாகவே இருந்துவிட்டால் துன்பமே இல்லை" என்றுகூறுவதன் மூலம் இவர்கள் குடும்பம், சமுதாயச் சிக்கல்களை எதிர்கொள்ள முனைப்பு கொள்ளாதவர் பிரச்சனைகளிலிருந்து தப்பித்துக் கொள்ள முற்படுகின்றனர் என்பதை அறிய முடிகின்றது.

### வேலைக்குச் செல்கின்ற, செல்லாத திருமணமான மகளிர் நிலை

வேலைக்குச் செல்கின்ற செல்லாத வீட்டிலிருக்கும் திருமணமான மகளிரிடையேயும் நிறைய வேறுபாடுகள் இருப்பதைக் கள ஆய்வுத்தரவுகள் காட்டுகின்றன. •

### அவையாவன

1. வேலைக்குச் செல்லும் இம்மகளிர் எதையும் எதிர்த்து சமாளிக்கும் திறனுள்ளவர்களாக இருக்கின்றனர்.

2. இம்மகளிர் சமுதாயத்தில் மதிப்பும், மரியாதையும் வேண்டும் என்ற எண்ணமுள்ளவர்களாக இருக்கின்றனர்.

3. பிறர் உதவியை எதிர்ப்பார்க்காமல் தனித்து வாழும் திறன் பெற்றவர்களாக உள்ளனர்.

4. அலுவலக நிலையில் இம்மகளிர் அதிகாரிகளாகவும், மேல்நிலையில் வேலைச் செய்பவர்களாகவும் இருப்பதால் இவர்களுக்கும் அடிமை என்ற எண்ணம் தகர்த்தெறியப்பட்டு, தங்கள் சமுதாய நிலையில் மேல் நிலைத்தகுதி பெற்றவர்கள் என்ற உயரிய எண்ணமும் எழுந்துள்ளது.

5. இம்மகளிர் ஏனைய ஆடவர்களுடன் மனத்தடங்களின்றிப் பேசும் திறனும், தைரியமும், தரம் கருதியவற்றை அஞ்சாது ஆடவரிடம்விவாதிக்கும் சில நேரங்களில் எதிர்க்கும் ஆற்றலும் பெற்றுள்ளனர்என்று அறிய முடிகிறது.

வீட்டில் இருக்கும் திருமணமான மகளிர் நிலை அவர்களைப் பற்றிய பல்வேறு முடிவுகளை வெளிப்படுத்துகின்றது.

1. தகவலாளி ஒருவரிடம் உங்கள் கணவர் எப்படிப்பட்டவர் என்றுவினா கேட்கப்பட்ட போது அவர் முதலில் தன் கணவர் "குடிகாரர்" என்று பதிலளித்தார். இரண்டு தினங்களுக்குப் பிறகு ஆய்வாளரிடம் கணவரிடம் நான் கூறியதைச் சொல்ல வேண்டாமெனக் கேட்டுக் கொண்டார். இதன் மூலம் இவர்களின் சுதந்திரம் கணவனால் பெரிதும் கட்டுப்படுத்தப்படுகிறது என்ற எண்ணம் புலனாகிறது.

2. குடும்ப நிலையில் சிறப்பிடம் பெற்ற இவர்கள் "கணவனே தெய்வம்" என்ற எண்ணம் உள்ளவர்களாக இருக்கின்றனர்.

3. இம்மகளிருள் படித்த இல்லதரசிகளும் சிலர் குடும்பத்திடமோ கணவனிடமோ மன வேறுபாடுக் கொள்ளாமல் அடிமைகளாகவேஇருந்துவிடுவது

மேல் என்று கூறுவது இங்கு நினைவுக்கூறத்தக்கதாகும்.

4. இம்மகளிர் தம் கணவனின் இல்லப் பொருளாதாரபற்றாக்குறையின் காரணமாகவே வேலைக்குச் செல்ல வேண்டும்என்று எண்ணுகிறார்களே தவிர வேலைக்குச் செல்லவேண்டும்என்று விரும்புவது குறைவே.

5. இன்னும் சில கிராமங்களில் மகளிர் தங்களுக்கு விதிக்கப்பட்ட விதிப்படியே வாழ்க்கையை நடத்துவதை வேதமாகக்கொண்டுள்ளனர். இந்த நிலை இவர்களும் ஒரு விதத்தில் கோழைகளாகவே இருப்பதைக் காட்டுகின்றது.

## வேற்றுமைகள்

வேலைக்குச் செல்கின்ற மகளிர் அதிகம் படித்தவர்களாகவும், வேலைக்குச் செல்லாதவர்கள் குறைந்த படிப்பறிவு உள்ளவர்களாகவும் இருக்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

வேலைக்குச் செல்பவர்கள் தங்கள் தேவைகளைத் தாங்களேநிறைவு செய்துக் கொள்கின்றனர். ஆனால் இம்மகளிர் தேவை, நிறைவு செய்யும் உதவிகளைப் பிறரிடம் தயங்காது கேட்டுப்பெறுகின்றனர் என்று அறிய முடிகிறது.

வேலைக்குச் செல்பவர்கள் கூறுவது வீட்டைச் சுத்தமாகவைத்திருக்க, சமையல் செய்ய, மதிய நேரத்தில் படுத்துறங்கநேரமில்லை என்று குடும்பம் சார்ந்த அவர்தம் ஆதங்கங்களை வெளிப்படுத்துகின்றனர். இம்மகளிரால் அலுவலகங்களிலும் குடும்பத்திலும் கவனம் செலுத்த முடிகிறது என்ற உண்மை குறிப்பிடத்தக்கது.

## முடிவுரை

இக்கட்டுரையில் நான்கு வகையான மகளிரிடையே காணப்படும் போது நிலைகளையும், அவர்களின் மன நிலைகளையும் எடுத்துக்காட்டி அவர்களுக்கிடையே உள்ள வேற்றுமைகளும் தொகுத்துக் கூறப் பெற்றுள்ளன.

இந்த ஆய்வின் வழி திருமணமானவராக இருப்பினும், ஆகாதவராக இருப்பினும், வேலைக்குச் செல்கின்ற மகளிர் ஓரளவிற்கேனும் தங்களுடைய நிலை ய உணர்ந்து உயர்வான மாற்றங்களுக்குத் தயாராக உள்ளனர் என்பது பெறப்படுகின்றது.

அதே வேளை வீட்டிலிருக்கும் மகளிர், பிறர் உதவியைச் சார்ந்தும் ஆடவரைச் சார்ந்தும் தொடர்ந்து இருக்கவேண்டிய நிலையில் தங்களுக்கு உயர்வான மாற்றம் எதுவும் தேவையில்லை என்ற கருத்துடையோராக உள்ளனர் என்பதும் இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

இவ்வகையில் நான்கு தரப்பட்ட மகளிரும் தங்களின் அடையாளம் குறித்த சிந்தனைகளின் பல்வேறு போக்குடையவர்களாக உள்ளனர்என்பது பெறப்படுகின்றது.

# 30. மங்கையர் மலரில் மொழிநடை

*மு. மகாலெட்சுமி*
முனைவர்பட்ட ஆய்வாளர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

## மொழி

"ஒரு மொழியின் அடிப்படைக்கூறு ஒலிகளாகும். ஒலிகள் மொழியாகக் கருதப்படுவதில்லை. ஒலிகள் இணைந்து சொல்லாகி, அச்சொற்களும் வரன்முறையாக அமைந்து பொருண்மையை உணர்த்தும் போது மட்டுமே மொழியின் தன்மையைப் பெறுகின்றன. இவ்வாறு உருவான மொழி மாந்தர் இனத்தின் செய்தித் தொடர்புச் சாதனமாகப் பயன்படுகிறது (1)" என்பர் தங்க.மணியன்.

## மொழிநடை

"மொழியியல் என்பது மொழியை விளக்கி, அது செயல்படும்வகையினை வெளியிடும் ஓர் அறிவியல் சார்புடைய கலையாக வளர்ந்து வருகிறது. மொழியியலின் ஒரே கூறே மொழிநடை இயல். இது மொழியைப் பயன்படுத்தும் முறை வேறுபாட்டைக் குறிப்பாகக் காட்டும் தன்மையது (2)" என்பர்.

## நடை

இலக்கிய உலகில் மிகுதியாகப் பயின்று வரும் ஒரு சொல் நடை.நடை என்பது அன்றாட வாழ்க்கையில் செல்லும் செலவிற்கும்ஒழுக்கத்திற்கும் பெயராக வழங்கப்படுகிறது.

அறிஞர் முர்ரே என்பவர் "நடை என்பது ஓர் ஆசிரியரின் தனித்தன்மையை வெளிப்படுத்தவல்லது. அவரை இனங்கண்டு கொள்ளும் வகையில் அவருக்கே உரித்தாக இருக்கும் வெளிப்பாட்டு மொழிப்பாங்கே அது. இலக்கியத்தில் அதுவே மிகப்பெரிய சாதனை (3) " என்று தெளிவுபடுத்துகின்றார்.

"அழகிய செஞ்சொற்களால் இனிமையாகவும் எளிமையாகவும் நுட்பமாகவும் கருத்தினை உணர்த்த வல்லதே சிறந்தநடையாகும் (4) " என்றும், "நடையானது ஒருவனுடைய உணர்திறனையும், உள்ளத்திறனையும் நன்கு புலப்படுத்தும் (5) " என்றும் சுட்டுவர்.

## நடையியல் உத்தி

"ஒரு படைப்பின் சிறப்புக்கு அதனுள் பயன்படுத்தப்படும்சொற்களும் இன்றியமையாத காரணங்களாகின்றன. சொற்களின் தேர்வு, பயன்படுத்தும் முறை, புதியனவற்றை ஆக்கும் திறமை, புதிய பொருள்களை ஏற்கும் திறமை முதலியவை இன்றியமையாத நடையியல் உத்திகளாகும் (6)"

"இன்றைய நாளிதழ்கள் ஆக்கச் செய்திகளைக் (Constructive)காட்டிலும் அழிவுச் செய்திகளுக்கே (destructive) முக்கியத்துவம் தருகின்றன(7) "

எடுத்துக்காட்டாக,

பள்ளிக்கூடம் இடிந்து விழுந்ததால் ஐந்து–சிறுவர்கள் இறந்ததைப் படங்களுடன் வெளியிடும் நாளிதழ் புதிய பள்ளிக்கூடத் திறப்புவிழாவைப் பற்றி பத்து வரிகளோடு நிறுத்தி விடுகிறது.

## மகளிர் இதழ்களில் மொழிநடை

இதழ்கள் அனைத்தும் செய்தினைச் சொல்வதையே தமதுநோக்கமாகக் கொண்டுள்ளமையால், அச்செய்திகள் எளிதில் மக்களால் உணர்ந்து கொள்ளக்கூடிய வகையில் சொல்லப்பெறும் விதிமுறைகளே இதழ்களுக்குரிய நடைகளாகக் கருதப் பெறுகின்றன.

இன்று வெளிவருகின்ற மகளிர் இதழ்களில் பல்வேறு பகுதிகளில், வெவ்வெறு தலைப்புகளில் உள்ள செய்திகளில் ஆங்கிலச்சொற்களும் பிறமொழிச் சொற்களும் இடம் பெறுகின்றன. ஆனால் நடையானது. எளிமையாகவும், பேச்சு மொழியாகவும் சிந்தனையைத் தூண்டக் கூடியதாகவும், உவமையைக் கையாண்டும் அமைந்துள்ளன.

## மங்கையர் – மலர்

பெண்கள் முன்னேற்றம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்ட மங்கையர் மலர் இதழ்களில் வரும் செய்திகள் அனைத்தும், பலரின்முயற்சியால் உருவான ஒரு தொகுப்பாகையால் குறிப்பிட்டஒருவரின் நடையைக் காண்பதரிது.

## நடையின் வகைகள்

"டோஸ் என்ற மேனாட்டுத் திறனாய்வாளர், ஆசிரியர், காலம்,நோக்கம், கருத்து, இடம், மக்கள் முதலியவற்றால் நடையமைப்பு வேண்டும்"(8) என்ற கருத்தை வெளியிட்டுள்ளார். இனி மங்கையர் மலரின் நடை வகையினை இக்கட்டுரையில் காணலாம்.

## மங்கையர் மலரில் நடை வகைகள்

1. எளிய நடை
2. இலக்கிய நடை
3. உவமை நடை
4. உணர்ச்சி நடை
5. வருணனை நடை
6. விளக்க நடை
7. சிந்தனை நடை
8. கட்டுரை நடை
9. வினா–விடை நடை
10. பேச்சுமொழி நடை
11. பாத்திர நடை போன்றவையாகும்.

## எளிய நடை

திருமணச் சடங்குகள், கன்னிப் பெண்களுக்கு விரைவில் திருமணம்கூடி வருவதாகச் செய்யும் பூசை, பெண்கள் உடல்நலம் பற்றிய நம்பிக்கைகள், காலம் நேரம் கனவுகளில் நம்பிக்கை, கடவுள் வழிபாடு, விதவை, துக்கிரி, பீடை,

எனப்படுவோர் தொடர்பாக உள்ள நம்பிக்கைகள் முதலியன மக்களிடம் காணப்படுவதை எளிய நடையில் விவரித்துள்ளது. மேலும், சிறுகதைகள் மூலம் வாழ்க்கைக்கு தேவையான பல நல்ல கருத்துகள் வலியுறுத்தப்படுகிறது.

"படைப்பாளன் தான் கூறவந்த செய்தியை எந்த அளவிற்குச் சரியான எளிய சொற்களைப் பயன்படுத்தி கருத்தினைதெளிவாகச் சொல்கிறானோ அந்த அளவிற்கு அது சிறந்ததாகக்கருதப்படும்" (9) என்று ந. பிச்சமூர்த்தி கூறுகிறார்.

## இலக்கிய நடை

இலக்கிய நடை என்பது தெளிந்த நீரோடை போன்றது. கற்பார்க்கு எளிதில் பொருள் தந்து தன்னளவில் சிறப்புற்றுத் திகழும். மொழிபெயர்ப்புக் கதைகள் பிற தேசத்துக் குட்டிக்கதைகள், உலக புகழ்பெற்ற சிறுவர் கதைகள் சிறுவர் எழுதிய கதைகள், கட்டுரைகள் போன்றவற்றில் இலக்கிய நடையைக் காணலாம்.

சுற்றுலா போட்டியில் 'நான் சுற்றுலா போன போது' என்ற கட் டுரையில், மாலையில் திரும்பிவிடலாம். அருவிக் கரையை மட்டுமல்லாது அருகில் உள்ள சுகவாசஸ்நலமான ஆல்வாய், யாத்திரைத் தலமான அவிகாமாலி இடங்களையும் சுற்றுப் பயணத்தில் இணைந்துக் கொண்டால் புண்ணிய உலாவாகவும் அமைந்து விடுமன்றோ" (10) என்று அமைந்துள்ளது

## உவமை நடை

உவமை என்பது ஒன்றனோடு ஒன்றை ஒப்பிடுவதே. அதாவது இரு வேறுபட்ட பொருட்களை ஒப்பு நோக்கி காட்டுவதன் மூலம், தொடர்புடைய சொற்களின் பொருளாற்றலை மிகுதிப்படுத்துவது உவமையின் தன்மையாகும்.

'கூனல்' என்னும் சிறுகதையில்,

"ஏதோ தேடக்குனிந்தவள் நிமிர மறந்து விட்டாற் போல ........ கைகளை மார்போடு கட்டிக் கொண்டிருந்தாள், தொய்வாகவிட்டிருந்தால் நான்கு கால் ஐந்து போலத் தோன்றும் ....." (11) என்ற இப்பகுதியில்,

கூனல் என்பது உருவத்தில் அல்ல. மனதில் இருக்கக்கூடாதுகஷ்டங்கள் பல இருப்பினும் கணவனையும், பிள்ளைகளையும் குடும்பத்தலைவியானவள் கவனிக்க வேண்டும் என்பதை சமூகத்திற்கு இக்கதை மூலம் கூறப்படுகின்றது.

## உணர்ச்சி நடை

தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய பேராசியர், 'மெய்ப்பாடுஎன்பது பொருட்பாடு. அத்தாவது உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுத்துவோர் ஆற்றான் வெளிப்படுத்துதல்" (12) என்பர்.

"ஏன் பூலான்தேவியாக மாறக்கூடாது" என்ற தலைப்பில் இடம்பெற்ற ஒரு பெண்ணின் உணர்ச்சிக் குரல்

"பெண்களுக்கு இந்தச் சமூகத்தில் பாதுகாப்பே இல்லை. எங்களைப் போன்ற கல்லூரி மாணவிகளை சரளைக்கல் ஏற்றிச் செல்லும்லாரிக்காரன் கேலிச் செய்வதைக் கேட்கும் போது ரொம்பவும்அவமானமாக இருக்கிறது. அதே போலப் போகும் இடங்களில் கி ண்டல் பேச்சு, இத்தனை படிப்பு, தெளிவு இருந்தும் பெண் என்பதால் கேலியா? நாங்கள் எல்லாம் ஏன் பூலான்தேவியாகமாறக்கூடாது?" (13) என்பதன் வழி இன்றைய சமுதாயத்தில் பெண் களின் அவலநிலையை உணரமுடிகிறது.

## வருணனை நடை

படிப்போர்க்கு ஆர்வத்தையும் உற்சாகத்தையும் தட்டி எழுப்பும்ஆற்றல் வருணனைக்கு உண்டு. நோக்குவோன், நோக்கப்படும் பொருள் ஆக் இவ்விரண்டும் வருணனையின் அடிப்படை எனலாம்.

'இனி ஓடுவதில்லை' எனும் சிறுகதையில் பெண்ணை, "மெருகிட்ட பொன்விளக்காய் பின்னுவது அவள் தப்பல்ல, வளைவோடு உயரம்,பம்பென்று அடர்ந்த கூந்தல், செதுக்கிய முகம், அகன்ற விழிகள் .... " இது போன்ற வருணனை மங்கையர் மலரில் ஒரு சில கதைகளில் மட்டுமே இடம் பெறுகின்றது.

## விளக்க நடை

"விரித்த உத்திகளைப் பெரிதும் கையாண்டு எடுத்துக் கொண்ட பொருளை விளக்கமாகச் சொல்லப் பயன்படுகிறது" (14)

"நோயில்லாமல் வாழலாம்" என்ற தலைப்பில், "கறிகாய்களில் இயற்கையாகவே உப்புச்சத்து உள்ளது". ஒரு நபருக்கு ஒருநாளைக்கு ஐந்து கிராம் உப்பு போதுமானது ..... (15)

இக்கட்டுரையில் மக்கள் நலன் பற்றி விளக்கப்படுவதால் படிக்கின்ற வாசகர்கள் தங்களை நோயிலிருந்து காப்பாற்றிக் கொள்ள பெரிதும் உதவுகிறது.

## சிந்தனை நடை

ஆசிரியர் தமது சொந்தக் கருத்தை முழுமையாகத் தெரியும்வகையில் எழுதப் படுவது சிந்தனை நடை.

"வரதட்சணை, சீர்செனத்தி என்று எதையுமே பெண் வீட்டாரிடம் கேட்காமல் இருத்தல் முதல் விஷயமாகும் ....." (16)

இந்நடை 'பெண்டிர் மனது வைத்தால்' எனும் தலைப்பில் அமைந்துள்ளது. இவற்றில் பெண்களால் ஏற்படும் பிரச்சனைகளைச் சுட்டிக்காட்டி, ஒவ்வொரு பெண்ணும் தங்களால் பிரச்சனைகள்ஏதும் ஏற்படாது செயல்பட வேண்டும் என்ற கருத்தைப் பெண்கள் நலன் கருதி இக்கருத்து கூறப்பட்டுள்ளது.

## கட்டுரை நடை

இந்நடை எடுத்துக் கொண்ட பொருளை மட்டுமே கூறிச் செல்லும்மற்றும் கருத்துக்கள் துல்லியமாகவும், மயக்கம் தராத சொற்களும் அமைந்திருக்கும்.

வாழும் மகான்கள் எனும் தொடர் கட்டுரையில் 'சுட்டும் சுடர் விழிகள்' என்னும் பகுதியில்,

"உங்களால் இயன்றவரை அடுத்தவருக்கு உதவுங்கள். உங்கள் ஓய்வு நேரத்தை பலன் எதிர்பாராமல் தொண்டு செய்யப் பழகுங்கள் ....." (17) என்று சுட்டப்பட்டுள்ளது.

இதில் நீண்ட தொடர்கள் தவிர்க்கப்பட்டுள்ளன. மற்றும்சமுதாயத்திற்கு வழிகாட்டியாக பல அறக்கருத்துக்கள் கூறப்படுகின்றன.

## வினா-விடை நடை

இந்நடையினை படித்தால் நாமே நேரில் பேசிக் கொள்வதுபோல ஒரு உணர்வை ஏற்படுத்தும்.

வினா – "இப்பச் சொல்லுங்க என்ன விஷயம்"?
விடை – சோகம்
வினா – அப்படி என்ன சோகம்?
விடை – சொல்றேன்" (18)

## பேச்சுமொழி நடை

"இயல்பு வாதத்திலும், யதார்த்தக் கண்ணோட்டத்திலும் இலக்கியங்களைப் படைத்தளிக்கும் பொழுது அவர்களுடைய பேச்சுமொழியைக் கையாளுவது இலக்கிய கலைத்திறனை மிகுதிப்படுத்தும்என்பதாலும் மக்கள் இலக்கியத்தை மக்கள் மொழியில் படைக்கவேண்டும் என்ற காரணத்தாலும் பேச்சுமொழியைக் கையாளுகின்றனர்" (19)

'சக்தி' எனும் சிறுகதையில்,

"சரி ... கிளம்பு .... ஆபிஸ் போகலாம் ... "
இல்லேப்பா ... நீங்க போங்க ... "
நீ "அரைநாள் லீவு ... தோழிக்குப் பிறந்த நாள் ....போய்விட்டு
மதியம் வந்துடறேன்" (20)

## பாத்திர நடை

'பெண்டிர் மனது வைத்தால்' எனும் தலைப்பில், "யார் அந்த சிவப்பு நெக்லஸ் மாமியா, "அவள் தான் மாமியார் போலிருக்கு, அந்த நீலப்புடவைக்காரியைப் பார்த்தாயோ, முஞ்சியிலே எள்ளும், கொள்ளும் வெடிக்கிறதே, அவள் தான் நாத்தனார் போலிருக்கு" (21) என்பதில் இன்றைய சமுதாயத்தை அப்படியே எடுத்துக் காட்டப்படுகின்றன.

மேற்குறிப்பிட்ட நடைகளை மங்கையர்மலர் கையாளுவதால் மகளிர் இதழ்களில் முதல் நிலையைப் பெற்றுள்ளது. இந்நடையினால்மக்களுக்கு பல அரிய, சிறந்த கருத்துக்களைக் கூறுகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. தங்கமணியன், பத்திரிகை மொழிநடை, ப.59
2. G.W.Turner, STYLISTICS, P.7
3. J.Middleton Murry, The Problem of style P-8
4. ம.செ.இரபிசிங், அண்ணாவின் மொழிநடை ப.6
5. மேலது ப.6
6. ஜெ. நீதிவாணன், நடையியல் ப.46
7. இராசா இதழியல் ப.18
8. ம.செ.இரபிசிங், அண்ணாவின் மொழிநடை ப.9
9. ந.பிச்சமூர்த்தி, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும்ப.104
10. மங்கையர் மலர், ஏப்ரல் 1994. ப.24
11. மேலது, பிப்ரவரி 1991. ப.35
12. தொல்காப்பியம், பொருளதிகாரம், பேராசியர் உரை. ப.3
13. மங்கையர் மலர், மே.1994. ப.72
14. ஜெ.நீதிவாணன், நடையியல். ப.142.
15. மங்கையர் மலர், ஆகஸ்டு. 1993. ப.46
16. மேலது, ஜுலை 1994, ப.19
17. ஜெ.நீதிவாணன் நடையியல். ப.141
18. மங்கையர் மலர், மே.1993, பக் 86–89
19. ஆறாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, ப.81
20. மங்கையர்மலர். மே.94. ப.96
21. மேலது, ஜுலை 1994, ப.19

# 31. இலக்கிய வகைகளின் வளர்ச்சியில் மொழி பெயர்ப்பின் பங்கு

*முனைவர். இரா. காஞ்சனா*
தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

## மொழி பெயர்ப்பு கலையா? அறிவியலா?

மொழி பெயர்ப்பு படைப்பாக்கச் செயல் திறன்களைக்கொண்டதா அல்லது அதற்கும் கீழானதா என்ற வினாக்களுக்கெல்லாம் அப்பாற்பட்டு, இன்றைய ஒப்பிலக்கிய மாணவனுக்குமொழி பெயர்ப்பு சிறந்த ஆய்வுக்களமாகத் திகழ்கிறது. ஒரே படைப்பின் பல்வேறு மொழி பெயர்ப்புகளை ஒப்பிட்டு ஆய்வது,மொழி பெயர்ப்புகள் இலக்கியப் படைப்பாளிகளிடம் ஏற்படுத்தியதாக்கத்தை ஆய்வது, ஒரு குறிப்பிடட் வெளிநாட்டுப் படைப்பாளிகளிடம் ஏற்படுத்திய தாக்கத்தை ஆய்வது, ஒரு குறிப்பிட்ட வெளிநாட்டுப் படைப்பாளியை உள்நாட்டு வாசகர்கள் ஏற்பதற்கு எவ்வாறு மொழி பெயர்ப்பு காரணமாக அமைகிறதுஎனக் காண்பது, இலக்கியப் போக்குகளில் பிறநாட்டு இலக்கியவகைகளின் மொழி பெயர்ப்புகள் எவ்வாறு மாற்றத்தை ஏற்படுத்தின எனக் காண்பது, இலக்கிய வகை வளர்ச்சிகளில் மொழி பெயர்ப்பின் பங்கு-என மொழி பெயர்ப்பு என்ற களம் பல்வேறு வீச்சுகளில், நோக்கு நிலைகளில் ஒப்பிலக்கிய ஆய்வுகளுக்குஇடம் அளிக்கிறது.

தமிழில் நாவல், நாடகம், கவிதை ஆகிய இலக்கிய வகைகளின் போக்குகளில் மாற்றத்தை ஏற்படுத்தி வளர்ச்சிக்கு உறுதுணையாக மொழி பெயர்ப்புகள் அமைந்துள்ளமையை இக்கட்டுரை எடுத்துரைக்கிறது.

## நாவல் இலக்கிய வகை வளர்ச்சியில் மொழி பெயர்ப்பின் பங்கு

நாவல் இலக்கிய வளர்ச்சி வரலாற்றை எழுதிய கி.வ. ஜகந்நாதன், (தமிழ் நாவலின் தோற்றமும் வளர்ச்சியும்), சிட்டி சிவபாதசுந்தரம் (தமிழ் நாவல் – நூற்றாண்டு வரலாறும் வளர்ச்சியும்), கைலாசபதி (தமிழ் நாவல் இலக்கியம்) நோத்தாத்திரி போன்ற பலரும் ஆரம்பகால நாவல்கள்மொழி பெயர்ப்புகளாக, போன்மை யாக்கங்களாக, தழுவல்களாக, அமைந்தமையைச் கட்டுகின்றனர்.

தமிழ் நாவல்களின் போக்கை மாற்றி அமைத்த பெருமை வங்க நாவல்களுக்கு உண்டு. வங்கக் கதைகளை மொழி பெயர்த்துதொடர்கதை களாகவும், மொழி பெயர்ப்பு நாவல்களாகவும் அன்றைய இதழ்கள், வாரப் பத்திரிகைகள் வெளியிட்டன. 1930–க்குப் பின்னரே வங்க நாவல்கள் தமிழாக்கம் செய்யப்பட்டன எனினும்பக்கிம் சந்திர சட்டோபாத்யாவின் “ஆனந்த மடம்” எனும் நாவலை ட. குப்புசாமி ஐயர் (மகேச குமார சர்மா என்ற புனைபெயரில்) முதலில்

மொழி பெயர்த்தார். இதே நாவலின் ஆங்கிலமொழி பெயர்ப்பிலிருந்து தமிழாக்கித் தந்தார் திருச்சிற்றம்பலம் பிள்ளை (சிட்டி –சிவபாத சுந்தரம் – ப. 153) பின்னர் த.நா. குமாரசாமியும், கு.ப. ராஜகோபாலும் இந்த நாவலை மொழிபெயர்த்துள்ளனர்.

இவ்வாறு ஒரே படைப்பு பல மொழி பெயர்ப்பாசிரியர்களால்ஒரே மொழியில் மொழி பெயர்க்கப்படும்போது இம்மொழி பெயர்ப்புகளில் ஒப்பீடும் கூட ஆய்வுக்களமாகிறது. ஒன்றுக்குமேற்பட்ட மொழி பெயர்ப்பு ஏன் தேவையாகிறது?

தனக்கு முன்னே மொழி பெயர்த்தவர்களின் மொழி பெயர்ப்பில் போதாமையை உணர்ந்தபோது, முழுமையற்ற நிலையை உணரும்போது, நிறைவான மூலத்தைப் போன்ற ஒன்றைத்தர வேண்டும்என்ற நிலை ஏற்படும் போது ஒரே நூலுக்குப் பல மொழிபெயர்ப்புகள் ஏற்படுகின்றன.

வங்க நாவல்கள் மொழி பெயர்ப்பாக வந்த பொழுது வாசகர்களால் பெரிதும் வரவேற்கப்பட்டமையான் தொடர்ந்துசரத்சந்திரர், தாகூர், விபூதிபூஷன் பானர்ஜி முதலியோர் நாவல்களும் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டன. த.நா. குமாரசாமி, தா. சேனாதிபதி, டி.எஸ். பார்த்தசாரதி, வி.எஸ். வெங்கடேசன், சரஸ்வதி ராம்நாத், குமுதினி போன்றோர் இம்மொழி பெயர்ப்பில் ஈடுபட்டவர்கள்.

## தமிழில் பெயர்க்கப்பட்ட வங்க நூல்கள்

பக்கிம் சந்திரரின் 'பரிமளா' நாவலை டிவி. கிருஷ்ணசாமி சாஸ்த்திரி (1907) யும் 'சந்திரசேகரன்' நாவலை ம. குப்புசாமி ஐயரும் (1908) 'துர்கேச நந்தினி'யை டி.வி. வெங்கடரதாசாரியும், (பின்னர் கு.ப.ரா.வும்) 'ஜோடி மோதிரங்களை' வரா.வும் ஆனந்தமடம், விஷ விருஷம் ஆகிய தேசிய உணர்வு கொண்ட நாவல்களை த.நா. குமாரசாமியும் மொழி பெயர்த்தனர். பக்கிம் சந்திரரின் தேசிய உணர்வு கொண்ட நாவல்களின் மொழி பெயர்ப்புகள், அத்தகைய தேசிய உணர்வுடன் கூடிய தமிழ் நாவல்கள் தோன்றக் காரணம் ஆயின.

**தாகூரின் படைப்புகள்:** தாகூரின் படைப்புகள் அனைத்தையும் த.நா. குமாரசாமி தமிழில் அளித்துள்ளார். இத்துடன் த.நா.கு. பாலாயி சந்த், முகோபாத்யாயா, தாராசங்கர் பானர்ஜி சந்தோஷ்குமார் போஷ், ராகுல்தாஸ் பானர்ஜி போன்ற வங்கப் படைப்பாளிகளின் படைப்புகளின் பலடைப்புகளையும் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

**சரத்சந்திரரின் படைப்புகள்:** சரத்சந்தர சட்டோபாத்யாயாவின் 42 படைப்புகளையும் தமிழில் பெயர்த்து அளித்த பெருமை அ.கி. ஜெயராமனுக்கு உண்டு. சண்முகசுந்தரம் சரத்சந்திரரின் படைப்புகளைத் தமிழில் பெயர்த்ததுடன் பக்கிம் சந்திரர், ரமேஷ் சந்திரதத், தாராசங்கர் பேனர்ஜி போன்றோரின் நாவல்களையும் தமிழில் பெயர்த்துள்ளார்.

**வங்க நாவல் மொழி பெயர்ப்பின் விளைவுகள்:** தமிழில் வந்த வங்க நாவல்கள் தமிழில் ஆழமான தடங்களைப் பதித்துள்ளன. ஏற்பு என்ற நிலையில்

காணும் போது, இவ்வாறு மொழி பெயர்ப்புகள் தமிழில் வரவேற்றுப் படித்தமையைக் கி.வா.ஜ. குறிப்பிடுகிறார்:

"ஒரு பத்திரிகையில் ரவிந்திரர் நாவலும், வேறொருபத்திரிகையில் பக்கிம் சந்திரரின் நாவலும், மற்றொன்றில் சரத் சந்திரர் நாவலும் போட்டி போட்டுக் கொண்டு தொடர்கதையாக வந்தன. அவற்றை வாசகர்கள் ஆர்வத்துடன் வாசித்து இன்புற்றார்கள்." இது ஏற்பு என்ற நிலையில் மொழி பெயர்ப்பின் விளைவைச் சுட்டுகிறது. இத்தகைய வாசகர் ஏற்புக்கு என்ன காரணம் என விளக்குகிறார் செ. யோகநாதன் (வங்காள நாவல்கள் தமிழ் நாவல்களில் ஏற்படுத்திய தாக்கம் சிந்தனை, மலர் 3. ப-1)

வங்கப் பண்பாடு, நாகரிகம், உணவுப் பழக்க வழக்கங்கள் போன்றன தமிழ்ப்பண்பாட்டுடன் பெருமளவு ஒத்துப்போவதையே முதற்காரணமாகச் சுட்டும் இவர், கூட்டுக் குடும்பம், தகப்பனே குடும்பத்தின் தலைவனாக இருத்தல், திருமணம், சாவு போன்ற நிகழ்வுகளில் பின்பற்றப்படும் வைதிகச் சடங்குகள், உணவு முறை ஆகியன ஒன்றுபட்டு இருப்பதும்,பொதுவான உணர்வு பூர்வமான மனப்பான்மைகள் ஒன்று போல இருப்பதும் காரணங்கள் ஆகும் என்கிறார்.

வங்க நாவல்களில் மிகை உணர்ச்சி, புனவியல்தன்மை, மத்தியதர வர்க்கத்தினரின் அன்றாட வாழ்க்கைப் பிரச்சனைகளைப்பேசுவது. வாழ்க்கைப் பிரச்சனைகளுக்கு முடிவுகளைச் சுட்டுவது,கதைக்கு முக்கியத்துவம் அளிப்பது, போன்ற கூறுகள் தமிழ்வாசகர்களுக்கு ஏற்றதாக இருந்ததாகவும் விளக்குகிறார் செ. யோராஜா. இம்மொழி பெயர்ப்புகள் தமிழ் நாவல்களில் போக்குமாற்றியமை

இதனைச் செல்வாக்கு, தாக்கம், விளைவு என்ற பல நிலைகளில் வளர்ச்சியாகக் காணலாம்.இந்நூற்றாண்டில் முதல் இருபது ஆண்டுகளில் மொழி பெயர்ப்புகளாகத் தமிழுக்கு வந்த நாவல்கள் அதிகம். குறிப்பாகவந்த நாவல்கள் அதிகமாக மொழி பெயர்க்கப்பட்டன. இதன் காரணமாகத் தமிழ் நாவல்களின் போக்குகளும், உள்ளடக்கமும் மட்டுமின்றி நாவலாசிரியர்களும் வாசகர்களும் கூடப் பெரிதும் பாதிக்கப்பட்டனர்.

ஆரம்பகாலத்தமிழ் நாவல்களான பத்மாவதி சரித்திரம், கமலம்பாள் சரித்திரம், தீனதயாளு போன்றன ஓரளவு யதார்த்தமும் ஓரளவு புனைவியல் போக்கும் கொண்டிருப்பன. ஒரே மாதிரியான மர்ம நாவல்களின் வரவும் வாசகர்களிடம் சோர்வு, மனப்பான்மையை ஏற்படுத்திய கால கட்டத்தில் வங்க நாவல்களின் பெயர்ப்புகள் வர அவை பெரிதும் ஏற்கப்பட்டன.காரணம் அவற்றின் உள்ளடக்கம், தமிழ் வாசகனுக்கும் ஏற்றதாக, அவன் தன்னையும் தன் பிரச்சினைகளையும் நாவலில் வரும் பாத்திரத்துடனும் நிகழ்வுடனும் ஏற்றிக் காண்பதற்கு ஏற்ப அமைந்திருந்தது எனலாம்.

நாவல் படைப்பாக்கத்தை ஊக்குவிக்கும் பொருட்டு கல்கியவர்கள் ஆனந்தவிகடனின் ஆசிரியராக இருந்தபோது முதல் நாவல் போட்டியை அறிவித்தார். அதற்கு வந்த கதைகளைக் கண்டு மனம் நொந்த கல்கி, ஏன் இவ்வாறு ஒரு போட்டியை அறிவித்தோம் என்று மனம் புழுங்கினாராம்.

"காதலர்கள் – கள்ளக் காதலன் – ஸ்திரீ சோரங்கள், கொலைகள், களவுகள், துப்புத்துலக்கங்கள், தூக்கு மேடைகள், சித்திரவதைகள் – சிருங்காரப் பயங்கரங்கள் சிங்கத்தின் உருவத்தில் மனிதன் பிறத்தல் பிரேதங்கள் பிழைத்து எழுதல் பிழைத்திருப்பவர் பிரேதமாதல் – ஆகிய அந்துஷ்டிகரமான விஷயங்கள் குறித்து". கதைகள் வந்தமை கண்டு வருந்திய நிலை அக்காலகட்டத்து நாவலாசிரியர் தரம், வாசக ரசனை ஆகியவையும் கூட வளராத நிலையையே சுட்டுகிறது. நாவல் இலக்கிய வகை வேரூன்றாத நிலையில் பத்திரிகைகள் போட்டி வைத்து வளர்க்க எண்ணியதையும் இது சுட்டுகிறது.

இப்போக்கிலிருந்து மாற்றி, வாசகர்களின் ரசிகத்தன்மையும், நாவலாசிரியர்களின் படைப்பாக்கத் தன்மையையும் மாற்றியமைத்தவை வங்க மொழி பெயர்ப்புகள்.

வங்க மொழி பெயர்ப்புகள் பரவலாகக் கிடைக்க ஆரம்பித்த பிறகு அவற்றின் தாக்கத்தைத் தமிழ் படைப்பாளர்களிடம் காணமுடிந்தது.

1. இராமனுஜலு நாயுடு எழுதிய பரிமளா (1923) என்ற தமிழ் நாவல் முழுக்க முழுக்க வங்காள நாவலை முன் மாதிரியாகக் கொண்டது.(செ. யோகராஜா, ப.3) பெயர் கூட பக்கிம் சந்திரர் எழுதிய 'பரிமளா' நாவலை நினைவு படுத்துவது.

2. வங்காள நாவல்களில் வரும் பாத்திரப் படைப்புகளை முன்மாதிரியாகக் கொண்டு பல தமிழ்க் கதாபாத்திரங்கள் படைக்கப்பட்டன.

பெரிய இடத்துப் பிள்ளைகள், கல்வியறிவு மிக்கோர், தம் விருப்பப்படி நடப்பவர்கள் போன்ற அன்றாட வாழ்வில் காணும் பாத்திரங்களைக் கதாநாயகர்களாகப் படைத்தார்கள். கதாநாயகனைச் சுற்றியுள்ள பிற பாத்திரங்கள், உண்மையான, ஆழமான காதல், காதலுக்காக தியாகம் செய்தல், குடும்ப உறவுகளிடையே நெருக்கமான பாசம் போன்ற உணர்வுகளைக் கொண்டவர்களாகப் படைக்கப்பட்டனர். யதார்த்த வாதமும், புனைவியலில் காணப்படும் மிகையுணர்வும் கொண்ட கதைகளாக இவை விளங்கின. சரத் சந்திரரின் இத்தகைய கதைகள் ஏற்கப்பட்டதன் விளைவே இது எனலாம். அகில ்ர–பாவை விளக்கு ஜெகச்சிற்பியன் – சொர்க்கத்தின் நிழல் போன்ற படைப்புகளை தாக்கத்தின் விளைவுகளுக்கு எடுத்துக்காட்டுகளாகத் தரலாம்.

3. சரத் சந்திரரின் குடும்பப்பாங்கான கதைகளும் அதிகம் ஏற்கப்பட்டன. வங்கத்தில் பகல்பூர் பாணிக் கதைக்கு குழு என்ற ஒன்றுஉண்டு. இவர்களுடைய பெரும்பாலான படைப்புகளில் அன்றாடவாழ்வில் சாதாரண மக்களின் நடைமுறை வாழ்வில் காணலாகும் நிகழ்வுகளும், உணர்வுகளும், சூழல்களும் அப்படியே நுணுக்கமாகப் படம் பிடிக்கப்பட்டிருக்கும். காதல், திருமணம், குடும்பம் – உறவுகள் – சிக்கல்கள் இன்பதுன்பங்கள் எனக்கு குடும்பச்சூழலை அடிப்படையாகக் கொண்டு அவை அமைந்திருந்தன. சரச்சந்திரரின் 'கிராமசமாஜம்' (கோஷால் வம்சக் குடும்பம் பற்றியது) 'தூய உள்ளம்' (பவானிப்பர் சட்டர்ஜி குடும்பத்தைப் பற்றியது) போன்ற நாவல்கள் இத்தகையன.

லஷ்மி, பி.வி.ஆர் போன்றோர் தமிழில் குடும்ப உறவுகளை, ஆழமான உணர்வுகளை வெளிப்படுத்தும் குடும்ப நாவல்களை எழுதினார். இது பற்றிக் குறிப்பிடும் செ.யோகராசா "(வங்க) குடும்ப நாவல்களும் மொழி பெயர்ப்பு மூலம் வந்தடைந்து காலப் போக்கில் தமிழில் குடும்ப நாவல் வகை தோன்றுவதற்குக் காலாய் அமைந்தன." (ப.4) என்றார்.

4. வங்க நாவலின் கதையமைப்பு, கதைப்பின்னலில் உள்ள கட்டுக்கோப்பு, பாத்திரப்படைப்பு, நிகழ்ச்சிப் பின்னல்கள், உத்திகள் ஆகியவையும் தாக்கத்தை ஏற்படுத்தின.

இவ்வாறான தாக்கத்திற்கு முதன்மையான காரணம் மொழி பெயர்ப்பு ஆசிரியர்களில் பலர் படைப்பாசிரியர்களாகவும் இருந்தமையே. ஆர். சண்முக சுந்தரம் 120–க்கும் மேற்பட்ட வங்க நாவல்களை மொழி பெயர்த்துள்ளார். இவரிடம் வங்கத்தின் தாக்கம் இருப்பது இயல்பானது, தவிர்க்க இயலாதது. அவரே ஒரு பேட்டியில் “சரத் சந்திரரின் படைப்புகளை மொழி பெயர்த்த போது, அவரது பாத்திர சிருஷ்டி என்னுள் பாதித்தது. அவரிடமிருந்து கற்றுக்கொண்ட கலை நுட்பங்கள் நான் புதிது புதிதாகச் சோதனை செய்ய உதவின” என்று கூறியுள்ளார்.

5. நிகழ்ச்சிப் பின்னல் சிறப்பு: வங்க நாவல்கள் பெரும்பாலும் பிரபலம் அடைந்த பத்திரிகைகளில் இதழ்களில் தொடர்கதைகளாக வெளிவந்தன. எனவே வாசகரிடம் ஆர்வமூட்ட விறுவிறுப்பாக அமைய, சம்பவங்களை அடுக்கடுக்காக அமைத்துப் பரபரப்பை ஊட்டினார்.

இந்த நிகழ்ச்சிப் பின்னல் உத்தியை கல்கி தன் தியாகபூமி, கள்வனின் காதலி, மகுடபதி போனற பல நாவல்களில் பின்பற்றியுள்ளார். நிகழ்ச்சிகள் பலவற்றை அடுத்தடுத்து கோர்வையாக – சாரம் குன்றாமல் விறுவிறுப்பாக அடுக்கிச் செல்வார் கல்கி.

6. பக்கிம் சந்திரர், சரத் சந்திரர் ஆகியோர் இருவரும் மிகச் சாதாரண கருப்பொருளை எடுத்துக்கொண்டு, படிக்கப்படிக்க ஆர்வமூட்டும் வகையில் எழுதுவதில் திறமை வாய்ந்தவர்கள். இதே பாணியைப் பின்பற்றிய கல்கி போன்றோர் நாவலைக் கையில் எடுத்தால் ஒரே மூச்சில் படித்து முடிக்கத் தூண்டுவதாக எழுதுவதில் வல்லமை பெற்றனர்.

7. வங்க நாவல்களில் பெண்மைக்கு உயர்வும் பெண்ணை மேம்படுத்தும் போக்கும் காணப்பட்டது. ஆர்.வி. தன் நாவல் முன்னுரையில், சரத்சந்திரர் நாவல் பற்றிக் குறிப்பிடுகையில், சரத்சந்திரர் குப்பையிலிருந்து தோன்றுவதானாலும் அதனிடமுள்ள உயர்ந்த பண்பை எடுத்து, வாசகர்கள் நினைவை விட்டு நீங்காமல் நிலைக்கச் செய்யும் கலை நுட்பம் பெற்றவர். விலை மகளிடத்தும் உயர்ந்த பண்புகளைக் கண்டறிந்து பெண் குலத்தையே உயர்த்திக் காட்டும் உன்னதமான சிற்பி. அவர் நாவல்களில் ஈடுபட்டிருந்த மனநிலையில் – அந்த எழுச்சியில் உந்தப்பட்டு உருவானது இந்தக் கதை" என்கிறார். (பெண் என்னும் பூ, முன்னுரை, வானதி பதிப்பகம் 1968)

8. தமிழ் நாவல்களில் பெண் பாத்திரங்கள் பெற்ற முதன்மைக்கும் வங்க மொழி பெயர்ப்புகளே காரணம் எனலாம். சரத்சந்திரரின் மாலதி, அநுபமா, மதனி முதலியோர் தமிழ் வாசர்களின் மனதை விட்டு நீங்காத பாத்திரங்கள் பெண்களிடம் உயர்வான கண்ணோட்டத்தை உருவாக்கிய பாத்திரங்கள் இவை.

லட்சுமி, லட்சுமி சுப்பிரமணிம், கோமகள், அநுத்தமா போன்ற படைப்பாளிகளின் பெண் பாத்திரங்கள் அன்றைய குடும்பப் பெண் வாசகர்களின் மனதைக் கவர்ந்தவர்கள். இவ்வாறான தாக்கத்திற்குக் கலைமகளும் ஒரு விதத்தில் காரணமாயிற்று. ஏனெனில் அந்த கால கட்டத்தில் கலைமகளில் வங்க நாவல்களில் மொழி பெயர்ப்புகள் தொடர்கதையாக வெளிவந்தன.

## முடிவுரை

வங்க நாவல்களில் மொழி பெயர்ப்புகள் போலவே மராட்டிய நாவல்களும் மலையாள நாவல்களும் மொழி பெயர்ப்பு மூலமாகத் தமிழ் வாசகர்களுக்கு அறிமுகமாயின. அதே போல பிரெஞ்சு, ரஷ்யக் கதைகளும் மொழி பெயர்க்கப்பட்டன. இவை யாவும் தமிழ்க் கதைக்களத்திற்கு அதிக உரம் ஊட்டி வளம் சேர்த்தன. இம்மொழி பெயர்ப்புகள் மூன்று நிலைகளில் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன.

1. வாசகர்களின் ரசிகத் தன்மையில் மாற்றத்தைக் கொணர்ந்து, அதன் மூலம் புதியவற்றைக் ஏற்கும் மனநிலையை ஏற்படுத்தின. தமிழில் அவை போன்ற படைப்புகளை வரவேற்கும் சூழலை ஏற்படுத்தின.

2. படைப்பாளர்களிடையே சக இந்திய மொழிகளில் எழுதப்பட்ட நாவல்கள் போலத்தாமும் தம் மொழியில் எழுதவேண்டும் என்ற ஊக்கத்தை தூண்டுதலை அளித்தன.

3. மொழி பெயர்ப்பாளர்களே படைப்பாளிகளாகவும் இருக்கும் பட்சத்தில் மூலப்படைப்புகளின் பாத்திர வார்ப்புகள் 'கதைப்பின்னல், நிகழ்ச்சிக் கோவைகள்' போன்றவற்றை அவர்கள் தம் சொந்தப் படைப்புகளில் கையாளக் காரணமாய் அமைந்தன. எடுத்துக்காட்டாக எஸ்.சண்முகசுந்தரம், ஆர்.வி, புதுமைப்பித்தன், கு.ப.ரா. ஆகியோரைச் சுட்டலாம்.

# 32. எஸ். ரமேசன் நாயரின் திருக்குறள் மலையாள மொழிபெயர்ப்பு - ஒரு மதிப்பீடு

*ச. குமார்*
ஆய்வாளர் – தமிழ்த்துறை
கேரளப் பல்கலைக்கழகம், காரியவட்டம்

அற இலக்கியங்களுள் தலைமை பெறும் திருக்குறளினை முழுமையாக மலையாள மொழியில் எஸ்.ரமேசன் நாயர் மொழிபெயர்த்துள்ளார். இந்நூலில் அமையும் சில பாடல்களை மூலக்கவிதையோடு ஒப்பிட்டு மொழிபெயர்ப்பில் அமையும் சொற்களின் தேர்ச்சியினையும் யாப்பு அமைப்பிலனையும் அணி இயல்பினையும் ஆய்ந்து மொழிபெயர்ப்பின் தன்மையினை அளவிடுதலே இக்கட்டுரையின் நோக்கம்.

## மலையாள மொழியில் திருக்குறள்

இராமவர்ம கவிராஜனின் கட்டளைப்படி அமிக்கரெிட்டிமாக் கோதப்பணிக்கர் கி.பி.1595–இல் குறளினை முழுமையாகமொழிபெயர்த்தார். இதுவே முதல் மொழிபெயர்ப்பு ஆகும். இவர் ஏட்டில் எழுதிவைத்தார். இம்மொழிபெயர்ப்பில் இருந்து 295 குறள்களை எடுத்து, அப்பாக்களுக்கு எல்.வி.ராமசாமி ஐயர் எழுதிய குறிப்புரையுடன் 1938–இல் “கண்டச” வெளியிட்டது.

1854-இல் திரு.நாராயணகுரு 1,2,3,6 – என்ற நான்கு அதிகாரங்களை மொழிபெயர்த்தார். 1899–இல் எ. கோவிந்தபிள்ளை திருக்குறளின் அறத்துப்பால், பொருட்பால் என்ற இரு பகுதிகளை மொழிபெயர்த்தார்.

1926-இல் “ரத்னோத்தாரகம்” என்ற உரையுடன் வடயாற்றுகோட்ட பரமேஸ்வரன் பிள்ளை குறளின் சில பகுதிகளை மொழிபெயர்த்தார். இம்மொழிபெயர்ப்புடன் மூலக்குறளையும் கொடுத்திருந்தார். 1934–இல், வி.பி.தாணுபிள்ளை “சதாசார போதினி” அநாவது “திருக்குள்” என்ற பெயரில் சில பகுதிகளை மொழிபெயர்த்தார். 1957–இல் “இராமகிருஷ்ண திருக்குறள்” என்ற பெயரில் சாஸ்தம்ங்கலம் இராமகிருஷ்ணபிள்ளை, மொழிபெயர்த்தநோடு உரையும் எழுதியுள்ளார். 1957–இல் வெண்ணிக்குளம் கோபாலக்குறுப்பு மொழிபெயர்த்து வெளியிட்ட மொழிபெயர்ப்பே ஓரளவு பிரசித்திப் பெற்றது.

1960-இல் திரு.திருவல்லம் பாஸ்கரன் நாயர் அறத்துப்பாலை மட்டும் மொழிபெயர்த்து வெளியிட்டார். 1960–லும், 1964–லும் "திருக்குறள் மணிகள்” என்ற பெயரில் சிறுவர் இலக்கிய வடிவில்குறளின் சில பகுதிகளை பி.தாமோதரன் பிள்ளை மொழிபெயர்த்தார். 1962–இல் கெ.செல்லன் நாடார் அறத்துப்பாலை மொழிபெயர்த்தார். 1984–இல் மலமல் கோபாலப்பணிக்கர் "வள்ளுவ நீதி வாக்கியம்” என்ற பெயரில் அறத்துப்பால்,பொருட்பால் ஆகிய இரு பிரிவுகளில்

அமையும் சில பாடல்களை இடையிடையே விடுத்து மொழிபெயர்த்தார்.

மேற்குறிப்பிட்ட மொழிபெயர்ப்பிலிருந்து வேறுபட்ட நிலையில் எஸ்.ரமேசன்நாயர் 1998–இல் திருக்குறளை முழுமையாகமொழிபெயர்த்துள்ளார். (திருக்குறள், மொழிபெயர்ப்பாளர்: எஸ்.ரமேசன் நாயர், வெளியீட்டாளர்: டிரஸ்டு பப்ளிகேஷன்ஸ், தபால்பெட்டி எண்: 516, திருவனந்தபுரம் – 695 014.)

## ஆசிரியர் குறிப்பு

கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள குமாரபுரம் என்ற ஊரில் 1948-ஆம் ஆண்டு பிப்ரவரி திங்கள் இரண்டாம் நாள் பிறந்த எஸ்.ரமேசன் நாயர், 1966–இல் பொருளாதாரத்தில் இளங்கலைப்பட்டமும், 1972–இல் மலையாள இலக்கியத்தில் முதுகலைப் பட்டமும் பெற்றார். கவிதை, நாடகம், சிறுவர் இலக்கியம், மொழிபெயர்ப்பு போன்ற துறைகளில் அரிய படைப்புகளைப்படைத்துள்ளார். புத்தேழன் விருது, இடச்சேரி விருது, கவன கௌதுகம் விருது போன்ற பல விருதுகளைப் பெற்றுள்ளார்.

அறுபதுக்கும் மேலானத் திரைப்படங்களுக்குப் பாடல்களும் எழுதியுள்ளார். 1975–ஆம் ஆண்டு முதல் அகில இந்திய வானொலிநிலையத்தில் வேலை பார்த்த இவர், 1977–ஆம் ஆண்டில் நிகழ்ச்சி நிர்வாகியாக இருந்து தானாகவே வேலையில் இருந்து ஓய்வுபெற்றுக்கொண்டார்.

## எஸ். ரமேசன் நாயரின் மொழிபெயர்ப்பின் அமைப்பு

திருக்குறள் முழுமையினையும் மொழிபெயர்த்துள்ளார். இம்மொழிபெயர்ப்பில் முதலில் மூலக்குறளை மலையாள எழுத்து வடிவில் தந்துள்ளார். அடுத்த நிலையில் மொழிபெயர்ப்பினைக் கொடுத்துள்ளார். அதன்பின் மூலக்குறளின் சொல்லுக்குப் பொருள்தருகின்றார். பிறகுக் குறளின் மொத்தக் கருத்தினைத் தந்து விளக்கமும் தருகின்றார்.

## மொழிபெயர்ப்பின் சொல்

சொல் தேர்ச்சி என்பது மொழிபெயர்ப்பிற்கு இன்றியமையாதது. மொழிபெயர்ப்பாளரின் சொல் தேர்ச்சிக் குறித்து மதிப்பிட கல்வி என்ற அதிகாரத்திலிருந்து சான்றாக ஒரிரு குறள்களைஎடுத்து ஆராயலாம்.

## மூலப்பாடல்

1. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
   நிற்க அதற்குத் தக
2. உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
   கடையரே கல்லாதவர்

**இதன் மலையாள மொழிபெயர்ப்புக் கீழ்க்காணுமாறு**

1. வெக்தம் படிக்க கறதீர்த்தறி ஞ்ஞுதின்
யுக்திக்கு தக்கபடி நில்க்க.
2. உள்ளோர்மும்பேழ போல் கும்பிட்டும் வித்தநே
டுன்னோன்மகான் உறீனன் அந்யன்.

தமிழ்க்கவிதை பெறும் மாற்றமும் சொல்லாட்சித் தேர்வும் பின்வருமாறு அமையும்:

1.1. கற்க கசடற – வெக்தம் படிக்க: இணையான சொல்லாட்சி

1.2 கற்பவை – விடுதல்

1.3. கற்றபின் – கறதீர்த்தறிஞ்ஞுதின்: தொடர்புடைய விளக்கம்

1.4. நிற்க அதற்குத்தக – யுக்திக்குத் தக்கபடி நில்க்க :தொடர்புடைய விளக்கம்

2.1 உடையார் முன் – உள்ளோர் மும்பு : இணையான சொல்லாட்சி

2.2. இல்லார் போல் – ஏழபோல்: இணையான சொல்லாட்சி

2.3. ஏக்கற்றும் – கும்பிட்டும்: தொடர்புடைய விளக்கம்

2.4. கற்றார் – வித்தநேடுன்னோன் மகான்: இணையான சொல்லாட்சி, கூட்டிஎழுதுதல்

2.5. கடையரே கல்லாதவன் – உறீனன் அந்நியன்: இணையான சொல்லாட்சி

பெரும்பான்மையான இடங்களில் இணையான சொல்லாட்சிகளையே பயன்படுத்தியுள்ளார். ஒரு சில இடங்களில் சில சொற்களைமொழிபெயர்க்காது விட்டுள்ளார். "கற்க கசடறக் கற்பவை கற்றபின்" என்றப் பாடலடியை "வெக்தம் படிக்க கறதீர்த்தறி ஞ்ஞுதின்" என மொழிபெயர்த்துள்ளார். இங்குக் கற்பவை என்ற சொல்லை மொழிபெயர்க்காது விட்டுள்ளார். ஆனால் தேவைக்கேற்ப சொற்களைச் சேர்த்தும் எழுதியுள்ளார். "ஏக்கற்றும் கற்றார்" என்றத் தொடரைக் "கும்பிட்டும் வித்த நேடுன்னோன் மகான்" என மொழியாக்கம் செய்துள்ளார். இத்தொடரில் "மகான்" என்றச் சொல் கட்டி எழுதப்பட்டுள்ளது. சில இடங்களில் தொடர்புடைய விளக்கங்களையே தந்துள்ளார்.

**மொழிபெயர்ப்பில் யாப்பு:-**

தொடை வகைகளுள் மோனை, எதுகை, அளபெடை போன்றவைகள் அமையும். சொல் தேர்ச்சியில் பொருத்தமுறசொற்கள் அமையும்போது மோனை, எதுகை பெற்று பாடல்கள் வருகின்றன. ஆனால் சில பாடல்களில் மோனை, எதுவை அமையவில்லை.

"குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றம் தருஉம் பகை"

என்ற குறளில் "தருஉம்" என்ற சொல்லில் அமையும் அளபெடைசெய்யுளிடை அளபெடையாகும். ஆனால் மொழிபெயர்ப்பாளர் "தருஉம்" என்ற அளபெடைச் சொல்லை "வருத்துன்ன" என்று அளபெடையில்லாது பொருள் நிலையில் மொழிபெயர்த்துள்ளார்.

மலையாள மொழியில் சீர் இருப்பினும் குறள்களைச் சீர்ப்படிப்பிரித்து எழுதாமல் சொற்களைச் சேர்த்தே எழுதியுள்ளார்.சான்றாகக் கீழ்வரும் குறளைக் கொள்ளலாம்.

"வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்"

இதன் மொழிபெயர்ப்பு:

"வரும்மும்பு காக்காத்தோன் வாழ்வக்னி முகமார்ந்ந
வைய்க்கோல்த்தூறு போல்க்கெடுன்னு"

## மொழிபெயர்ப்பில் அணி

குறளில் அமையும் உவமையணி, உருவகணி, சொற்பொருள் பின்வருநிலையணி போன்ற அணிகளைச் சிதைவுறா வண்ணம்மூலத்துக்கேற்ப மொழியாக்கம் செய்துள்ளார்.

## உவமையணி

"அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டிக் கொளல்"

என்றக் குறளில் உவமையணி அமைந்துள்ளது. இக்குறளினை,

"களமில்லா வட்டாட்டம் போலெ கிரந்தப்பொலிம
திகயாதெ சபயிலுரியாட்டம்"

என்று உவமையணி வெளிப்பட்டு நிற்க மொழிபெயர்த்துள்ளார்.

## உருவணி

"உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து"

இக்குறளில் "ஓரைந்து" என்பது ஐம்புலன்களாகிய யானைகளைக்குறித்து உருவகமாக அமைந்துள்ளது. இதனை

"அறிவின்றெ தோட்டியாலஞ்சம் நியந்திரிப்போன்
வரநிலத்தேய்க்கொரு வித்தாம்"

என்று ஐம்புலன்களான யானையினை மூலத்தைப் போன்று "அஞ்சு"என்றுக் குறிப்பிட்டு உருவகித்துள்ளார்.

## சொற்பொருள் பின்வரு நிலையணி

"செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை"

என்றக் குறளில் "செல்வம்" என்ற சொல் அதே பொருளில் ஐந்து இடங்களில் வந்துள்ளது. இக்குறள் சொற்பொருள் பின்வரு நிலையணியின் பாற்படும். இதனை,

"சமீபத்தின் சம்பத்து சிரவணசம்பத்தே
சமீபத்திலொக்கையும் முக்யம்"

என்று மொழிபெயர்த்துள்ளார். இங்கும் "சம்பத்து" என்றச் சொல்லை நான்கு இடங்களில் அமைத்துச் சொற்பொருள் பின்வருநிலையணியில் அமைத்துள்ளது சிறப்பு.

சொல்தேர்ச்சியில் நிறைவானப் பல நிலைகள் அமைந்துள்ளன. சில சொற்களை விடுத்தும் சேர்த்தும் தொடர்புடைய விளக்கம் தந்தும் மொழிபெயர்த்திருப்பதன் வாயிலாக மொழிபெயர்ப்பாளர் முழுமையின்பத்தையே மனத்துள் கொண்டிருந்தார் என்பதனைத் தெளிவுற அறியமுடிகிறது. யாப்பு நிலையில் சொற்களைச் சீர்பட அமைக்காதுச் சேர்த்து அமைத்துள்ளார்.எனினும் குறள் வாக்கிய அமைதியைப் பின்பற்றியுள்ளதால் ஓசைநயம் தோன்ற மொழிபெயர்ப்பு அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. அணிகள்தம் பொருள் குன்றாதுத் திறம்பட மூலத்துக்கேற்ப அணிகளை அமைத்துள்ளார். சுருங்கக்கூறின் கவிதையின் முழுமையான அழகியல் உணர்வை மொழிபெயர்ப்பாளர் பொருத்தமுற அமைத்துள்ளார் எனலாம்.

# 33. கி.ராஜநாராயணனின் படைப்புத்திறன்

*ம. வசந்தி*

ஆய்வாளர் – தமிழ்த்துறை

புதுவைப் பல்கலைக்கழகம்

இந்தியாவின் சொந்தப் பிள்ளைகளாகிய கிராமத்து மக்களைப்பலர் மறந்துபோனார்கள். சுதந்திரம் பெற்றுவிட்டால் இந்தியா சொர்க்க பூமியாகிப் போகும் என்ற கற்பனையில் மிதந்துகொண்டு சொல்லொணத் துயரங்களுக்குத் தங்களை ஆட்படுத்திக்கொண்ட ஊர் பெயர் தெரியாத எத்தனையோ அப்பாவிகளின் பிரதிநிதியாகிய தூங்காநாயக்கரைக் கதாநாயகனாகக்கொண்டு கதை புனையவேண்டும், அல்லது இயலும் என்ற நினைப்பே இல்லாமல், பட்டணத்துப் பகட்டுகளையும் உயர்மட்டத்தாரின் உள்மன உளைச்சல்களையும் கருவாகக் கொண்டுகதைத்துத் திரிந்த சந்தைக்கடையில் சந்தடி இல்லாமல் ஒரு பெரிய எழுத்துலகப் புரட்சிக்கு வித்திட்டு வளர்த்து வருகிறார்கி.ராஜநாராயணன்.

ஒரு எழுத்தாளன் தன் படைப்புகளினூடு சித்திரித்துக் காட்டும் உலகினையே படைப்புலகு எனலாம். இது முற்றிலும் உண்மைஉலகல்ல. உண்மை உலகின் ஒரு பிரதிபலிப்பு. ஒரு எழுத்தாளனின் படைப்புலகம் இரண்டு அடிப்படைகளிலிருந்து உருவாகின்றது[1]

1. ஆசிரியனின் வெளியே உள்ள புற உலகு
2. ஆசிரியரின் அக உலகு

எல்லா எழுத்தாளர்களும் தங்களுடைய படைப்புகளுக்கு புறஉலகையே ஆதாரமாகக் கொள்கிறார்கள்; அங்கிருந்தே விஷயங்களை, கருப்பொருளைப் பெறுகிறார்கள். ஆனால் ஒவ்வொரு எழுத்தாளனும் இப்புற உலகின் உண்மைகளை தன் அக உலகின் தன்மைகளுக்கு ஏற்பவே உள்வாங்கிக் கொண்டு வெளிப்படுத்துகிறான். அவனுடைய வாழ்க்கை நோக்கு கலைக்கோட்பாடு, அனுபவம், உணர்திறன், படைப்பாற்றல் என்பன அவனுடைய அகஉலகின் தன்மைகளை நிர்ணயிக்கின்றன. இதன் அடிப்படையிலேயே ஒரு எழுத்தாளன் மற்ற எழுத்தாளனில் இருந்துவேறுபடுகின்றான். இதனாலேயே ஒரு எழுத்தாளனுடைய படைப்புலகு அவனுக்கே உரியதாக அவனுடைய குறைநிறைகளின் வெளிப்பாடாக அமைந்துவிடுகின்றது.

## கி.ராவின் படைப்புலகு

“ஒரு தடவை மட்டிலும் என் கதைகளை வாசிப்பவர்கள் நன்கு அனுப விக்க முடியாது” என்று ராஜநாராயணன் சொல்லி இருக்கிறார்.[2] தமிழில் உள்ள நல்ல படைப்புகளில் பல கிராமத்தைப் பற்றி எழுதப்பட்டவைதான். அந்த வகையில் கரிசல் வட்டாரத்தைத் தன் படைப்புகலாக கி.ரா. கொண்டிருக்கிறார். எனினும் தமிழிலே கிராமத்தைப் பற்றி எழுதிய மற்றவர்களுக்கும் ராஜநாராயணனுக்கும்

இடையே ஒரு வித்தியாசம் இருக்கின்றது. இவர் கிராமத்தைஒரு பற்றார்வத்துடன் அதன் பண்பாட்டு அம்சங்களை ஒரு அலாதியான மோகத்துடன் பார்க்கிறார். ஜானகிராமனுக்கு கிராமியப் பண்பாடு முக்கியம் அல்ல. மனித உறவுகளின் குறிப்பாக ஆண் பெண் உறவுகளின் அடிப்படையைக் கதைக் கருவாகக் கொள்வது. சண்முக சுந்தரத்தின் அக்கறையோ சொத்துடைமையில் ஊழலும் மனித முரண்பாடுகளை வெளிப்படுத்துவது நோக்கம். ராஜநாராயணின் கிராமத்தில் வாழ்க்கைப் பிரச்சனைகள் இல்லாமல் இல்லை. கிராமத்து மக்களின் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், நடத்தைக் கோலங்கள், மொழிவழக்குகள் முதலியவற்றை வெளிக்கொண்டு வருவதிலேயே இருக்கிறது.

## கி.ராவின் படைப்புத்திறன்

1) தான் சார்ந்த நிலப்பகுதியை எதிரொலிப்பது
2) புவியியல் தகவல்களை வழங்குவது
3) மொழியின் தாக்கக் கூறுகளைப் பிடித்துவைப்பது

இந்த மூன்றையும் கி.ரா. தனது எழுத்தில் சாதித்திருக்கிறார்[3] மொழியைப் பயன்படுத்துவதில் மட்டுமல்ல, தனது இலக்கிய வடிவங்களை அமைப்பதிலும், கி.ரா. அதிகாரத்திற்கு எதிரான தனது குரலைத்தான் பின்பற்றிப்போகிறார். "நாவலின் கட்டமைப்பு", "சிறுகதை இலக்கணம்" என்கிற விதிகளைப் பற்றி எல்லாம் கவலைப்படாமல், தன் படைப்பின் போக்கில் போகவிடுகிறார். கி.ரா.வின் எந்த ஒரு பிரதியும், சட்டதிட்டங்களுக்கு அடங்காதவையாக வெளியில் நிற்கின்றன. "முடிந்த அளவு வெளியில் நிற்கிறேன்" என்று தான் இந்தப் பழுத்த பழம் இலக்கியத்தாலும் வாழ்கிற வாழ்க்கையாலும் சொல்லிக்கொண்டிருக்கிறது.[4]

படைப்புக்கருக்கள் குறித்து கி.ராஜநாராயணனின் கருத்துக்களைக் கூறுகையில், "புதுப்புதுக் கருத்துக்ககளை வைத்தே கதைஎழுதனும் என்று எனக்குப் பிறவியிலிருந்தே "மோகம்" எனக்குறிப்பிடும் இவர், கதைக் கருக்களை நான்காகப் பிரிக்கிறார்[5].

1) கேள்விப்பட்டது 2) பார்த்தது 3) அனுபவித்தது
4) கற்பனை என்று தன் படைப்புத்திறனை வெளிப்படுத்துகிறார்.

## படைப்பு உருவாகும் முறை

## தலைப்புக் கொடுத்தல்

தலைப்பே, கதையை சூசகமாகக் குறிப்பிடும். சிறுகதையில் குறிப்பிடப்படும் அனைத்து நிகழ்வுகளுக்கும் பிரச்சனைகளுக்கும் உணர்வு நிலைகளுக்கும் பிரதிநிதித்துவமாக இது விளங்கும். கி.ரா.தனது கதைகளுக்கு உரிய தலைப்பை கதைகள் எழுதி முடித்தபின்னரே வைக்கிறார். இவர் இட்ட தலைப்புகளை "குறியீடு", சாதாரணமானது, என இரண்டாகப் பகுக்கலாம். "மாயமான்", "ஜடாயு", "மின்னல்", "வால் நட்சத்திரம்" போன்றவை குறியீட்டுத்

தலைப்புகளாகும். "தோழன்ரங்கசாமி", "வேட்டி", "வேலை", "கிலி" போன்றவை சாதாரண நிகழ்ச்சிகளை ஒட்டியவையாகும். இராமனை ஏமாற்றிச் சீதையைக் கவரச் செய்யத் துணைநிற்பது மாயமான். அதுபோன்றே விவசாயிகளை ஏமாற்றி அவர் நிலையை குலையச்செய்வது அரசுக்கடன்.

## கதையின் தொடக்கம்

தொடக்கம் என்பது கதைக்குள் நம்மைக் கொண்டு செல்வதாகும். கதையைத் தொடர்ந்து படிப்பதற்கு பல கலைஉத்திகள் உண்டு.

1) கதையின் சுருக்கத்தை எடுத்துச்சொல்லி, அதைக் கதைக்குள் விரிவுபடுத்தல்.

2) ஒரு கதை ஒரு பாத்திரத்தின் தன்மையை மட்டுமே பிரதானமாக விளக்கக்கூடியதாக இருந்தால், அந்தப்பாத்திரத்துக்கு ஏற்றாற்போன்று கதையைத் தொடங்குவது மற்றொரு முறை.

"கன்னிமை" கதை இப்படித் தொடங்குகிறது,

'சொன்னால் நம்பமுடியாதுதான்;
நாச்சியாரம்மாவும் இப்படி மாறுவாள்
என்று நினைக்கவேயில்லை நான்".

மணமாவதற்கு முன் மிகவும் தாராளமாய்ச் செலவு செய்த நாச்சியாரம்மா, குழந்தைக்குத் தாயானபின் பொருள்சேர்க்கவேண்டும் என்ற ஆசையால் மாறுகிறாள். இதுதான் கதை. இதைச்சுருக்கமாகச் சொல்லித் தான் கதையைத் தொடங்குகின்றார். பத்தாண்டுக் காலம் வாழ்ந்தும் தன் மனைவி மஞ்சம்மாவைப் புரிந்து கொள்ள முடியவில்லை கணவனால். இதைச் சொல்லும் "ஓர் இவன்" கதையின் தொடக்கம், 'மஞ்சம்மாவுடன் பத்து வருஷம் "குப்பை கொட்டி"யாகிவிட்டது. "அவளை அவனால் புரிந்துகொள்ள முடியலைதான்" இதுமாதிரியான தொடக்கங்களை "மகாலட்சுமி", "விளைவு", "கனிவு", "வேட்டி" போன்ற பல கதைகளில் காணலாம்.

## கதையாக்கம்

கதையாக்கத்திலும் மக்கள் மரபான நாட்டுப்புற மரபைத்தான் கி.ரா. பின்பற்றியுள்ளார். அவருடைய கதை மாந்தர்கள் எல்லோரும் பெரும்பாலும் வாழ்நிலையில் சாதாரணமானவர்கள்; ஏமாற்றப்படுபவர்கள். கி.ரா. இந்த நாட்டுப்புற மரபின் அடிப்படையில்தான் ஒரு கதை சொல்லியாக விளங்குகிறார். யதார்த்தத்தில் நகரமுடியாதபடி தொடைகளை ஒருவன் கழுத்தோடு சேர்த்து அமுக்கிக்கொள்ள, கொம்புகளை ஒருவன் கழுத்தோடு சேர்த்து வாழ்கிற கிராமத்து மக்களைத் தன் பிரதிகளில் அசாதாரணமான ஆட்களாகப் படைத்துக்காட்டுகிறார். பாதிக்கப்படுபவர்கள் பக்கம் நின்று எழுதுவது, படைப்பாளி எந்தக் கோணத்தில் இருந்து பிரச்சனைகளைஅணுகுகிறான் என்பது போன்ற படைப்புத் தொழிலின் இரகசியத்தைத் தெளிவாகத் தெரிந்து

வைத்திருக்கிறார். தொன்மக்கூறுகளின் பலவிதமான தன்மைகளையும் தம் பிரதி முழுவதும் கலந்துள்ளார். "வந்தது", "கனா" என்று இரண்டு கனவுக் கதைகளையும் தாம் கண்ட கனவின் அடிப்படையில் நடப்பியல் ரீதியாக முன்னும்பின்னும் மாற்றிக் கூறியிருக்கிறார்.

## கதையை முடித்தல்

சிறுகதை பிரச்சனையை மையப்படுத்தும் கதையெனில், அதன்தீர்வை நோக்கிய ஆசிரியனின் கருத்து வெளிப்படும். முடிவில்தான் கொடுக்கப்படும் அழுத்தம், அழுத்தக் குறைவு ஆகியன கலையின் சமூகப்பயன் குறித்த கண்ணோட்டத்தைப் பொறுத்தது ஆகும். கி.ரா. கதையின் முடிவில் அழுத்தம் கொடுத்தே பெரும்பாலான கதைகளை முடிக்கின்றார்.

"கரெண்டு" கதையில், அரசு அதிகாரத்தின் மீது ஆத்திரமுற்றவிவசாயி பம்புசெட்டை உடைக்க முயலுகிறான். ஆனால் இம்முடிவு எய்தவனிக்க அம்பை நோவது போன்றதாகும் என்று எண்ணி சக விவசாயிகளிடம் இதைப்பற்றி எடுத்துச்சொல்லவேண்டும் என்ற மனத்தெம்புடன் விரைவதாகக் கட்டப்பட்டுள்ளது.

## மொழிநடை

மக்கள் பேசுகின்ற பாஷையில் படைப்புகள் அமையவேண்டும்என்பது கி.ரா.வின் விருப்பம். இதற்கு ஏற்றாற்போன்று அவரது கதைகள் பெரும்பாலும் வட்டார நடையில் வெளிவந்துள்ளன. கரிசல் மொழியில், அவர்களது உவமை கலந்த பேச்சில்சுண்டிஇழுக்கும் நடையில் கதைகள் உள்ளன. "வேட்டி", "கனிவு", "மகாலட்சுமி" போன்ற கதைகளில் உரையாடலே இல்லாமல் வர்ணனையிலே முடிந்துபோகிறது. "கிடை" கதையில் இவர் கையாளும் கருக்கேற்ப மக்களை அவர்களின் மொழியின்மூலம் நம் கண்முன் நிறுத்தும் இவரது கலைத்திறனும் தனித்தன்மை பெற்றவை. ஆசிரியரது கூற்றைக்கூட இவர் வட்டாரப் பேச்சு வழக்கிலேயே கையாள்கிறார். அதாவது தமிழகத்துக்கென உள்ள பொதுநடையை (Common Style) பின்பற்றாமல் வட்டார நடையைப் பின்பற்றுகிறார்.

## படைப்பின்மூலம் செய்தி சொல்லும் முறை

எல்லாப் படைப்புகளும் செய்தியைத் (Message) தாங்கிவருகின்றன. செய்தி வெளிப்படையாகவும் அன்றி உட்பொதிந்தும் கூறப்படும்கி.ராஜநாராயணன் சிற்சில கதைகளைத் தவிர (கனா, பேதை போன்றவை) ஏனைய கதைகளைத் தாம் எடுத்துக்கொண்ட கருக்களின் நிகழ்வுகளை இயல்புபட வர்ணித்துள்ளார். இவரிடம் மேலாதிக்கம் பெற்றுநிற்கும் இவரின் இயற்பண்புநெறி, இவரதுசெய்தி சொல்லும் முறையை நெறிப்படுத்துகிறது. விவசாயிகள் பிரச்சினைகளையும், அவர்கள் வாழ்வு நிகழ்ச்சிகளையும் வர்ணிக்கும் கதைகள், நடுத்தரவர்க்க, கரிசல்காட்டு விவசாயிகளின் அவலநிலையை நமக்குத் தெரிவிக்கின்றன.

விவசாயிகளுக்கும் அரசு அதிகாரத்துக்கும் இடையிலான முரண்பாடு ஆகிய இவற்றில் விவசாயிகள் பக்கமும் கிராமத்தின்பக்கமும் நின்று செய்தி சொல்கிறார்.

கரிசல் மண் குறித்த கி.ராஜநாராயணனின் அறிதல் வியக்கத்தக்கது. இவரளவுக்குத் தமது சூழ்நிலையை விளங்கிக்கொண்ட கலைஞர்கள் மிகவும் குறைவு. கி.ரா.வின் சமூகயதார்த்தம் மற்றும் கலை எதார்த்தச் செயல்பாடுகள், குறிப்பிடத்தக்கவை ஆகும். இவரது படைப்புக்கருக்கள் பாதிப்பதோடு மட்டுமின்றி, இவரது கதை சொல்லும் முறையும் வெகுவாகப் பாதித்துக்கொண்டிருக்கிறது. எனவே இவரது கலைத்திறன் மேலும் வளர வேண்டுமெனில், இவர் தொடக்ககாலத்தில் எழுதிய "எழுத மறந்த கதை", "தோழன் ரங்கசாமி" போன்றவற்றையும் அவற்றைப் போன்று இவரது அனுபவத்தில் பிறப்பெடுத்த இவர் எழுத மறுத்த கதைகளையும் வெளிக்கொணர வேண்டும். அப்போது தான் இவரது கலைத்திறன் மேலும் பரிணமிக்கவும் பெரும்பாலான மக்களுக்குப் பயனளிக்கக்கூடிய விதத்திலும் அமையும்.

## அடிக்குறிப்புகள்

1. கைலாசபதி – தமிழ்நாவல் இலக்கியம், பக்.73
2. மீரா (தொகுப்பு) – ராஜநாரணீயம், ப.23
3. பஞ்சாங்கம் – மறுவாசிப்பில் கி.ராஜநாராயணன், ப.51
4. பஞ்சாங்கம் – மறுவாசிப்பில் கி.ராஜநாராயணன், ப.72

# 34. அச்சுப் பத்திரிகையும் நேரடித்தொடர்புப் பத்திரிகையும்

*டாக்டர். பெ.ராஜேந்திரன்*
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

தொடர்புச் சாதனங்களில் அச்சுப்பத்திரிகை சமூக வளர்ச்சிக்குஆற்றிய பணி மிகவும் மகத்தானது. பத்திரிகைகள்மக்களிடையே பல நிலைகளில் அரசியல் சமூக விழிப்புணர்வை ஏற்படுத்தி வந்துள்ளன. இதனால் பத்திரிகைகளைச் சமூகத்தைக் காக்கும் காவல் நாய் (watch dog) என்றும், மேலும் பத்திரிகை மக்களுக்கு எப்படிப்பட்ட செய்திகளைக் கொடுக்கவேண்டும்என்பதைத் தீர்மானிக்கக்கூடியவர், பத்திரிகை ஆசிரியர்என்பதால் அவரை வாயில் காப்போன் (gate keeper) என்றும் அழைக்கின்றனர்.

வளர்ந்துவரும் பல பத்திரிகைத் தொழில் நுட்பம் காரணமாக அச்சுப்பத்திரிகைகள் இப்போது பல நேரடித்தொடர்புபத்திரிகைகளை ஏற்படுத்தி வருகின்றன. இதனை அடிப்படையாகக் கொண்டு இக்கட்டுரை இன்றை பத்திரிகைகளின் போக்குநிலையினைக் கண்டறிய முற்படுகிறது.

இணைப்பகம் நேரடித்தொடர்பு (online) பத்திரிகைக்கு ஓர் ஊக்கமாக விளங்குகிறது; அச்சுத்தாள் அச்சுப்பத்திரிகைக்கு ஊர்ஊடகமாக விளங்குகிறது. இணைப்பகம் உலக முழுவதும் பரந்துவிரிந்துள்ள ஒரு வளைகளமாக (website) உள்ளதால் நேரடித் தொடர்புப் பத்திரிக்கையின் சந்தையும் பரந்து விரிய வாய்ப்பு உள்ளது. அத்துடன் பல நிலைகளில் சிதறிக்கிடக்கும் வாசகர்களைஒன்றுசேர்க்க அவர்களுக்கு இவ்விணைப்பகம் உதவுகிறது. மேலும் அச்சுப்பத்திரிகைகளைப் பெற இயலாத வெளிநாடு மற்றும் வெளிமாநிலங்ககளில் வாழும் மக்கள் இணைப்பகம் மூலம் ஒரு செய்தித்தாளின் செய்தியை அறிந்துகொள்ளலாம். மேலும் இணைப்பகப் பத்திரிகை ஓர் இருமுகத்தொடர்பு பத்திரிக்கையாக உள்ளதால் வாசகர்கள் தங்கள் கருத்துக்களைப்பத்திரிகை ஆசிரியருடன் பகிர்ந்துகொள்ளமுடியும். இதனால் இந்நேரடித் தொடர்புப் பதிப்பை (online edition) இருமுகத் தொடர்புப்பதிப்பு (interactive edition) என்று அழைக்கின்றனர். இதனை அடிப்படையாகக் கொண்டு எக்ஸ்பிரஸ் நேரடித்தொடர்புப் பத்திரிகை ஆசிரியர் தேவேந்திர டாக் பின்வருமாறு கூறுகிறார்

Internet newspaper provides unprecedented access to wider markets and provides for greater, more efficient interactivity (vidura, Vol.35, No.4, 1998,P.S.)

நேரடித் தொடர்புப்பத்திரிகைகள் இன்னும் தமக்கென்று ஒருபுதிய வடிவத்தை (format) உருவாக்கிக் கொள்ளவில்லை. அவை அச்சுப்பதிப்பின் வடிவத்தையே கொண்டு விளங்குகின்றன. இதனால்நேரடித் தொடர்பு பத்திரிகை

ஆசிரியர்கள் தமது அச்சுப்பதிப்பின் வாசகர்களைத் தக்கவைத்துக் கொள்வதற்கும், தமதுசந்தையை விரிவாக்கிக் கொள்வதற்கும் முடிகிறது. மேலும் நேரடித் தொடர்புப் பத்திரிகைக் களங்களில் (newspaper sites) கட்டுரைச் சித்திரங்கள் (features), பயன்சார்ந்தத் தகவல்கள் (value additions)ஆகியனவும் உள்ளன.

அச்சுப்பதிப்பு பல செயல்பாட்டு நிலைகளைக் (procession) கொண்டுள்ளதால் அதன் அச்சுப்பதிப்பு வெளிவர ஒரு சிலமணித்துளிகள் தேவைப்படும். ஆனால் இணைப்பகத்தில் இந்தமுறைகள் (process) ஒரு சில நிமிடங்களிலே முடிந்து அத்தகவல்மக்களைச் சென்றடைந்து விடுகிறது.

இணைப்பகத்தில் நிழல் படம் (photo), கேலிச்சித்திரம் (cartoon) ஆகியவற்றை ஒழுங்குபடுத்த (touch) பல மென்பொருள் (software) தொழில்நுட்பங்கள் இன்று நடைமுறையில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. அவைகளில் முக்கியமானது free hand, photo shop, Q-express ஆகியனவாகும். இவை கலைஞர்களுக்கு (artist)அவர்கள் விரும்பிய வண்ணம் நிழல் படத்தையும், கேலிச் சித்திரத்தையும் இணைப்பகத்தில் கொடுக்க உதவுகிறது. எடுத்துக்காட்டாக பில்கேட்ஸின் நிழல்படம் ஒன்று இருந்தால்போதும். அதை இம்மென்பொருள் மூலம் எந்தத் தோற்றத்திலும் அதாவது அவர் தோற்றத்தை அழுவதுபோலவோ, சிரிப்பதுபோலவோ அல்லது எப்படிவேண்டுமோ அவ்வாறு கொடுக்கமுடியும்.

அச்சுப்பத்திரிகையின் முக்கிய பிரிவுகள் ஆசிரியர் பிரிவு (editorial section), தொழில் நுட்பப்பிரிவு (technical section), சந்தைப்பிரிவு (marketing section) ஆகியனவாகும். சந்தைப்பிரிவில் பத்திரிகைச்சுழற்சி பிரிவும் (circulation section) விளம்பரப்பிரிவும் (advertising section) உள்ளடங்கும். இதுபோலவே நேரடித் தொடர்புப் பத்திரிகையிலும் தொழில்நுட்பக்குழு (technical team), ஆசிரியர் குழு (editorial team) அல்லது உள்ளடக்கக் குழு (contact team), சந்தைக்குழு (marketing team) ஆகியன உள்ளன. நேரடித் தொடர்புப் பத்திரிகைக் குழுவின் உறுப்பினர்கள் ஓர் இடத்தில் இருந்து பணிபுரிய வேண்டும் என்று அவசியமில்லை. அவர்கள் தங்களதுஇருப்பிடங்களிலோ அல்லது வேறு துணை அலுவலகங்களிலோ இருந்துகொண்டு தங்களது கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ளலாம். இதற்கு இணைப்பகம் அவர்களுக்கு உறுதுணையாக நிற்கிறது.அச்சுப்பத்திரிகை பொதுவாக ஒருநாள் அல்லது 24 மணிநேரத்திற்கு ஒரு தடவை வெளியிடப்படுகிறது. ஆனால் நேரடித் தொடர்புப்பத்திரிகை உயிரோட்ட சாதனமாக (live medium) விளங்குவதால் அது பொதுவாக ஒரு நாளைக்கு நான்கு தடவை தரப்படுத்தப்(update)படுகின்றது. மேலும் இதில் வரும் செய்திகளை வாசகர்கள் எளிதில் அறிந்துகொள்ள அவைதலைப்புவாரியாகவும், தகவ்வாரியாகவும் கொடுக்கப்படுகின்றன. மேலும் நேரடித்தொடர்பு பத்திரிகைகள் ஆவணக்காப்பக (archieve) வசதியையும் இணைப்பகத்தில் கொண்டுள்ளன. இணைப்பகத்தில் உடனுக்குடன் பரபரப்புச் செய்திகளும் (flash news)

வெளியிடப்படுகின்றன. இதுபோன்று தகவல்களை வானொலியிலும், தொலைக்காட்சியிலும் கொடுக்கமுடியும்.இருப்பினும் வானொலி, தொலைக்காட்சி ஆகிய இருமுகத் தொடர்பு சாதனமாக இல்லாததால் அவை இணைப்பகத்துடன் அதற்கு இணையாகப் போட்டிபோடுவது என்பது இயலாதகாரியமாகும்.

நேரடித்தொடர்புப் பத்திரிகைகள் தகவல் நுட்ப வல்லுநர் (information technology specialist), தகவல் தொடர்பு வல்லுநர் (communication specialist) ஆகியோரைக் கொண்டு நடத்தப்படும்போது பத்திரிகையின் உள்ளடக்கம் (contents), காட்சி (display), வரைத்திட்டம் (layout) ஆகியன நல்முறையில் வாசகர்களைக் கவரும் வண்ணம் சிறப்பாக அமையும். இதனால் பத்திரிகையின் நிர்வாகச் செலவு குறைகிறது; பத்திரிகையின் பெயர் ஓங்குகிறது.

ஒரு நேரடித் தொடர்புப் பத்திரிகை ஆசிரியர் ஒரு சிறந்தநிர்வாகியாகவும் எழுத்தாளராகவும் இருந்தாலும் அவர் இதுபோன்ற தொழில்நுட்ப வல்லுனரை தனக்கு உதவியாளராக வைத்துக்கொள்ளவேண்டும். அவர் அவ்வாறு வைத்துச்செயல்படும்போது பத்திரிகையின் தரமும் காட்சியும் நன்கு அமையப்பெறும். மேலும் நேரடித் தொடர்புப்பத்திரிகை ஆசிரியர்கள் கலை உணர்ச்சிமிக்கவராகவும், புத்திகூர்மை உடையவராகவும், இலக்கியநயம் மிக்கவராகவும் இருத்தல் நன்று. இத்தகுதிகள் அச்சுப்பத்திரிகை ஆசிரியருக்கும் பொருந்தும்.

வளரும் சூழலுக்கு ஏற்ப அச்சுப்பத்திரிகை ஆசிரியர்கள் இணைப்பகப் பத்திரிகை ஆசிரியராகச் செயல்பட வேண்டிஉள்ளதால் அவர்கள் இணைப்பகத்தின் தொழில்நுட்பம் பற்றி அறிந்துகொள்வது அவசியமாகிறது. இதன் காரணமாக இணைப்பகப் பத்திரிகையும் அச்சுப்பத்திரிகைபோல மந்தமாகவும் (dull), உணர்வுமிக்கதாகவும் (serious) இல்லாது புத்திகூர்மையானதாகவும் (smart), வாழும் உயிரினமாகவும் (lively creature) இருக்கும். இதற்குச் சிகரமாக விளங்குவது அதனின்உண்மைத் தன்மையாகும். இத்தகவல் உலகம் டிஜிட்டல் (digital) உலகமாகும். ஆடம் ஸ்மித், கார்ல்மார்க்ஸ் ஆகியோர் "இந்த டிஜிட்டல் உலகின் திட்டமில்லா விளைவு (unintended consequence) விமர்சகத்தின் மாற்று (critical variable) என்று கூறியுள்ளனர்.

ஒரு நல்ல உண்மையான (conscientious) பத்திரிகை ஆசிரியர் வாசகர்களின் (sprawling newspaper readership) மன உணர்வைப் (taste) புரிந்துகொண்டு அதற்கேற்பச் செய்திகளை வழங்கவேண்டும். இவ்வாறு தகவல்களை வழங்க இவ்வகைக் களங்களும் அதற்குரியவல்லுனர்களைத் (specialists) தேடிக்கொண்டு உள்ளன.

இணைப்பகம் வாசகர்களைத் "தம்மில் ஒருவராகவும்", தரும் தகவல்களைக் "கடமையின் குரலாகவும்" கருதுகிறது. இது தேசியநீரோட்டப் பத்திரிகை போன்று அதிகாரக் (commanding) குரலாகவோ, எதேச்சதிகாரப்போக்குடைய தகவலாகவோ (authoritative) இருக்காது. அத்தகவல்கள் பெரும்பாலும் அவற்றின் இலக்கை (objective) நோக்கிய

அறிவிப்பாகவும் (reportial) அல்லது விளக்கப்பதிப்பு வகையாகவும் (subjective editorial type) இருக்கும். வாசகர்களும் நேரடித் தொடர்பு ஆசிரியர்களுடன் தம் கருத்தையும் எண்ணத்தையும் பரிமாறிக்கொள்ளமுடியும்என்பதால் அவர்களது பணியும் கற்பனையில்லா (real) உண்மை உலகமாக (virtual world) விளங்குகிறது.

இணைப்பகத்தில் தகவல்களைச் சேமிக்க ஆவணக் காப்பக வசதி உள்ளதால் வாசகர்கள் தாம் விரும்பும் செய்திகளைத் தமதுகணினி கோப்பில் (file) சேமித்து வைத்துக்கொண்டு விரும்பும்போது படிக்கலாம். மேலும் ஆவணக் காப்பகத்தில் தகவல்கள் தேதிவாரியாகவும், இடவாரியாகவும், தலைப்புவாரியாகவும் சேமித்து வைக்கப்பட்டிருக்கும். இதனால் வாசகர்கள் தமக்குத் தேவையான செய்திகளை எளிதாகதேர்வுசெய்துகொள்ளமுடியும்.

அச்சுப்பதிப்பில் உள்ளூர் (local), வட்டாரம் (regional), தேசியம் (nation) என்ற அளவில் பதிப்புக்கள் உள்ளன. ஆனால் இணைப்பகத்தில் இவ்வாறு பதிப்புக்கள் கிடையாது. இருப்பினும் அதில் செய்திகளை இடவாரியாகத் தொகுத்துப் பதிப்பிக்கலாம்.

அச்சுத்தாள் வரிவிளம்பரங்கள், ஏல விளம்பரங்கள் போன்றவற்றை வெளியிடுவதற்கு ஒரு சாதனமாக விளங்குகிறது. ஆனால் நேரடித்தொடர்புப் பத்திரிகைகளை வெளியிட இணைப்பகம் ஒரு சாதனமாக விளங்குகிறது. இதன் காரணமாக விளம்பரதாரர் நேரடித் தொடர்புப் பத்திரிகை வலைக்களத்தைப் பயன்படுத்துவதற்குப் பதில் இணைப்பகத்தைப் பயன்படுத்திக்கொள்ளலாம். இதனால் நேரடித்தொடர்புப் பத்திரிகைகள் இவ்விளம்பரங்களின் வருவாயை இழக்க நேரிடலாம். இன்று இணைப்பகம் மூலம் தகவல்களை விற்க உலகமுழுவதும் பல நேரடித் தொடர்பு விற்பன்னர் (online vendors) உள்ளனர். அதுபோல பல நேரடித் தொடர்பு தகவல் தளங்களும் (online data bases)உள்ளன.

இன்று இணைப்பகப் பத்திரிகையை எதிர்நோக்கியுள்ள முக்கிய சவால்களாகப் பின்வருவனவற்றைக் கூறலாம்: 1. பிரசுர சட்ட உரிமை மீறல் (copy-right infringement) 2. அவதூறு வழக்குகளை நாடு கடந்து அணுகுவதில் உள்ள சிக்கல்கள் 3. விளம்பரப்பிரசுர உரிமைகள் மீறப்படும்போது அதைத் தீர்ப்பதற்குப் பத்திரிகைக் குழுவை நாடுவதா அல்லது சம்பந்தப்பட்ட நாட்டின் ஒழுங்குமுறை அமைப்பை நாடுவதா (regulation body) 4. அச்சு வடிவை (image) உடைத்து புதிய வடிவம் கொடுத்தால் அதனால் ஏற்படும்பிரச்சனைகள்.

ஆனால் இன்று இந்தியாவிலிருந்து வெளிவரும் நேரடித்தொடர்புப் பத்திரிகைகள் (Redift the net, India World, India Express, Cyber India Online, India on the net).

தினசரி அச்சுப்பத்திரிகைகள் (Hindustan Times, Indian Express, The Hindu, The Telegraph, The Pioneer, The time of India, etc.,).

அச்சு இதழ்கள் (Femina, Filmfare, Frontline, E.Magazine, India Today, Outlook, The Week, etc.,) ஆகியன இணைப்பகத்தில் பதிப்பிக்கப்படும்போது அச்சு வடிவத்திலேயே பதிப்பிக்கப்படுகின்றன.

தகவல் தொழில்நுட்பங்கள் (Videotex, teletext, teleconferencign, E-mail, remote computing, Electronic journal, Fax, Electronic Data Interchange) தகவல் பரிமாற்றத்தில் பல புதுமைகளைப் புகுத்திஉள்ளதுபோலவே, அச்சு சாதனைங்களும் பல புதிய பரிமாணத்தைப் பெற்றுநேரடித் தொடர்புப் பத்திரிகைச் சொதனமாக மாறியுள்ளன.இந்த அச்சுத்தாள் இல்லாத சாதானம்தான் (Paperless media) 21-ஆம் நூற்றாண்டின் வெற்றிக்கொள்ளமுடியாத டிஜிட்டல்சாதனமாகக் கருதப்படுகிறது.

## துணை நூற்பட்டியல்

Dinesh C.Sharema, Online Journalism, taken off, Vidura, Vo.35, No.4, p.p.4-9.
Arun Bhattacharjea, Newspapers of the Future, Vidura, vol.36, No.1 Jan-Mar 1999. pp. 40-41

# 35.சிறுதெய்வ வழிபாட்டில் கார்த்திகை தீபமும் வளமைச் சடங்குகளும்

டாக்டர் கு. கதிரேசன்
விரிவுரையாளர், ஆதித்தனார் கல்லூரி
திருச்செந்தூர்

தமிழர் பண்பாட்டில் வழிபாட்டினை தெய்வங்கள், அவற்றின் இயல்புகளின் அடிப்படையில் குல தெய்வ வழிபாடு, ஊர்த்தெய்வவழிபாடு, சிறுதெய்வ வழிபாடு, பெருந்தெய்வ வழிபாடு என நான்கு நிலைகளில் வகைப்படுத்தலாம். குலதெய்வமாக வழிபடப்பட்ட ஒரு தெய்வம் காலப்போக்கில் ஊர்தெய்வமாகவோ சிறு தெய்வமாகவோ பெருந்தெய்வமாகவோ வழிபடப்படும் வளர்ச்சிப் பரிணாமத்தை ஆய்வுப்பூர்வமாக நிறுவலாம். சிறு தெய்வங்கள் என்பவை ஒரு கிராமத்தாராலோ பல கிராமத்தாராலோ அம்மக்களின் வாழ்வியல் யதார்த்தங்களைப் பிரதிபலிக்கம் பண்பாட்டுக் கூறுகளுடன் வழிபடப்படு பவையாகும். ஒரு சில தெய்வங்கள் குல தெய்வங்களாகவே நின்று போகலாம். ஒரு சில ஊர்த்தெய்வமாக வளரலாம். பல சிறு தெய்வங்களாகப் பரிணாமம் பெறலாம். ஆயினும் இவை உள்ளீடு அடிப்படையில் ஒரே இயல்புடையவையானவே இம்மூவகைத் தெய்வங்களும் சிறு தெய்வங்கள் என்றே வழங்கப்படுகின்றன. தமிழகத்தில் ஏறத்தாழ ஆயிரத்திற்கும் மேல் சிறு தெய்வங்கள் இருப்பதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இத் தெய்வங்களில் அம்மன், ஐயனார், சுடலைமாடன், பிரம்மசக்தி, பத்திரகாளி, இசக்கியம்மன் முதலியவை தென்மாவட்டப் பகுதிகளில் பெரும்பான்மையாக வழிபடப்படுகின்றன. இக்கோயில்களில் நிகழ்த்தப்படும் சிறப்பு வழிபாடுகளில் திருக்கார்த்திகை தீபவிழாவும் ஒன்று. இவ்விழாவில் பல நம்பிக்கை அடிப்படைச் சடங்குகளை மேற்கொள்வதைக் கள ஆய்வின் மூலம் அறியலாம். அகல் விளக்கு தீபமேற்றி பல்வேறு பொருட்களைப் படைத்து, பகுத்துண்டு மகிழ்கின்றனர். இத்தகைய தீப வழிபாடும் சடங்குகளும் 'வளமை' நோக்க அடிப்படை நிகழ்வுகளாகும். இவை காலம் காலமாகத் தொடர்ந்து மக்களின் பண்பாட்டைப் பிரதிபலிக்கும் பதிவு பெறாத வழக்காறுகளின் சாசனங்கள் ஆகும். பொதுவாக இவ்வழிபாடு அவரவர் வீடுகளிலும் நிகழ்த்துவதுண்டு. கோயில்களிலும் சிறப்பு வழிபாடாக அமைவதுண்டு. எனவே கார்த்திகை தீப வழிபாடு சிறுதெய்வக் கோயில்களில் பெறும் இடம் யாது? இதில் வளமை நோக்கச் சடங்குகள் எவ்வாறு பரிணமிக்கின்றன? மக்கள் பண்பாட்டை அவை எவ்வாறு உணர்த்துகின்றன? என்பவற்றை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

இந்து சமயத்திற்கும் தீபத்திற்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. 'தீ'பமே இவ்விழா வழிபாட்டிற்கும் அடிப்படையாக அமைகிறது. கார்த்திகை மாதமும்

அதில் வரும் கார்த்திகை நட்சத்திரமும் இந்து சமயக் கடவுளான முருக வழிபாட்டில் முக்கியத்துவம் பெறுகின்றன. முருகன் ஆறு குழந்தைகளாக இருந்த நிலையில் கார்த்திகைப் பெண்களே அவனை வளர்த்தனர் என்றும் பின்பு அவர்கள் விண்மீன்களாக மாறி ஒளி கொடுத்தனர் என்றும் கந்தரபுராணம் கூறுகிறது. எனவே தமிழ்க்கடவுளாக முருகனை வளர்த்த கார்த்திகைப் பெண்ணை குறிக்கும் கார்த்திகை மாதம்கார்த்திகை நட்சத்திரத்தன்று நோன்பும், சிறந்த வழிபாடும் கொண்டாட்டமும் நிகழ்த்தப்படுகின்றன. பெண்கள் அவரர் வீடுகளில் விரதமிருந்து வழிபாடு செய்து விரதத்தை முறிக்கின்றனர். மேலும் அயனும் மாலும் அறியமுடியாதவாறு சிவபெருமான் நெருப்புத்தூணாக நீண்டு நின்ற நாள் அது. இந்நெருப்பை உணர்த்தும் குறியீடாக தீபம் எடுத்தாளப்படுகிறது. இத்தொன்மத்தினடிப்படையிலேயே திருவண்ணாமலை தீபமும் ஏற்றப்படுகிறது என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இந்தப் பின்னணியிலேயே தமிழர்கள் கார்த்திகை தீபத்தை'திரு' அடைமொழியாக சேர்த்து மிகச்சிறந்த வழிபாடாகக் கொண்டாடி வருகின்றனர்.

கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நட்சத்திரம் அன்று முழுவதும்தென் மாவட்டத்து மக்கள் குறிப்பாகப் பெண்கள் உண்ணாநோன்பிருக்கின்றனர். நீர்ம உணவை மட்டுமே உட்கொள்கின்றனர். வீடுகளைச் சுத்தம் செய்து, மஞ்சள், பச்சரிசி ஆகியவற்றை இடித்துத் தயாரித்த கலவையில் நிலை, கதவு, ஜன்னல் மற்றும் படிக்கட்டுகளில் நட்சத்திரங்கள் பொறித்து குங்குமம் வைக்கின்றனர். இதற்காக ஆமணக்கு, பப்பாளி ஆகிய தாவரங்களின் இலையைப் பயன்படுத்துவர். இலை தண்டோடு இணைத்துள்ள நரம்புகள் தன்மைக்கேற்ப நட்சத்திரங்கள் அமைகின்றன. மாலை மயங்கும் நேரத்தில் மண்ணால் செய்யப்பட்ட சிறிய அகல்விளக்குகளில் எண்ணெய் திரியிட்டு தீபம் ஏற்றி வாயில்களிலும் சுற்றுப்புறங்களிலும் மதிற்சுவர்களிலும் வைத்து அழகுபடுத்துகின்றனர். பலர் அகல்விளக்குக்குப் பதிலாக மெழுகுவர்த்திகளை ஏற்றி அழகுபடுத்தும் வழக்கம் காணப்படுகிறது. தற்காலத்தில் பொருளாதார நிலைக்கேற்ப சிறிய அலங்கார சரமின்விளக்குகளைப் போட்டு அழகுபடுத்துவதும் உண்டு. பின், பச்சரிசி, பாசிப்பயறு, தேங்காய், வெல்லம், ஏலக்காய், முந்திரி ஆகியவை கொண்டு பனை ஓலை 'கொழுக்கட்டை' தயாரித்து அதனைக் கடவுள்களுக்குப் படைத்து தீபம் ஏற்றி வழிபட்டு பகுத்துண்டு மகிழும் வழக்கம் காணப்படுகிறது. 10 முதல் 15 செ.மீ. நீளம் கொண்டதாக மாவை உருட்டி பனை ஓலையில் வைத்து நீராவியில் வேகவைப்பதால் 'பனை ஓலைக் கொழுக்கட்டை' எனப்படுகிறது.

கொழுக்கட்டைக்கான பொருட்கள் பெரும்பாலும் அவரவர் விளை நிலங்களில் கிடைத்த பொருளாக அமைய வேண்டும் என்பதுநம்பிக்கை. மேலும் விநாயகருக்குக் கொழுக்கட்டை மிகவும் பிடித்த பொருள் என்பதனால் அது விரும்பிப் படைக்கப்படுகிறது. ஆயின் உளவியல் அணுகுமுறையில் பார்க்கும்பொழுது இது ஒரு வளமைக் குறியீடு ஆகும். ஓலைக்

கொழுக்கட்டையின் அமைப்பையும் அதன் உருவாக்கச் சூழலையும் பின்புலத்தையும் ஆராயும் பொழுது அது அவர்கள் அடிமனத்தில் பதிந்திருக்கும் பாலியல் உணர்வுகளின் பிரதிபலிப்புகள் என்று கொள்ள வாய்ப்பேற்படுகிறது. அதோடு தங்கள் நிலத்தில் கிடைத்த விளைபொருட்களை கொழுக்கட்டையாக செய்து படைப்பதும் பகுத்து உண்பதும் முழுமையான வளமைச் சடங்கின் வழி வந்த வழக்காறு என்று கொள்ளலாம்.

அதோடு நோன்பு மேற்கொள்வதும் மஞ்சள், பச்சரிசி கலவையினால் நட்சத்திரக்குறி பொறித்து குங்குமம் இடுவதும் அகல் விளக்கினால் அலங்கரிப்பதும் தீபம் ஏற்றி அதை வழிபடுவதும் முழுமையான வளமைச் சடங்குகள் ஆகும். இவை அம்மக்களின் வளமை நோக்கச் சிந்தனைகளின் பிரதிபலிப்பே எனலாம்.

மேலும் சிறுவர்கள் சூரிய அஸ்தமத்திற்குப் பின், காய்ந்த பனை, தென்னை ஆகியவற்றின் ஓலை, வாழை சருகு ஆகியவற்றினால் செய்த தீப்பந்தங்களைக் கையில் ஏந்தி தெருக்களில் ஊர்வலமாக எடுத்துச் செல்கின்றனர். இதனால் இருளில் பதுங்கியிருக்கும்பேய்கள் விலகி ஓடுகின்றன என்ற நம்பிக்கை நிலவுகிறது. ஊரைச் சுற்றிலும் உள்ள எல்லைப்புற சிறு தெய்வங்களான அம்மன், ஐயனார், பத்திரக்காளி, பிரம்மசக்தி, சுடலைமாடன், இசக்கியம்மன் முதலியவற்றின் கோயில்களின் முன் தீப்பந்தங்களை நட்டு பாடி, ஆடி குரவையிட்டு ஆரவாரம் செய்து மகிழ்வதுண்டு.

சூவே... சூ...
கார்த்திகை மாதம் வந்தது
கானமழை பொழிஞ்சது
கார்த்திகை தீபம் வந்தது
காத்து கருப்பு ஒழிஞ்சது
கழனி விதைச்சி முடிஞ்சது
காடும் மேடும் விளைஞ்சது
சூவே... சூ...

(ஆறுமுகம்: முதுமொத்தன் மொழி)

என்ற பாடல் அடிகள் மூலம், வளம் பெறுவதையும் பேய்கள் விலகுவதையும் விரும்பிச் செய்யும் சடங்கு இது என்பது புலனாகிறது. தீப்பந்தத்தை 'சூ...' என்று அழைக்கும் மரபு காணப்படுகிறது. 'சூ' என்பது ஒரு உயிரினத்தை விரட்டி ஓட்டுவதற்குத் தென்பகுதி மக்கள் பயன்படுத்தும் ஒலிவடிவம் ஆகும். இங்கு இருளையும் அதற்குக் குறியீடாக உள்ள பேய்களையும் விரட்டும் நோக்கிலேயே 'சூ' என்ற ஒலி வடிவம் பயன்படுத்தப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது. எனவே இவ்வழக்காறு முழுமையான வளமைச் சடங்கு என்பதை மேற்குறித்த பாடல் தெளிவாக்குகிறது இவ்வாறு வழிபடப்படும் தெய்வங்களும் வளமைத் தெய்வங்களே. இத் தீப்பந்த நடுதல் வழிபாடு சங்ககாலவழக்காறுகளான நடுகல், வேல் மற்றும் கேடயங்களை நிறுத்துதல், கழுவேற்றுதல், வெற்றி மரங்களை

நாட்டல் முதலிய பண்பாட்டு மரபுகளோடு தொடர்புடையது. இவ்வழக்காறுகள் அனைத்தும் ஒன்றிருந்து ஒன்று பரிணமித்ததாகவே இருக்கவேண்டும்.

'பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுதல்'

வேலூன்றி பலகை வேற்றுமுனை கடுக்கும்' என்னும்

அகநானூற்று (131) அடிகளும்

'பல்லான் கோவலர் படலை சூட்டக்

கல்லாயினையே கடுமான் தோற்றல்' என்னும் புறநானூற்று (264) அடிகளும் நடுகல் வழக்காற்றை உணர்த்தும் சான்றுகள் ஆகும். தீப்பந்தங்களை ஏந்துவது யார்? என்ற போட்டி நிலவுவதும் இதன் பொருட்டு பல நாட்களுக்கு முன்பே தீப்பந்தம் தயாரிக்கத் தொடங்கிவிடுவதும் மேற்குறிப்பிட்ட கருத்தை உறுதி செய்கின்றன. தற்காலத்தில் தீப்பந்தங்களுக்குப் பதிலாக சைக்கிள் டயர், டியூப்களைக் கொழுத்தும் வழக்கு பெருகி வருகிறது. பயன்படு பொருட்கள் மாறினும் 'தீ' என்னும் மையப் பொருள் மாறவில்லை.எனவே நெருப்பை கார்த்திகை தீபத்தின் மையப் பொருளாகக் கொண்டு வழிபடும் பண்பாட்டு மரபை இனம் காணமுடிகிறது. சில கிராமங்களில் சிறுவர்கள் கார்த்திகை மாதம் முழுவதும் தினமும் இவ்வழிபாட்டை மேற்கொள்கின்றனர். ஒவ்வொரு நாளும் ஒரு தெய்வத்திற்குத் தீப்பந்தம் நட்டு வழிபாடு செய்கின்றனர். கார்த்திகை தீபநாள் மட்டும் எல்லா கோயில்களையும் வழிபட வேண்டும் என்பது நியதி. இரவு அடர்ந்திருக்கம் இருளை அகற்றி ஒளியைக் கொடுக்கும் இவ்வழக்காறு பசியையும் பஞ்சத்தையும் போக்கி வறுமையை விரட்டி வளத்தை நிலை நாட்டும் மக்களின் அடிமன உணர்வின் வெளிப்பாடகவே இருக்க முடியும். இச்சடங்கின் போது தீப்பந்தம் ஏந்தும் இளைஞர்களின் அகமும் முகமும் சுடர் போன்று பிரகாசமாக இருப்பதை உளவியல் ரீதியாக ஆராய்ந்தால் அவர்கள் உள்ளம் ஒளியை விரும்புகிறது. வளத்தை நாடுகிறது என்ற உண்மையை இனம் காணமுடியும்.

மேலும் சிறுதெய்வக் கோயில்களின் முன்போ ஊரின் பொதுஇடத்திலோ 'சொக்கப்பனை' என்னும் ஒருவகை மிகப்பெரிய தீப்பந்தத்தை நாட்டி அதற்கு மாலையிட்டு தேங்காய் பழம்படையலிட்டு பூசை செய்து தீயிட்டு மகிழும் வழக்காறு இன்னும் காணப்படுகிறது. இதில் இடம் பெறும் சடங்குகள் அம்மக்களின் வாழ்வியலையும் வலிமை நோக்கப் படிமங்களையும் மிகத் துல்லியமாக எடுத்துரைக்கின்றன. எனவே விநோதமான இச்சடங்கினைப் பதிவு செய்வதும் அதில் ஊடுருவியிருக்கும் நம்பிக்கைகளை ஆராய்வதும் மிக இன்றியமையாதது. தமிழர்களின் சிறுதெய்வ வழிபாட்டில் மிகப்பெரிய அங்கமான மர வழிபாட்டை இங்கு ஒப்பு நோக்குவது அவசியம். அரசு, ஆல், வேம்பு, பனை, பூவரசு, வேங்கை, அத்தி, வில்வம், வன்னி உள்ளிட்ட பல மரங்களைத் தெய்வம் உறைந்திருக்கும் இடமாகக் கொண்டு மாலையிட்டு படையல் வைத்து பூசிக்கும் மரபை இன்றும் காணமுடிகிறது. மேலும் பன்னிரு ஆண்டுகளுக்கு ஒருமுறை மலரும் குறிஞ்சி மரத்தையும் நூறு ஆண்டுகளுக்கு ஒருமுறை தங்கநிற மலர்களைத் தரும்

குடைப்பனை மரத்தையும் மிகவும் புனிதமான மரங்களாக எண்ணி வழிபடும் வழக்காறை இங்கு பொருத்திப் பார்ப்பது அவசியம். குடைப்பனை மரம் பூத்துக்குலுங்குவதைக் காண்பது மிக அரிது என்பதால் அது சிறப்பிக்கப்படுகிறது. மேலும் ஒவ்வொரு பெருந்தெய்வக் கோயில்களிலும் கொடிமரம் ஒன்று வைத்து கொடியேற்றப் படுவதும் சிறுதெய்வக் கோயில்களில் 'பந்தல்கால் நடுதல்' என்று ஒரு மூங்கில் கழையில் வேப்பிலை மாவிலை, மஞ்சள், பூ ஆகியவற்றைக் கட்டி அதனை விழா முடியும் வரைப் பாதுகாப்பதும் யாவரும் அறிந்த வழக்காறுகள் ஆகும். திருமண வீடுகளிலும் முகூர்த்தக் கால் என்ற பெயரிலும் புதிய வீடு அமைப்போர் கால் நடுதல், நிலையிடுதல் என்ற பெயரிலும் மரங்களை நாட்டி அதனைப் புனிதமாக எண்ணி வழிபட்டு வருகின்றனர். எனவே மரம் நடுவதும் அதனை வழிபடுவதும் தமிழர் பண்பாட்டில் சமய நம்பிக்கை அடிப்படைச் சடங்காக இருந்து வருகிறது. இந்த பின்னணியிலேயே திருக்கார்த்திகை தீபநாள் அன்று கோயிலின் முன் பொது இடத்தில் 'சொக்கப்பனை' என்ற மிக உயர்ந்த தீப்பந்தத்தை நாட்டி வழிபடுவதை எண்ணிப் பார்க்க முடிகிறது.

சொக்கப்பனை என்பது உயரமான பப்பாளி மரத்தை வெட்டியெடுத்து அதனைச்சுற்றி பனை, தென்னை ஆகியவற்றின் காய்ந்த ஓலை, வாழை சருகுகளால் அடர்த்தியாகக் கட்டப்படுவதாகும். இதனைக் கோயில் முன்னோ, ஊர் பொது இடத்திலோ நாட்டி அதற்குரிய வழிபாட்டுச் சடங்குகளை மேற்கொண்டு நுனிப்பகுதியில் தீ வைத்து எரிய விடுவர். தீ எரியத் தொடங்கியவுடன் ஏற்படும் ஒளியுடன் மக்கள் முகத்தில் தோன்றும் ஒளி ஒப்பு நோக்கத் தக்கது. இது மக்களின் வளர்ச்சிப் படிநிலை மன ஓட்டத்தைப் பிரதிபலிப்பதாகும். இது உயரமாகப் பனைபோன்று காணப்படுவதால் இதற்குச் 'சொக்கப்பனை' என்று பெயர் வந்திருக்கலாம். எரிந்து முடிந்தபின் எஞ்சி நிற்கும் பப்பாளி மரத்தின் அடிப்பகுதியில் சுற்றிலும் வெட்டுகின்றனர். இந்நிலையில் மக்கள் தெய்வங்களை நினைத்து வணங்கி கன்னத்தில் போட்டுக்கொள்வதைக் காணலாம். வெட்டப்பட்ட பப்பாளிமரம் எந்தத் திசையில் விழுகிறது? என்பதைப் பொறுத்து அந்த ஆண்டு நன்மையோ, தீமையோ, இன்பமோ, துன்பமோ, வளமோ, வறுமையோ ஏற்படும் என்று நம்பிக்கையே அதற்குக் காரணம். வெட்டப்பட்ட பப்பாளமரம் கிழக்கு திசையில் விழுந்தால் மிகவும் நல்லது. அவ்வாண்டு நல்ல மழையும் விளைச்சலும் கிடைக்கும். வடக்குத் திசையில் விழுந்தால் வறுமையும், மேற்குத் திசையில் விழுந்தால் குறைவான மழையும், தெற்குத் திசையில் விழுந்தால் நல்ல மீன் கிடைக்கும் என்ற நம்பிக்கை நிலவுகிறது. எனவே பெரும்பாலும் கிழக்கு திசையில் சொக்கப்பனை விழ வேண்டும் என்றே விரும்புகின்றனர். தெற்குத் திசையில் விழுவதை மீனவர்கள் தவிர பிறர் விரும்புவதில்லை. பொதுவாகவே கிழக்கு திசையில் சொக்கபனை விழ வேண்டும் என்றே விரும்புகின்றனர். தெற்குத் திசையில் விழுவதை மீனவர்கள் தவிர பிறர் விரும்புவதில்லை. பொதுவாகவே கிழக்கு திசையை எல்லா சிறு தெய்வ வழிபாட்டோடும், சூரிய உதயத்தோடும் வளமை நோக்கில் சிறப்பித்துக் கூறும்

மரபைக் காணமுடிகிறது. கோயில்கள் கட்டிடங்கள் வீடுகள் அனைத்தும் கிழக்கு நோக்கி இருப்பதே சிறப்பு என்று மனையடி சாஸ்த்திரம் கூறுகிறது. கிழக்கு திசை வளர்ச்சி வளம் முதலிய கருத்தோட்டங்களின் பின்னணியில் சிறப்பிக்கப்படுவதால் சொக்கப்பனையும கிழக்கு திசை நோக்கி விழுவதையே சிறப்பாகக் கருதுகின்றனர். இவ்வாறு விழுந்தால் மக்கள் மனம் பூரிப்போடும் பிற திசைகளில் விழுந்தால் மனச்சஞ்சலத்தோடும் மாறி தெய்வக்குறையே இதற்குக் காரணம் என்றும் நம்புகின்றனர்.

சொக்கப்பனை எரியும் பொழுது கிராமம் முழுமையும் மண்டியிருக்கும் இருள் அகன்று ஒளி கிடைக்கிறது. துன்பம் நீங்கி இன்பம் தளைக்கிறது. எங்கும் வளம் பெருகும் உயர்ந்த சிந்தனை குடிகொள்கிறது. சிவபெருமான் நெருப்புத்தூணாக உயர்ந்த நின்ற தன்மையை உணர்த்த சொக்கப்பனை எடுத்தாளப்படுகிறது. எனவே சொக்கப்பனை சிவபெருமான் நெருப்புத்தூணாக உயர்ந்து நின்ற தொன்மத்தின் படிமமாக வெளிப்படுவதை அறியலாம். சிவபெருமான் அதன் மூலம் இந்த உலகிற்கே ஒளி கொடுப்பதும் சொக்கப்பனை அந்த ஊருக்கே ஒளி கொடுப்பதும் உள்ளீடு அடிப்படையில் ஒரே இயல்புடையவை என்பது அறியத்தக்கது.

எனவே சிறுதெய்வக் கோயில்களில் நிகழ்த்தப் பெறும் திருக்கார்த்திகை தீப வழிபாடும் நம்பிக்கைகளும், சடங்குகளும் முற்றிலும் வளமையை அடிப்படையாகக் கொண்டு, மக்களைப் பற்றி மக்களால் வெளிப்படுத்தப்படும் பண்பாட்டுச் சின்னங்களே ஆகும். இவ்விழாவில் வழிபடப்படும் தெய்வங்கள், வழிபாட்டு முறைகள், பயன்படு பொருட்கள், பண்பாட்டு மரபுகள், வழக்காறுகள் அனைத்தும் ஏதாவது ஒரு வகையில் வளமைப் படிமங்களோடு தொடர்புடையவையே. எனவே கார்த்திகை தீபம் ஒரு முழுமையான வளமைச் சடங்கு விழாவாகும். அதனால் அவற்றில் மக்களின் பண்பாட்டு மரபுகளையும் வாழ்வியல் யதார்த்தங்களையும் இனம் காண முடிகிறது.

# 36. வட்டார வழக்குச்சொல்லகராதி ஆய்வுக்குறிப்புரை

*பெ. முருகன்*

தமிழ் விரிவுரையாளர்

அ.அ. அரசு கலைக் கல்லூரி, ஆத்தூர், சேலம்.

வட்டார வழக்குக்கான அகராதிகள் தமிழில் அதிகம் இல்லை. பதினெட்டாம் நூற்றாண்டில் வீரமாமுனிவர் "வட்டார வழக்குத் தமிழ் அகராதி" ஒன்றைத் தொகுத்திருப்பதாகத் தெரியவருகிறது.[1] அவ்வகராதி கிடைக்கவில்லை. அதன்பின் இவ்வகையில் மூன்று அகராதிகள் வெளிவந்துள்ளன. அவை "வட்டார வழக்குச் சொல்லகராதி" (கி. ராஜநாராயணன்)[2] "வழக்குச் சொல் அகராதி" (புலவர் இளங்குமரன்)[3] செட்டிநாட்டில் தமிழ் வழக்கு (சுப சண்முகம்)[4] ஆகியனவாகும். இவற்றுள் "வழக்குச் சொல் அகராதி" குறிப்பிட்ட வட்டாரத்தை அடிப்படையாகக் கொள்ளாமல் பொதுவாக "உலக வழக்கு" என்னும் போக்கில் தொகுக்கப் பெற்றுள்ளது. மேலும் மரபுத் தொடர்புகளையே பெரிதும் கொண்டுள்ளது. இதை வட்டார வழக்கு அகராதி என்று கொள்ள இயலாது. "செட்டி நாட்டில் தமிழ் வழக்கு" என்பதும் முழுமையானதாக உருப்பெறவில்லை. ஆசிரியரின் ஆர்வத்தை ஒட்டி, அவருக்கு இயன்ற வகையில் தொகுக்கப்பெற்ற சொற்களைக்கொண்ட சிறிய அளவினதாகும். அகராதி முறையையும் பெரிதும் கைக்கொள்ளவில்லை. கி.ராஜநாராயணனின் அகராதியே "வட்டார வழக்கு" என்பதற்கு மிகவும் பொருத்தமாக அமைந்துள்ளதும் புதிய வழியைத் தமிழில் உருவாக்கி உள்ளதுமான அகராதியாகத் திகழ்கிறது. இது நெல்லை – கரிசல் வட்டாரத்தில் வழங்கும் சொற்களைத் தொகுத்துள்ள அகராதியாகும்.

கி.ராஜநாராயணன் கல்விப்புலம் சார்ந்தவர் அல்லர், புனைகதை எழுத்தாளர். தமது வட்டாரத்தின் மேல் கொண்ட பற்றின் காரணமாக, இவ்வகராதியைத் தொகுத்துள்ளார். ஆகவே நெறிமுறைப்படி இவ்வகராதி அமையாததில் வியப்பில்லை. பல்கலைக்கழகங்கள் செய்யத் தவறிய பெரும்பணி ஒன்றைத் தனிமனிதராக கி.ராஜநாராயணன் செய்துள்ளார் என்பது அவருக்கு மிகவும் பெருமை சேர்ப்பதாகும். தனி மனிதர்களின் ஈடுபாட்டின் காரணமாகவே தமிழ் பல வளங்களைப் பெற்றுள்ளது என்பது பொது உண்மை. இவ்வகையில் கி.ராஜநாராயணன் பாராட்டுக்குரியவர். அவர் அகராதியில் காணப்படும் குறைகளைச் சுட்டிக்காட்ட முயலும் இக்கட்டுரை அகராதியைப்பயன்படுத்துவோர் நோக்கிலிருந்து அணுகுகின்றது. மேலும் இதன் நோக்கம் இவ்வகராதியின் இனிவரும் பதிப்புகள் திருத்தமாக அமைய வேண்டும் என்பதும் வேறுவட்டார வழக்கு அகராதி முயற்சிகளில் ஈடுபடுவோர் இவற்றைக் கவனத்தில் கொள்ளவேண்டும் என்பதுமே ஆகும்.

அகராதிக்கு அடிப்படை சொல் தேர்வாகும். தலைச்சொல்தேர்வில் மிகுந்த கவனம் செலுத்துவது அகராதியின் செம்மைக்கு வழி வகுக்கும். கி.ராஜநாராயணனின் இந்த அகராதி இவ்வகையில் பெரும் குறைபாடுடையதாக அமைந்துள்ளது. வட்டார வழக்குச் சொற்களைத் தொகுக்கும்போது முடிந்த அளவிற்குப் பொதுச் சொற்களைத் தவிர்க்கவேண்டும். குறிப்பிட்ட வட்டாரத்தைச் சேர்ந்த மக்கள் புழங்கும் சொற்களில் பெரும்பான்மை பொதுச் சொற்களாகவே இருக்கும். பொதுச் சொற்களினூடே கலந்துவரும் அந்த வட்டாரத்திற்கு மட்டுமே உரிய சொற்களைக் கண்டறிதல் சிரமமானதுதான். அகராதித் தொகுப்பாளர் அந்தச் சிரமத்தை மேற்கொள்ளத்தான் வேண்டும். எழுத்து வடிவிலான இலக்கியம், இதழ்கள் இவற்றோடு தொடர்புடையவர்களால் பொதுச்சொற்களையும், வட்டார வழக்குச் சொற்களையும் பிரித்து இனம் காண்பது இயலும். கி.ராஜநாராயணன் எழுத்தும்வாசிப்பும் தொழிலாகக் கொண்ட புனைகதை எழுத்தாளர். ஆனால் அவர் சிரமம் எடுத்துக்கொள்ளவில்லை. "அருகி, அருணாக்கயிறு, ஏதாச்சம், ஏகதேசம், ஏகப்பட்ட, கையாள்,கைவரிசை" உள்ளிட்ட ஏராளமான சொற்கள் பொதுவான எல்லோருக்கும் தெரிந்த சொற்களாக உள்ளன. குறைந்தபட்சம் ஏற்கனவே வெளிவந்துள்ள தமிழ் அகராதிகளை ஒருமுறை புரட்டியிருந்தாலே போதும். இத்தகைய சொற்களை எளிதில் இனம் கண்டு தவிர்த்திருக்கமுடியும்.

சொல் தேர்வுசெய்யும்போது பெயர், வினை, பெயரடை, வினையடை ஆகியவற்றைக் கொள்வது முறை. இதில் அம்முறையும் பின்பற்றப்படவில்லை. "அன்ன நடை, நாத்துக்காடாய்" போன்ற உவமைத் தொடர்களும், "எண்ணெய் முந்துதோ திரி முந்துதோ", "துட்டுக்கு எட்டுக்குட்டி வாங்கி எட்டையும் எட்டுத்துட்டு மேனிக்கு வித்தாலும் வட்டித் துட்டுக்கு ஈடாகாது" போன்ற பழமொழிகளும் , "கம்பி நீட்டிட்டான், தலை முழுகிற வேண்டிதுதான்" முதலிய மரபுத்தொடர்களும், "எசகு பிசகு" உள்ளிட்ட இணைச் சொற்களும் தலைச்சொற்களாக இடம்பெற்றிருக்கின்றன. இவற்றைத் தனியாகக் கொடுத்திருக்கலாம். அல்லது இவற்றில் இடம்பெறும் வட்டார வழக்குச் சொற்களை மட்டும்தேர்வுசெய்து பொருள் கொடுத்திருக்கலாம். அப்படிஅமையாத காரணத்தால் சொல்லகராதி போலில்லாமல் களஞ்சியம் போலத் தோற்றம் தருகிறது.

பேச்சு வழக்கில் சொற்களின் ஒலிகள் திரிந்து வழங்குதல் இயல்பு. அகராதிக்கு மக்கள் வழங்கும் திரிபு வடிவத்தை அப்படியேஎடுத்துக்கொள்வதா அதற்குரிய எழுத்து வடிவத்தைப் பயன்படுத்துவதா என்பதை அகராதி ஆசிரியர் முன்கூட்டி முடிவு செய்துகொள்ளவேண்டும். இவ்வகராதியில் இத்தகைய முறைப்படுத்தல் இல்லை. சில இடங்களில் "இடக்கு, உதைப்பு", எனஎழுத்து வடிவத்தையும், வேறு சில இடங்களில் "எசவு, எனம்" எனப்பேச்சு வழக்கையும் இன்னும் சில இடங்களில் "இளக்காரம்,எளக்காரம்" என இரு வடிவங்களையும் தலைச்சொல்லில் பயன்படுத்தியுள்ளார். ஏதாவது ஒரு முறையைப் பின்பற்றி விட்டு

அதை முன்னுரையில் தெரிவித்திருந்தால் அகராதியைப் பயன்படுத்துவோருக்கு எளிதாக இருந்திருக்கும்.

ஒலித் திரிபின் காரணமாக ஒரு சொல் இரண்டு முறை இடம்பெறுவது போலவே தேவையில்லாமல் அடுத்தடுத்து ஒரே சொல் இருமுறை கொடுக்ககப்பட்டிருக்ககிறது. "ஆவி, ஆவியே ஆகாது" என்னும் இரண்டில் "ஆவி" என்னும் சொல்லுக்குப் பொருள் கொடுத்துவிட்டு எடுத்துக்காட்டு வாக்கியமாக "ஆவியே ஆகாது" என்பதைக் கொடுத்திருந்தால் போதுமானது. அதேபோல் பிறமொழிச் சொற்களைத் தரும்போது "ஜாஸ்தி, சாஸ்தி, ஜொள்ளு, சொள்ளு" என இரண்டு முறை இடம்பெறுவதையும் தவிர்த்திருக்கலாம்.

"ஆள் அவுட், செகிட்டேரி, செட்டப்பு" போன்ற ஆங்கிலம் என வெளிப்படையாகத் தெரியும் பல சொற்கள் அகராதியில் இடம்பெற்றுள்ளன. இவற்றை ஆங்கிலச் சொல் எனக் குறிப்பிட்டிருக்கலாம். தலைச் சொற்களுக்குப் பொருள் தரும்போதும் இவ்வகராதி பல குழப்பங்களைக் கொண்டிருக்கிறது. சொல் தேர்வு சரியாக அமையாத காரணத்தாலோ என்னவோ சொல்லைப் பற்றிய இலக்கணக் குறிப்பு கொடுக்கப்படவில்லை. ஒரு சொல் பெயரா, வினையா, பெயரடையா, வினையடையா என்பதைக் காட்டும் இலக்கணக் குறியீடு அகராதியைப் பயன்படுத்துவோர் சொல்லையும் பொருளையும் மிகச் சரியாகப் புரிந்துகொள்வதற்கு அவசியமானதாகும். இலக்கணக் குறியீட்டை வழங்க முயன்றிருந்தால் தலைச்சொற்களின் அமைப்பும் சீர்மைபெற்றிருக்கும்.

மிகப்பல இடங்களில் சொல்லுக்கான பொருளையும் வட்டார வழக்குச் சொல்லிலேயே தருகின்றார். இது அகராதியின் நோக்கத்தையே சிதைப்பாக இருக்கின்றது. பொருள் பொதுமொழியில் கொடுக்கப்படுதல் தான் இத்தகைய அகராதிகளின் தேவையை அர்த்தப்படுத்தும். "அரையாப்பு" என்னும் சொல்லுக்குப் "பொம்பளைசீக்கு" எனப் பொருள் தரப்படுகிறத. "பொம்பளை சீக்கு" என்பதே வட்டார வழக்குத்தான். இதிலுள்ள "சீக்கு" என்னும் சொல் "நோய்" என்று பொருள்படும். அகராதியைப் பயன்படுத்துபவர் அரையாப்புக்குப் பொருள் பார்க்க விரும்பினால், அவர் "பொம்பளை சீக்கு" என்பதற்கும், அகராதியைப் புரட்டவேண்டிய நிலை ஏற்படுகிறது. ஆனால் "பொம்பளை சீக்கு" என்பது தலைச்சொல்லாக இவ்வகராதியில் அமையவில்லை. ஆகவே வேறு அகராதியைத் தான் நாடவேண்டும். பொருள்தரும் பகுதியில் இடம்பெறும் வட்டார வழக்குச்சொற்கள் அனைத்தும் தலைச்சொல்லாகத் தேர்வு செய்யப்பட்டிருக் கின்றனவா என்பதைப் பரிசோதித்துப் பார்த்திருக்க வேண்டும். பொதுவழக்கில் "பால்வினை நோய்" எனப் பொருள் கொடுத்திருந்தால் மிகச் சரியானதாக இருந்திருக்கும். இந்த அகராதியில் காணப்படும் பொருள் குறைஇது. பல சொற்களுக்கு இவ்வாறே பொருள் கொடுக்கப்பட்டிருக்ககின்றன. "சாவாரச் செத்த" என்னும் தலைச் சொல்லுக்குச் "சீத்துவம்" என்ற சொல்லைத்தேடி அதற்கும் பொருள் பார்த்தால்தான் "சாவாரச் செத்த" என்பது அர்த்தமாகும்.

தமிழ் அகராதிகளில் ஒரு சொல் என்னென்ன பொருள்களில்

வழங்குகிறதோ அந்தப் பொருள்களை எல்லாம் தொகுத்துத்தருதல் என்னும் முறைதான் காணப்படுகிறது. "பொருள் வரையறை" செய்தலே இல்லை. ஒரு சொல்லின் அடிப்படைப் பொருளைக் கண்டறிந்து வழங்குதலே பொருள் வரையறை. பொது அகராதிகளிலேயே இந்த நிலை என்றால், வட்டார வழக்கு அகராதியில் இதை எதிர்பார்க்க வேண்டியதில்லை. ஆனால் ஒரு சொல்லுக்குப் பல பொருள்கள் இருக்கும் பட்சத்தில் அவற்றை அடுத்தடுத்துக் கொடுக்கும் முறையைப் பின்பற்றியிருக்ககலாம். அவ்வாறு இல்லாமல் ஒரே பொருளுடைய பல சொற்களை அடுத்தடுத்துக் கொடுக்கின்றார்.

"நாசுவன் – குடிமகன், பண்டிதன், சவரத்தொழிலாளி" என்று கொடுக்கப்படுகிறது. "குடிமகன், பண்டிதன், சவரத்தொழிலாளி" என்னும் மூன்று பொருள்களில் இச்சொல் வழங்குவதாக அர்த்தம்எடுத்துக்கொள்ள நேருகிறது. ஆனால் இம்மூன்றும் வட்டார வழக்கில் ஒரு பொருட்சொற்களாக உள்ளன. பொதுவழக்கில் வேறு வேறு பொருள்களில் பயன்படுகின்றன. "குடிமகன்" இந்தியக் குடிமகன் (அதாவது குடியுரிமை பெற்றவர்), பண்டிதன் – ஒரு துறையில் புலமை பெற்றோன் (தமிழ்ப்பண்டிதன்) என வேறு வகைப் பொருளில் வருகின்றன. நாசுவன் என்ற சொல் இத்தகைய பொருள்களைத் தருவனவாகவும் கருத நேர்கிறது. "சவரத் தொழிலாளி" என்று மட்டும் கொடுத்திருந்தால் போதுமானது. "பங்கரை" என்னும் சொல்லுக்கு "அவலட்சணம், கெட்ட, அழகில்லாத" என மூன்று பொருள்களைத் தருகிறார். பொருள்களைப் பார்க்கும்போது இது பெயர்ச்சொல்லா, பெயரடையா என்னும் குழப்பம் வருகிறது. அதைப் புரிந்துகொள்ளும் விதத்தில் இலக்கணக் குறியீடும் இல்லை. எடுத்துக்காட்டுத் தொடர்களைப் பார்க்கையில் மூன்று சொற்களையும் ஒரே பொருளில் ஆசிரியர் கையாண்டுள்ளார் என்பதையே உணர முடிகிறது. சொற்களுக்கிடையில் உள்ள பொருள் நுணுக்க வேறுபாட்டைக் கருத்தில் கொள்ளவில்லைஎன்பது புரிகிறது.

ஒரே பொருளுடைய மூன்று சொற்களைத் தரும் ஆசிரியர், அதற்கு நேர்மாறாகச் சில இடங்ககளில் சொல்லுக்குப் பொருளே தருவதில்லை. தலைச்சொல் அதற்குரிய எடுத்துக்காட்டுத் தொடர் ஆகியவற்றோடு விட்டுவிடுகிறார். "என்ன சொல்ல வாயி ருக்கு" என்னும் தொடரைத் தலைச் சொல்லாகக் கொடுத்துள்ளார். அதற்குப் பொருள் தராமல் எடுத்துக்காட்டுத் தொடராக "நம்ம பிள்ளையே இப்படிச் செஞ்சிருச்சிட என்ன சொல்லவாயிருக்கு"? என்பதைக் கொடுத்து நிறுத்திவிடுகிறார்.

இதேபோல,

ஆவுதுணை – "ஆவுதுணைக்கு ஆளில்லை"

காங்க – பார்க்க.

காங்க வருவாகோ – உங்களைக்
கனிவச்சிக் காப்பாகோ. - நாட்டார் பாடல்.

பல சொற்களுக்கு இவ்வாறு பொருள்தராமல் விட்டிருக்கிறார். "காங்க, ஆவுதுணை" முதலிய சொற்களுக்குக் கையில் அகராதி இருந்தும் பொருள்

தெரியாத நிலைதான் பயன்படுத்துவோருக்கு ஏற்படும்.

சொல்லுக்குப் பொருள் தருவதில் "சுருங்கச் சொல்லல்" இல்லை. தேவைக்கு மேற்பட்ட விளக்கங்களை அடுக்கிக்கொண்டு போவதும் களஞ்சியத்தில் அமைவது போல விவரிப்பதும் சிலஇடங்களில் காணப்படுகிறது. இது அகராதியின் அமைப்பை மீறிச் சொல்வதாக உள்ளது. அதேபோல் சில இடங்களில் இன்னும் கூடுதல் விளக்கம் இருந்திருந்தால் பயன்பட்டிருக்கும். "ஆடு தின்னாப் பாளை" என்னும் செடிப்பெயரைத் தரும்போது அதன்பெயர்க் காரணத்தையும் கொடுத்திருக்கலாம்.

எடுத்துக்காட்டுத் தொடர்களைத் தருவதிலும் எந்தமுறையும் பின்பற்றப்படவில்லை. சில இடங்களில் எடுத்துக்காட்டுத் தொடர்களைத் தருகிறார். சிலவற்றிற்குத் தருவதில்லை. ஒன்றுக்குமேற்பட்ட பல தொடர்களைச் சில இடங்களில் தருகிறார். கொடுக்கும் பொருளைச் சரியாக விளக்கக்கூடிய சிறந்த எடுத்துக்காட்டுத் தொடரைத் தேர்வுசெய்து கொடுக்கும்முறையை ஆசிரியர் பின்பற்றவில்லை.

இவ்வாறு இவ்வகராதி பல குறைகளைக் கொண்டிருக்கிறது.அகராதியில் ஓரளவு கற்றறிந்தவரும் இந்நூல் ஆசிரியரும் இணைந்து சில நாட்கள் உழைக்க முடியுமானால் திருத்தம் பெற்ற செம்மையான, இனிவரும் அகராதிகளுக்கு முன்னோடியாக விளங்கக்கூடிய நல்ல பதிப்பை உருவாக்க முடியும். வட்டார வழக்குச் சொற்கள் பலவும் மறைந்து வரும் வேளையில் இவ்வகராதியின் பயன்பாடு கூடுவதற்கும் வழிவகுக்கும்.

## குறிப்புகள்

1. சுந்தர சண்முகனார், தமிழ் அகராதிக் கலை, கழக வெளியீடு,சென்னை.
2. கி. ராஜநாராயணன், வட்டார வழக்குச் சொல்லகராதி, அன்னம் வெளியீடு, சிவகங்கை, 1982.
3. இரா. இளங்குமரன், வழக்குச் சொல் அகராதி, காக வெளியீடு, சென்னை, 1989.
4. பெ. சண்மும் செட்டிநாட்டில் செந்தமிழ் வழக்கு, 8 காவேரி தெரு, சென்னை, 1990.

# 37. வழிபாட்டுச் சடங்கில் வேட்டை நிகழ்ச்சி

*மு. கலியாணிக்குமார்*
ஆய்வாளர் – நாட்டுப்புறவியல்
தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம்

வேட்டையாடி உணவு சேகரிக்கும் பழக்கத்தினை மனிதன் பலநூறாயிரம் ஆண்டிற்கு முன்பே மேற்கொண்டான். ஏறத்தாழ நாற்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வேட்டையாடி வந்த மனிதன் வேட்டைக் கருவிகள் கண்டுபிடிக்கப்பட்ட பிறகு மற்ற இனக்குழுவுடன் சேர்ந்து ஒரு கூட்டமாக வாழத்தொடங்கிய மக்கள் காட்டுவிலங்குகளில் சிலவற்றைப் பிடித்து பழக்கிவளர்க்கத் தொடங்கினார்கள்.

ஆதிகாலத்து மனிதன் இதைத்தான் உண்ணுவது என்று கட்டுப்பாடு வைத்துக்கொள்ளவில்லை. கால ஓட்டத்தில் மனிதன் கல்லிலிருந்தும் மரத்திலிருந்தும் வேட்டைக் கருவிகள் செய்யக் கற்றுக்கொண்டான். அவற்றைக் கொண்டு நீரில் வாழும் உயிரினங்களையும்,நிலத்தில் வாழும் உயிரினங்களையும் வேட்டையாடவும், வேட்டையாடிய விலங்குகளை பச்சையாகவே உண்டான். நாளடைவில் நெருப்பை உண்டாக்கும் வழியை அறிந்ததும் விலங்குகளின் இறைச்சியை நெருப்பில் இட்டு வாட்டி உண்ணக்கற்றும்கொண்டான்.

மனிதன் வேட்டையாடுவதில் கைதேர்ந்தவன் என்பது உண்மை.தனது எல்லைகளையும் தனது இனத்தவர்களையும் பாதுகாக்கக் கடுமையாக சண்டைபோடக்கூடியவன் என்பதும் உண்மை. வேட்டையாடி உணவை சேகரிப்பதே அவனது வாழ்க்கை என்பதே அக்கருத்து. மாமிசம் உணவுப்பொருட்களில் ஒன்றாக இருந்திருக்கவேண்டும்.

உணவு சேகரித்து வாழ்ந்த சமூகத்தை மொத்தமாக விவரிப்பது இன்றியாமையாததாகும். உணவைச் சேகரித்து வாழும் ஆரம்பநிலை சமூகத்திலிருந்தவர்களின் எண்ணிக்கை மிக குறுகிய வரம்புக்குட்பட்டது பற்றாக்குறை சேகரிப்பிதற்கு உணவில்லாமல் போகுமே என்ற அச்சம் ஆகியவற்றைப் பொறுத்து இடத்திற்கு இடம் காலத்திற்கு காலம் இனக்குழுச் சமூகத்தின் தன்மை மாறி வந்தன. உணவு சேகரித்தவர்கள் வெகுகாலத்திற்குப் பிறகே உணவை பாதுகாக்கும் நிலைக்கு வந்தனர்.

பூர்வக்குடிக் கூட்டங்களின் உணவை மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்வது சமூகத்தில் ஒரு கடமையாயிற்று. உணவு சேகரிக்கும் மக்கள் கூட்டு வேட்டைக்கு முன்பும், பின்பும் தொடர்ச்சியாகப் பல சடங்குகளும், பழக்கங்களும் மேற்கொள்ளப்படுகின்றன.

நவீன மனிதப் பண்பாடுகளின் இச்சடங்குகளில் சிலர் வேடர்கள்போல வேடம் அணிந்து அபிநயம் செய்வார்கள். இச்சடங்கைக்காட்டுவதோடு நில்லாமல் விவசாய வேலைகளுக்கு ஒத்திசையாகவும் வேட்டை போலவும் நடனச் சடங்கை நிகழ்த்தினர்.

ஒரு குலத்தைப் போலவே ஒவ்வொரு கூட்டத்திலிருக்கும்பொதுவான வழிபாட்டு மரபுகளும் மொழியியலும் இருந்தன. ஒரு சிறிய குலம் வளர்ந்து இத்தகைய இனக்குழு அமைப்பு ஏற்பட்டபோது மற்றவர்களும் இதைப் பின்பற்றினார்கள். அத்தகைய அறிகுறியைப் பெரும்பாலான மனித சமூகங்களில் இன்று காணமுடிகிறது.

ஒரு குல உறுப்பினர் குலச்சின்ன உணவை உட்கொள்வதற்கும். அக்குலம் பெண்களுடன் கலவியில் ஈடுபடுவதற்கும் தடைவிதிக்கப்பட்டது போலவே பல குலங்கள் கொண்ட ஒரு பழங்குடிக்கூட்டத்திற்கு வெளியேயும் அவர்கள் மணஉறவு கொள்வதற்கு அனுமதிக்கப்படாத நிலையிலிருந்ததும், குறிப்பிட்ட குலச்சின்னத்திற்குரிய உணவைச் சேகரிப்பதில் காட்டும் தனி ஆர்வம் சில சிறப்புச் சடங்குகளாக வளர்ந்தன. ஏதோ ஒரு வகையானபாலியல் மற்ற சடங்குகளும் எவ்வளவு கண்மூடித்தனமானவையாக இருந்தபோதிலும் அவை (குறிப்பிட்ட) உணவு அதிகமாகக் கிடைக்கவேண்டும் என்பதற்காகவே மேற்கொள்ளப்பட்டன.எனவே அவை அவ் உணவை உட்கொண்டவர்களுடையது. வளமை பெருக்கச் சடங்குகள் (Fertilityrites) என்று குறிப்பிடப்படுவது ஒரு பகுதியே கலையாகப் பார்ப்பதாகும்.

நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டில் நடைபெறும் சடங்கியல்நிகழ்த்துகளில் வேட்டைக்குச் செல்லுதல் என்ற சடங்கியல் நிகழ்த்து தன்மைகள் நெல்லை, தூத்துக்குடி மாவட்டங்களிலுள்ள கிராமங்களிலிருக்கும் ஆண், பெண் தெய்வ கோயில்களில் நடைபெறும் நிகழ்ச்சியை இக்கட்டுரை எடுத்துக்காட்டுகிறது.

## வேட்டைச் சடங்கு நடைபெறும் இடம்

நெல்லை, தூத்துக்குடி மாவட்டங்களில் விவசாய தொழிலுடன் தொடர்புடைய மக்கள் மத்தியில் அவர்கள் வழிபடும் ஆண் தெய்வமான சுடலைமாடன், கருப்பசாமி, முனியன், மாடசாமி போன்ற தெய்வ வழிபாட்டிலும் பெண் தெய்வமான மாரியம்மன், காளியம்மன், முத்தாரம்மன் போன்ற பெண் தெய்வ கோயில்களிலும் வேட்டைச் சடங்கு நிகழ்ச்சிகள் நிகழ்த்தப்படுகின்றன. கோயிலில் சாமி அருள் ஆடும் சாமியாடிகளே இந்த வேட்டைச் சடங்குகளை நிகழ்த்துவார்கள். இப்பகுதி எல்லாகோயில்களிலும் இரவு 12 மணிக்கு வேட்டைச் சடங்கு நிகழ்ச்சி நடைபெறும். வேட்டைக்குச் செல்லும் நபர் வேட்டைக்குத் தேவையான ஆயுதங்களான வல்லயம், வீச்சு அரிவாள், இடுப்பில் கத்தி வைத்துக்கொண்டும், காலில் வேட்டைச் செருப்பு அணிந்துகொண்டும், இடுப்பில் உணவு பாத்திரத்தைக் கட்டிக் கொண்டும், கையில் பெரிய தீப்பந்தம் ஏந்திப் பிடித்துக்கொண்டும் ஊரின் சுடுகாட்டுப் பகுதிவரை சென்று திரும்பி வருவதை வேட்டைக்குச் செல்லுதல் என்று அப்பகுதி மக்கள் அழைக்கின்றனர்.

## வேட்டைச் சடங்கின் ஒப்பனைகள்

வேட்டைக்குச் செல்லும் நபர் அதற்கான ஆடையான அரைக்கால் சட்டையும் தலையில் மூன்று அல்லது இரண்டு கொம்புகள் உடையகுல்லாவும்

இடுப்பில் சலங்கையும் கட்டிக்கொள்வர். அவர்கள் முகத்தில் சந்தனம், குங்குமத்தை பூசிக்கொள்வர். ஒவ்வொருநபர்களும் தனித்தனியாக அடையாளம் காண ஆடை அணிந்து கொள்வர். வேட்டை நிகழ்ச்சியில் இசைக்கருவியான பெரிய சத்தம் தரக்கூடிய இசைக்கருவிகளைக் கொண்டு இசைக்கப்பட்டபின்பு வேட்டைக்குச் செல்வார்கள்.

## வேட்டைக்கு அனுப்பும்முறை

வேட்டைக்குச் செல்லும் முன் கோயிலிலிருக்கும் தெய்வங்களுக்குமுன்பு இசையுடன் கூடிய ஆட்டம் ஆடுவார்கள். தாய்த்தெய்வவேடம் அணிந்து ஆடும் நபர் வேட்டைக்குச் செல்லும் நபரின் நெற்றியில் விபூதி பூசிய பின்பே வேட்டைக்குச் செல்வர். இத்தகைய நிகழ்த்துதல் தாய், மகன், உற்வினர் என்ற முறையில் வழி அனுப்பிவைக்கும் முறையை இங்கு நிகழ்த்தப்படுகிறது. வேட்டைக்கு இரண்டு அல்லது மூன்று நபர்கள் சேர்ந்துகொள்வார்கள்.

## பலி செய்யும் முறைகள்

வேட்டைக்கு வழி அனுப்பி வைத்தபின்பு கோயில் தெய்வங்களுக்கு வேட்டையாடிய விலங்குகளின் அடையாளமாக ஆடுகள், சேவல்,பன்றி போன்ற மிருகங்களையும் பலி செய்வார்கள். பலி செய்யப்படும் விலங்குகள் நெஞ்சு பிளக்கப்படும். தலையை வெட்டி, வயிற்றுப்பகுதியை குத்தி பலியிடுவதைப் பார்க்கும்பொழுது வேட்டையாடிய விலங்குகளின் அடையாளம் இருப்பதைப் பார்க்கமுடிகிறது. வேட்டைக்குச் சென்று திரும்பியவர்களும் அந்தபலி செய்த விலங்குகளின் மீது படுத்து அதன் இரத்தத்தைக்குடிப்பது போன்று பாவனை செய்வார்கள். இந்த நிகழ்த்து தலை மனிதனின் பழமை வடிவத்தை வெளிபடுத்துவை பார்க்க முடியாது.

## உணவுப் பங்கீட்டு முறைகள்

கோயிலில் பலி செய்த விலங்குகளில் ஊரின் பொதுவான பலி செய் யப்பட்ட விலங்கான ஆடு, பன்றியின் இறைச்சியைப் பங்குவைப்பார்கள். இதனைப் பார்க்கும் வகையில் உணவு பங்கீட்டு முறையைஎடுத்துக்காட்டும் நிகழ்ச்சியாக மனிதனின் மரபுக்கலை புலப்படுகிறது.

## முடிவுரை

நாகரீகம் வளர்ந்த காலத்திலும் மக்கள் எங்கும் தனது ஆழ்மனதிலுள்ள பழைய வாழ்க்கை மரபுகளை இன்றைய காலத்திலும் அதன் வடிவங்களை மறக்காமல் பல்வேறு வகையிலும் சடங்கியல் தன்மைகளை வழிபாட்டுடன் ஒருங்கிணைத்து நிகழ்த்தி வருவதைப் பார்க்க முடிகிறது. உலக அளவில் மானிடவியல் ஆய்வாளர்கள் ஆய்வுசெய்த அறிக்கையின்படி இன்றும் வேட்டையாடி தனது பசியைத் தீர்த்துக்கொண்டும் வாழும் ஆதிவாசி பழங்குடி மக்களின் வாழ்க்கை முறையை இன்று நாகரீகம் அடைந்தும் அந்த வேட்டை

நிகழ்ச்சியை நிகழ்த்துவதும் இத்தகைய நிகழ்த்து கலைகள் செழிப்புச் சடங்கை மையமாக வைத்தும் வருடம் ஒருமுறை தனதுஇனக்குழுவுடன் இந்த சடங்கியலில் நிகழ்த்துதலில் மிருகங்கள் வேடம் அணிந்து பாவனை செய்வதும், தங்களுடைய பழமையை வெளிப் படுத்துகிறது. காலத்தின் மாற்றத்தால் இன்று வேட்டைச் சடங்குகள் மனித ஆவிகளுக்கு சவால் விடுவதையும்ப் போலவும், ஆவிகளுக்கு மிகப்பெரிய சக்தி இருப்பதாகவும் மனித மனம் நினைக்கும்வகையில் இன்றைய வழிபாடுகள் புராணக்கதைகளுடன் புனைந்து வழிபடுவதைப் பார்க்க முடிகிறது. இதைப்போன்று நிகழ்த்துக்கலைகளை ஆய்வு செய்யும் முறையில் பல தகவலை கொண்டுவர இக்கட்டுரை அமைந்துள்ளது.

## துணைநூல்கள்


1. டி.டி.கோசாம்பி, "பண்டைய இந்தியா", என்.சி.பி.எச். வெளியீடு, 1989, சென்னை.
2. நா. வானமாலை, மக்களும் மரபுகளும், என் சி.பி.எச். வெளியீடு, 1975, சென்னை.
3. வாழ்வியல் களஞ்சியம், 87.
4. என். ஸ்ரீனிவாசன், மனிதன் வித்தியா பப்ளிகேசன்ஸ், சென்னை.


## பின்னிணைப்பு

1. வேட்டைச் சடங்கு நிகழ்த்துகளின் கருத்துப்படம்

| | |
|---|---|
| 1ABC | - மக்கள் குடியிருப்புப்பகுதி |
| 2A1,A2 | - கோயில் பகுதி |
| 2A1, 2A2 | - துணைத் தெய்வங்கள் |
| 3A1A2 | - பார்வையாளர்கள் |
| 4 | - நிகழ்த்தும் கலைஞர்ககள் |
| 41 | - இசைக்கருவிகள் நிகழ்த்துத்துறைகள் |
| 5A1A2 | - விவசாய நிலப்பகுதிகள் |
| 6A | - நீர்வீழ்ச்சிப் பகுதி (குளம், ஆறு, கிணறு, ஓடை) |
| 7A | - சுடுகாடு (இறந்த உடலைப் புதைக்கும் இடங்கள்). |

# 38. உளப்பகுப்பாய்வு நோக்கில் வெறியாட்டுச் சடங்கு

ப. கிருட்டிணம்மாள்
ஆய்வாளர்
புதுவைப்பல்கலைக்கழகம்

## அறிமுகம்

உளப்பகுப்பாய்வு என்பது மானிட செயற்பாடுகளையும், நம்பிக்கைகளையும், அறிவியல் கண் கொண்டு அறிந்திடும் ஓர் அறிவியல் துறையாகும். உள்ளத்திலிருந்து உடல் வழியாக நடத்தைகள் வெளிப்படுகின்றன. எனவே உள்ளம், ஆன்மா, மனம் பற்றி பிளாட்டோ முதலாகப் பல அறிஞர்கள் சிந்தித்து வந்துள்ளனர்.

"ஆன்மா எதை நாடி விழைகிறதோ அதை ஆவி அடையும்"[1] என்ற கலீப்கிப்ரான் கூற்றிற்கேற்ப, மனதைப் பற்றி விளக்க வந்தவர் ஃபிராய்ட் இவர் உளப்பகுப்பாய்வு முறையில் மனித மனங்களைவிமர்சித்தார். இந்நிலையில் மனித மனதில் தேக்கி வைக்கப்பட்ட இடிப்பல் உணர்வு பலிச் சடங்கிற்குக் காரணமாக அமையும் என்றார். இக்கட்டுரை உளப்பகுப்பாய்வு நோக்கில் வெறியாட்டுச் சடங்கினை விளக்கும் முறையில் அமைந்துள்ளது.

## துர்த்தெய்வக் கோட்பாடு

மனிதன் வளர, வளர சமூகச் சட்ட திட்டங்களால் தந்தையின் மீது கொண்ட கொலை உணர்வும், அச்ச உணர்வும் நனவிலி ஆகின்றன,நனவிலியில் உறையும் தந்தை பற்றிய அச்ச உணர்வே தீய ஆவி அல்லது துர்த்தெய்வம் என்ற நனவிலிக் கற்பனையை உருவாக்குகிறது, (Unconsious Phantasy) என்கிறார் ஃபிராய்ட். கவிதை எழுதுவது வித்தியாசமான மன எழுச்சியால் உண்டாவது. கவிஞர்கள் உணர்வுகளிலும் உற்சாகத்திலும் அனுபவங்களை உள்வாங்கி கற்பனையால் உருவாக்கப்பட்டதனைப்போல் துர்த் தெய்வக் கோட்பாடும் தோன்றியது.

"நனவு மனதால் நனவிலி உயர்வழிப்படுத்தும்போது தீய ஆவியே/ துர்த்தெய்வமே (அச்சுறுத்திய தந்தையே) தெய்வ நிலைக்கு உயர்ந்துள்ளது, என்பதனை அறிய முடிகிறது. தந்தைக் கருத்தாக்கத்திலிருந்தே துர்த்தெய்வக் கருத்தாக்கம் தோன்றியது என்பது ஃபிராய்டிய வாதம்"[2]. இதனைப் பின்வருமாறு விளக்கலாம்.

இடிப்பல் கோட்பாடு

|

தந்தைக் கோட்பாடு

துர்த்தெய்வக் கோட்பாடு

குழந்தைப் பருவத்தில் நனவிலியான தந்தை பற்றிய அச்சஉணர்வே தீய ஆவி பற்றிய/துர்த்தெய்வம் பற்றிய அச்ச உணர்வாகவும், தந்தைக்கொலை உணர்வே, ஆட்டுப்பலியாகவும் வெளிப்படுகிறது. இவை சமூகப் பரிணாம வளர்ச்சியில் ஏற்பட்ட மாற்றங்கள் ஆகும்.

## ப்ராய்டிய நோக்கில் வெறியாட்டுச் சடங்கின் தோற்றம்

இனக்குழுச் சமூகத்தில் குழுவின் அக்குழுவில் உள்ள பெண்கள் அனைவரையும் தனக்கு மட்டுமே உடைமையாகக் கொண்டனர். ஏனெனில் அவர்களும் அப்பெண்களை, அடைய விரும்பினர். இச்சிக்கலைச் சரிசெய்ய தகாப்புணர்ச்சி/அகமணவிலக்கு (incest taboo)உருவாக்கப்பட்டது. இந்நிலையில் தந்தையைக் கொன்று, தாயை அடையவேண்டும் என்ற இடிப்பல் உணர்வு, தலை தூக்குகிறது. இனக்குழுக் காலக் கட்டத்தில் இவ்வுணர்வு கடுமையாகக் கட்டுப்படுத்தப்படும்போது இவ்வுணர்வே உயர்வழிப்பட்டு, பல்வேறுபட்ட பண்பாட்டு நம்பிக்கைகளாகவும், சடங்குகளாகவும், தொன்மங்களாகவும் இன்ன பிறவாகவும் வெளிப்பட்டுள்ளன.

மனிதனுடைய நலவிலியில் உறுதியாகத் தடைசெய்யப்பட்ட இடிப்பல் உணர்வே எல்லா வகையான சடங்குகளுக்கும், நம்பிக்கைகளுக்கும்காரணமாக வித்திடுகிறது. எனவே, உளவியல் நோக்கில்தமிழ்ப்பண்பாட்டில் ஏற்படுத்தப்பட்ட வெறியாட்டுச் சடங்கும் அவற்றிற்கான நம்பிக்கையும், இடிப்பல் உணர்வே காரணம் எனத் தெளிவாகக் கூறமுடியும். ஒவ்வொரு தனி மனிதனுக்கும் தகாப்புணர்ச்சி விழைவு; அவனது இளமைக் காலக்கட்டத்தில் அரும்புகிறது. இந்த உணர்வு காலப்போக்கில் நனவிலியாய் வாழ்ந்து கொண்டு இருக்கிறது.

இந்த இடிப்பல் உணர்வு நாணயத்தின் இரு பக்கத்தினைப் போன்றுஇரண்டு வகையான குணங்களைக் கொண்டுள்ளது. அவையாவன:

1. தகாப்புணர்ச்சி விழைவு
2. தந்தையைக் கொல்லவேண்டும் என்ற கொலை உணர்வுதகாப்புணர்ச்சிக்குத் தடையாக இருக்கும், தந்தையைக் கொல்லவேண்டும் என்ற கொலை உணர்வு, மாற்று வடிவில் வெறியாட்டு சடங்காக வெளிப்பட்டுள்ளது.

## வெறியாட்டும், இடிப்பல் உணர்வும்

பொதுவாக, சடங்குகள் இரண்டு நிலையில் செயல்படுகின்றன.ஒன்றுத் துர்த்தெய்வங்களுக்குப் பலி கொடுத்து அவைகளை மனநிறைவடையச் செய்வதன் மூலம் தங்களைப் பாதுகாத்தல் என்ற மந்திரச் சடங்குகள் (Magical Rites) மற்றொரு துர்த் தெய்வங்களை சில சடங்குகள் மூலம் இடம்மாற்றம் செய்து பாதுகாத்தல் என்ற மாற்றீட்டுச் சடங்கு.3 (Rite of Transference)

இங்கு வெறியாட்டுச் சடங்கு, மந்திரச் சடங்காக அமைந்துள்ளது. இச் சடங்கில் தூர்த் தெய்வமான (அணங்கான) முருகனுக்கு, ஆட்டைப் பலிகொடுத்துச் சாந்தி செய்யப்படுகிறது.தினைப்புனம் காவல் செய்த தலைவியை முருகன் அணங்கியதால், தலைவி, உடல் வருத்தம் கொண்டாள்.இதனால் முருகன் தூர்த் தெய்வம் என்று அழைக்கப்படுகிறான்) வெறியாட்டுச் சடங்கில் பலியிடப்படும் ஆடு என்பது தந்தையின் பதிலி. பலிச்செயல் கொலைச் செயலுக்கும்பதிலி.

உளப்பகுப்பாய்வு அடிப்படையில் வெறியாட்டுச் சடங்கு அமைய இடிப்பல் உணர்வே காரணமாக அமைகிறது, என்பது தெற்றெனவிளக்ககும். பொதுவாக பலியிடுதல் என்ற சமயம் சார்ந்த சடங்குகள் அனைத்திற்கும் அடிப்படையாக உள்ள நம்பிக்கை தூர்த்தெய்வத்தினின்று காப்பாற்றப்படுவது என்பதாகும்.

சங்க காலச் சமுதாய மக்களிடையயே முருகணங்கு (தூர்த்தெய்வம்) பற்றிய நம்பிக்கை இருந்துள்ளது. இந்த நம்பிக்கைக்கும், மனிதன் நனவிலியில் உறைந்து கிடக்கும் தந்தை பற்றிய அச்ச உணர்விற்கும் உறவு உள்ளது என ஃபிராய்டிய அடிப்படையில் நாம் உணரலாம். அணங்கு செய்த முருகனுக்கு ஆட்டைப் பலி கொடுத்தால் மனநிறைவடையும் என்ற நம்பிக்கையும் நிலவி இருந்தது. இந்த நம்பிக்கைக்கும் மனிதனின் நனவிலியில், உறைந்து கிடக்கும் தந்தையைக் கொல்லவேண்டும் என்ற உணர்விற்கும் உறவு உள்ளது என ஃபிராய்டிய அடிப்படையில் உணரலாம்.

முருகன் (தூர்த்தெய்வம்) என்ற தெய்வம் தந்தையின் பதிலி. இவ்வெறியாட்டுச் சடங்கில் முருகனுக்குப் பதிலாக வேல் என்ற குறியீடு முருகனைக் குறிக்கும். அதாவது முருகன் என்றதந்தைப்பதிலியைக் குறிக்கும். எனவே தந்தையைக் (முருகனைக்) கொல்லுதல் என்பது சமூகப் பண்பாட்டிற்கு ஒவ்வாத செயலாகும். எனவே, தந்தைக்கு முன் தந்தைக்குப் பதிலாக வேறொன்றை சொல்லுதல் அதாவது ஆட்டுக் கிடாயைக் கொல்லுதல் என்ற நிலையில் சமூககப் பண்பாட்டிற்கு ஏற்றவகையில் மாற்றம் அடைந்துள்ளது.

ஒரு குடும்பத்தில் கணவன் மனைவிக்கு இடையே சண்டைஏற்படுகிறது. இச்சண்டையில் கணவன் மனைவியை அடிக்ககிறான். ஆனால் மனைவி கணவனை அடிக்க முடியாது. இது பண்பாட்டு மரபு. இங்கு மனைவி என்பவள், தன் கோபத்தைக் கணவனிடம் நேராகக் காட்டமுடியாது. ஆனால் வீட்டில் இருக்கும் சமையற்பாத்திரங்களை உடைப்பது, குழந்தையை அடிப்பதுபோன்ற செயல்பாடுகளின்மூலம் தன் கோப எண்ணத்தை வெளிப்படுத்திக்கொள்வாள். எனவே இங்கும் குழந்தையை அடிப்பது/பாத்திரத்தை உடைப்பது என்பது கணவனை அடிப்பதுஎன்பதன் பதிலியாக அமையும். இங்குக் கணவன் முன்னால் வேறொன்றின்மூலமாகத் தன் எண்ணத்தை மனைவி ஈடேற்றுகிறாள்.

இச்செயல்பாட்டோடு வெறியாட்டு சடங்கின் செயல்பாட்டினை இணைத்துக் காணலாம். வேலன் என்ற மகனுக்கு தந்தையைக் (முருகனைக்) கொல்ல வேண்டும் என்ற நனவிலி விழைவு இருக்கிறது. ஆனால் நம்முடைய பண்பாடு இதற்குச் சாத்தியமாக அமையாது. ஆகவே முருகன் முன்னிலையில்

தந்தையைக் கொல்வதற்குப் பதிலாக ஆட்டினைக் கொலை (பலி) செய்கிறான். எனவே, இங்கு ஆடு என்பது தந்தையின் பதிலி. நாம் மேலே காட்டிய மனைவியின் செயல் என்பது நனவு மனவேட்கையாகும். வெறியாட்டுச் சடங்களில் புலப்படுகின்ற வேலனின் செயல் நனவிலி மன வேட்கையோடு தொடர்புடையது என்பது இங்கு நாம் முக்கியமாகப் பிரித்தெண்ணத் தக்கதாகும். எனவே வெளியாட்டுச் சடங்கினைப் பின்வருமாறு பொருத்திக்காட்டலாம்.

| | | |
|---|---|---|
| ஆடு | – | தந்தை |
| வேலன் | – | மகன் |
| பலியிடுதல் | – | கொலை உணர்வு |
| அணங்குதல் | – | அச்ச உணர்வு |

## குறியீட்டாக்கம் (Symbolism)

சங்க கால மக்களின் நம்பிக்கைகள் அறிவுக்குப் பொருந்தக்கூடிய வகையில் காரண காரிய அடிப்படையில் அமைந்திருக்கின்றன. இதில் வெறியாட்டுச் சடங்கின், நனவிலி உண்மையை ஆராயும்போது, அந்நம்பிக்கைக்கு உரிய உண்மையான பொருள் தெளிவடைகிறது. நனவிலியில் குழப்பமானதும், மிக முக்கியமானதும் ஆன பண்பு குறியீட்டாக்கம்' (Symbolism) ஆகும். வெளிப்பட்ட ஒன்று வெளிப்படாத ஒன்றுக்குக் குறியீடாக இருக்கும் என்பது உளப்பகுப்பாய்வின் கொள்கை ஆகும். அமுக்கப்பட்ட இடிப்பல்உணர்வு, சமயம் சார்ந்த வெறியாட்டுச் சடங்காகக் குறியீட்டு அடிப்படையில் அமைந்துள்ளது. இதற்கான காரண காரியம் முழுக்க முழுக்க குறியீட்டுப் பான்மையினைக் கொண்டது. கொலைச் செயல் சமயச் சடங்காக மாறும்போது, நனவு நிலையில் இதன் உண்மைப் பொருள் அதனோடு தொடர்புடையவர்களுக்கே தெரியாமல் போகிறது.

## தந்தையின் பதிலிகள்

ஃபிராய்டின் அடிப்படையில் சொல்ல வேண்டும் என்றால் கடவுள் கோட்பாடு என்பது தந்தைக் கோட்பாடிலிருந்தே உருவானஒன்று. தந்தையைக் கொல்லவேண்டும் என்ற நனவிலி வக்ர உணர்வு மனதில் அலைபாய்ந்து கொண்டிருக்கும். இந்நிலையில் தந்தைக்குப் பதிலியாக விளங்கும் கடவுளைக் கொல்வது நம் பண்பாட்டிற்கு ஏற்புடையதன்று. எனவே இன்னொரு பதிலியை மனம் உருவாக்குகிறது. எனவே தந்தைப் பதிலாக ஆட்டுக் கிடாய், எருமைக்கிடாய், சேவல்[5] போன்றவை பலிப் பொருட்களாகின்றன. இவையெல்லாம் நனவிலியில் உறையும் தந்தையின் பதிலிகள் ஆகும். எனவே தந்தையைக் கொல்லவேண்டும் என்ற பகை உணர்ச்சி, தந்தைக்குச் சமமாக வேறொன்றை வைத்துக்கொள்வது/கொல்வது, என்ற நிலை ஏற்பட்டது. இவ்வகையில் வெறியாட்டுச் சடங்கில் ஆட்டுக்கிடாய் தந்தைக்குப் பதிலி ஆனது.

## பலிச்சடங்குகள்

நனவிலியல் உறையும் இடிப்பல் கொலை உணர்வு வதைப்பு வடிவில் (sadism form) சமயம் சார்ந்த பலிச்சடங்ககாக வெளிப்பட்டிருப்பதனை வெறியாட்டுச் சடங்கில் காணலாம். இங்குக்கொலைஉணர்வு பக்தி உணர்வாக இடம்பெயர்ந்து (Displacement) பக்தியாக மேன்மைப்பட்டதையும் (Sublimation) காணலாம்.

ஃபிராய்ட் பலியிடுவதன் பொருள் யாது? என்ற கேள்விக்கு,வரலாற்று உளவியல் அடிப்படையில் பின்வருமாறு பதில் அளிக்கிறார். அதாவது இடிப்பஸ் உணர்வே எல்லா வகையான பலிச் செயல்கட்கும் அடிப்படை மூலக்காரணம் என்று கூறுகிறார்.[6]

ஒட்டுமொத்த தமிழ்க்குழுச் சமுதாயத்தின் நனவிலி இடிப்பஸ்உணர்வே வெறியாட்டுச் சடங்கை உற்பத்தி செய்துள்ளது. தமிழ்க் குழு சமுதாயத்தின் நனவிலிக் கொலை விழைவே இந்த இடிப்பஸ்பண்பாடு காலந்தோறும் இசைவே பிசகாமல் பிரதிபலித்து வருகின்றது.

1) எல்லா வகையான பலிச் சடங்குகளுக்கும், நம்பிக்கைகளுக்கும்இடிப்பஸ் கொலை உணர்வே காரணம்.
2) இவை புராதான மக்களிடையே கற்பனைப் புனைவாக உருவாக்கப்பட்டது.
3) இந்தக் கற்பனைப் புனைவாக்கங்கள் இன்றும் மனிதனால் பின் பற்றப்படுகின்றன.
4) இதற்குக் காரணம் இச்சடங்கினை/நம்பிக்கையைப் பின்பற்றும்ஒவ்வொரு தனிமனிதனின் மனதிலும் இடிப்பஸ் கொலை உணர்வே காரணமாக அமைந்து இருக்கிறது.

## அடிக்குறிப்புகள்

1. திரவியம் – சிந்தனைச் சுரங்கம், ப.25
2. Theodor Reik - Rituals Psycho Analyties Studies, P.73
3. சிவசுப்பிரமணியம் – மந்திரம் சடங்குகள், ப.176
4. நலங்கிள்ளி – நாட்டுப்புற நனவிலி பலிச்சடங்கு ஓர் சிறப்புப் பார்வை, ப.5
5. சிவசுப்பிரமணியம் – மந்திரம் சடங்குகள், ப.173
6. Brain Mooris "Anthropologieal Studies & Religion, P.159.

# 39. முத்துமாலையம்மன் கதை மூலபாடம் - ஓர் ஆய்வு

இலெ. பேபி
ஆய்வாளர்
புதுவைப் பல்கலைக்கழகம்

சுவடி மூலமா? வழியா? என ஆராய வேண்டுவது பதிப்பிப்போரின் கடமையாகும். பல சுவடிகள் கிடைக்கும்பொழுது அக, புறச்சான்றுகள் கொண்டு மூலத்தை நிர்ணயிக்கலாம். இச்சுவடிக்கோ பல சுவடிகள் இல்லை. எனவே இருக்கும் ஒரு சுவடியைக் கொண்டு ஆராயும்போது, இப்பெயரில் வேறு சுவடிகள் இல்லை என்பதும், இது மூலச்சுவடி என்பதும் தெரியவருகின்றது. ஆசிரியரே இச்சுவடி எழுதியுள்ளமையினால், ஆசிரியரின் உண்மைத்தொடர் எதுவோஅதுவே "மூலப்பாடம்" என்று கொள்ளவும் வேண்டும். அந்நிலையில்அது மூலச்சுவடியாக அமைகின்றது. இம்மூலச் சுவடியை ஆராயும் நோக்குடன் இக்கட்டுரை அமைகின்றது.

## கதைப்பாடல் தோன்றக் காரணம்

கதைப்பாடல்கள் தோன்றுவதற்கு சாதி, இனச்சூழல்கள் (Commonal Origins) காரணம் என்று மேனாட்டார் கூறுகின்றனர். ஒருகுறிப்பிட்ட இன அல்லது சாதி மக்களின் இயல்பூக்கம் காரணமாக கதைப்பாட்ல்கள் தோன்றுகின்றன என்பர்[1].

தென்னிந்தியாவில் 15-ஆம் நூற்றாண்டு, கதைப்பாடல் வளர்ச்சிக்கு உதவிய காலமாகும் எனலாம். "போராடும் அரசுகள், விரிவான அகதிகளின் இடப்பெயர்வு மற்றும் மத, குழுப் பகைமைகள் நிறைந்த காலம்" என்றும் இந்நூற்றாண்டை குறிப்பிடுகின்றார் பிருண்டாபெக்[2]. எனவே, தான் இந்நூற்றாண்டில் என்னற்ற கதைப்பாடல்கள் தோன்றியுள்ளதை நம்மால் அறியமுடிகின்றது.

பொதுவாகக் கதைப்பாடலை, விழாக்காலங்களில் மக்களின் பொழுதுபோக்கிற்காகப் பாடுவது இயல்பு, மக்கள் கூடிமகிழ்ந்திருக்கும் சமயத்து வில்லுப்பாட்டின் துணைக்கொண்டு கதைப்பாடலை நிகழ்த்தி மக்கள் கவனத்தை ஈர்ப்பது வழக்கம். பெரிதும் பக்தி உணர்வை ஊட்டவே வில்லுப்பாட்டை நிகழ்த்துவர்[3]. திருநெல்வேலி மாவட்டத்தில் இன்றும் விழாக்காலங்களில் வில்லுப்பாட்டு மூலம் கதைப்பாடல்கள் சொல்லப்பட்டுவருகின்றது. எனவே பக்தி உணர்வின் காரணமாகத் தான் பெரும்பாலும் கதைப்பாடல்கள் உருவாகின்றது. சில சமயங்களில் சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்களையும் சொல்வார். இத்தன்மையின் அடிப்படையின் முத்துமாலையம்மன் கதைப்பாடலும் தோன்றியுள்ளது அறிய முடிகின்றது.

## முத்துமாலையம்மன் கதை – பெயர்க்காரணம்

கதைப்பாடல் பெயர் பெரும் முறைகள் பலவுண்டு. தலைமைப் பத்திரங்களின் சிறப்புக்கருதி அவர்களின் பெயரால் அமைவது,ஆசிரியர் தாம் சொல்ல வந்த கருத்தினை சில சமயங்களில்கதைப்பாடல் பெயராக அமைந்தநும் உண்டு. ஆனால் இக்கதைப்பாடல் இவ்வுருதன்மைகளையும் கொண்டு பெயர்பெறுகின்றது.

முத்துமாலையம்மனின் பலச் சிறப்புக்களைக் கூறியும், அவளை ஒரு தனித்தன்மை மிக்க பாத்திரமாகப் படைத்துக் காட்டியும், அனைவருக்கும் நன்மை செய்தல் என்ற எண்ணம் உடையவளாக பிறர் தவறு செய்யும்பொழுது தட்டிக்கேட்டு அறிவுரை செய்தும்நண்பனாக எனப் பல்வேறு சிறப்புத் தன்மைகள் கொண்ட கதைத்தலைவியின் பெயராலேயே "முத்துமாலையம்மன் கதை"என்று இக்கதைப்பாடல் பெயர் பெறுகிறது.

## காலம்

இலக்கிய வரலாற்றை முறைப்படுத்திக் காணவும், மொழிவரலாற்றினை அறியவும் கால ஆராய்ச்சி இன்றியமையாததாகிறது. கதைப்பாடலின் காலத்தை அக, புறச்சான்றுகள் மூலம் அறிய முடிகிறது.

1) நூலை எழுதிய ஆசிரியரே தெளிவாகக் குறிப்பிட்டிருப்பதன் வழி

2) பிறநூல்களில் இந்நூல் வரிகள் மேற்கோளாகக் காட்டப்பட்டிருப்பதன் வழி[4]

3) நூலாசிரியர் பற்றிய குறிப்புகள் பல தெரிய வருவதன் வழி, என்ற மூன்று நிலைகளில் காலத்தை நிர்ணயிக்க முடிகிறது.

முத்துமாலையம்மன் கதை ஆசிரியர் அந்நூலினுள்ளே குறிப்பிட்டிருக்கும் பாடல் வரிகளின் மூலம் இந்நூலின் காலத்தை நிர்ணயிக்கமுடிகிறது.

"சூரியகலு ஆவணி பூஙய குட்டமொழியிலிருக்கும்
மாடத்தேவர் மகன் இராமசாகத் தேவருக்கு"

எனும் இவ்வரிகள் அகச்சான்றாகச் சுவடியின் இறுதியில் அமைந்து நூலின் காலத்தை உணர்த்துகின்றன. இவ்வரிகள் ஏடு எழுதியகாலத்தை மட்டுமே குறிக்கின்றது. என்றாலும், நூல் ஆசிரியர் இந்த ஏட்டினை எழுதியிருக்கிறார் என்பதனை,

"செய்யனையாள் பூந்துசிலைச் சிறிது வுரைக்கலுற்றேன்" என்ற இவ்வரிகள்மூலம் ஆசிரியர் தம்மை கதைப்பாடலில் வெளிக்காட்டிக் கொள்வதன்மூலம் அறிய முடிகின்றது. எனவே, சுவடி காலமேநூலின் காலமாக அமைவதால், இந்நூலின் காலம் கொல்லமாண்டு 1058 (கி.பி.1882) என்று அறியமுடிகின்றது.

## நூலாசிரியர் வரலாறு

நூலின் பெருமையை உணர நூலாசிரியர் வரலாறு துணைசெய்கின்றது.

நூலாசிரியர் வரலாற்றை அறிய நூலின் அக, புறச்சான்றுகள் துணை புரிகின்றன. அவ்வகையில் முத்துமாலையம்மன் கதையின் ஆசிரியர் வரலாற்றை நூலின் வழி அறியமுடிகின்றது. நூலின் இறுதியில்,

"அளகப்பபுரத்தி லிருக்குந் தவசியாசாரி மகன்இராம
சுவாமியாசரி யெழுதின முத்துமாலையம்மன் கதை"

என்ற வரிகள்மூலம், ஆசிரியர் இராமசாமி ஆசாரி என்பதை உணரமுடிகின்றது.

"ஏந்தினையாள் தானலிந்த யிகத்தபூச் சொல்லுகிறேன்"
"செய்யனையாள் பூந்துசிலைச் சிறிது வுரைக்கலுற்றேன்"

என்று வரும் வரிகளில் ஆசிரியர் தம்மை வெளிப்படுத்திக் கொள்வதாகே அமைகின்றன. மேலும், பிறருக்காக கதைப்பாடலினை எழுதும் அரிய செய்தியினை,

"மாடத்தேவர் மகன் இராமசாமித் தேவருக்கு"

என்னும் பாடலடி மூலம் அறியமுடிகின்றது.

இச்சுவடி ஆசிரியர் சைசவ சமயத்தைச் சார்ந்தவராக இருக்கலாம். சிவவெருமான், பார்வதி, முருகன், கணபதி ஆகிய தெய்வங்களின் சிறப்புகளைச் சொல்வதோடு திருமால், காளி ஆகிய பிற தெய்வங்களைப் பற்றியச் செய்திகளும் கதைப்பாடலில் காணப்படுகின்றன. மேலும்,

"பாத்தவிட மெல்லாம் சிவமாகப் பாந்து கிடக்குதே திருவுருவாய்" என்ற வரிகளின்மூலம் சிவனை முதன்மைப்படுத்தி கூறுவதாலும், பல இடங்களில் சிவபெருமானின் அடமொழிகள் குறித்த சொற்றொடர்கள் காணப்பபடுவதாலும் இந்நூலாசிரியரை சைவ சமயம் சார்ந்தவராகக் கருத முடிகிறது. ஆனாலும் அனைத்து சமயங்களையும் போற்றும் தன்மை கொண்டவர் இந்நூலாசிரியர் என்பதை திருமால், காளி போன்ற பிற தெய்வங்களைப் பற்றியச் செய்திகளை இக்கதைப்பாடலில் அமைத்திருப்பதன் மூலம் அறியமுடிகின்றது.

## சுவடி வரலாறு

"முத்துமாலையம்மன் கதை" எனும் இச்சுவடி நாட்டுப்புற இலக்கிய வகையைச் சார்ந்தது. கதைப்பாடல் அமைப்பில் வில்லுப்பாட்டு தன்மையினை கொண்டுள்ளது. ஆசியவியல் ஆய்வு நிறுவனச் சுவடி நூலகத்தினின்று பெறப்பட்டது இச்சுவடி. இச்சுவடி பெருமாள்புரம் பி.வேலாயுத பெருமாள் நாடார் அவர்களிடம் (கன்னியாகுமரி மாவட்டம்) வாங்கியதாக நிறுவன நூலகத்தில் குறிப்பு காணப்படுகின்றது. இதன் நூலக எண் 161 ஆகும். தற்பொழுதுஇச்சுவடி சென்னை ஆசியவியல் ஆய்வுநிறுவனத்தின் ஓலைச்சுவடி நூலகத்தில் வைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகின்றது.

சாதாரணப் பனையோலையில் இச்சுவடி எழுதப்பட்டுள்ளது. இச்சுவடி மொத்தம் 106 ஏடுகளைக் கொண்டது. சுவடியின் பாதுகாப்பிற்கு முன், பின் இருபுறங்களிலும் சட்டம் அமைப்பது வழக்கம். அந்நிலையில் இச்சுவடியும் சட்டங்களுடன் காணப்படுகின்றது. பின்புறம் வெற்று ஏடுகள் காணப்பபடுகின்றன. ஓலைக்கேற்ப ஏட்டின் நீள, அகலம் அமையும். இதன் நீளம் 28 செ.மீ. அகலம் 2.5. செ.மீ ஆகும். 1,2,3,10,13 ஆகிய எண் கொண்ட ஏடுகள் விடுபட்டு காணப்படுகின்றன.

எந்தவொரு நூலாசிரியரும் இறைவணக்கப் பாடலோடு நூலைத் தொடங்குவது வழக்கம். அதற்கேற்ப இந்நூலும் அமைக்கப்பட்டிருக்கவேண்டும். 1,2,3 என் எண்கொண்ட தொடக்க ஏடுகள் விடுபட்டுள்ளமையால் நூலின் தொடக்க நிலையினை அறிந்துகொள்ள இயலவில்லை.

சுவடியின் இருபுறமும் எழுதப்பட்டுள்ளது. ஒவ்வொரு பக்கமும்இரட்டைப் பகுப்பு முறையிலும் சில ஏடுகளில் மும்மை (மூன்று)பகுப்பு நிலையிலும் அமைந்து ஐந்திலிருந்து எட்டு வரிகளைக் கொண்டு ஒரு பக்கத்திற்கு பதினெட்டு வரிகள் வரைக் காணப்படுகின்றன. இச்சுவடியின் பாடல்கள் அடிவரையறைக்கொண்டும், சில இடங்களில் தொடர்ச்சியான பாடல்களைக்கொண்டும் அமைந்துள்ளன.

ஏடுகளின் தொடர்ச்சி என் தவிர பாடல் எண்கள் ஏதுமில்லை. உட்தலைப்புகள் ஏதுமில்லாமல், எழுத்துக்கள் ஒரு சிலஇயங்கங்களைத் தவிர பெரும்பாலான இடங்களில் தெளிவாகக் காணப்படுகின்றன.

இச்சுவடியின் காலம் கி.பி.1882. மிகப் பிற்காலத்தைய சுவடி. ஆதலால் ஏடுகளும் எழுத்துக்களும் விடுபட்டுள்ளதை அறியமுடிகின்றது. இறுதி ஒரு வழக்கத்திற்கேற்பவே இன்ன ஏடு இன்னாரால் எழுதப்பெற்றது என்று கூறி முடிக்கப்பட்டுள்ளது.

நீண்ட வரிகள் கொண்ட இக்கதைப்பாடலில் சிந்தி, எண்சீர் ஆசிரிய விருத்தங்கள். அறுசீர் ஆசிரிய விருத்தங்கள் ஆகியகொண்டு அமைகின்றது. இவற்றுள் ஆசிரியராலே 'விருத்தம்' என்ற தலைப்பிட்டு இரண்டு பாடல்கள் தரப்பட்டுள்ளன. விருத்த நடைமாற்றம், பாவகை மாற்றம் ஆகியவற்றை உணர்த்துவதற்கு ஏற்ற வகையில் ஆசிரியரே சுவடியில்-அங்கங்கே 'வேறு' என்ற சொல்லாட்சியைக் கையாண்டுள்ளர்.

'ர' கர 'ற' கர மாற்றம் 'ழ' கர 'ள' கர மாற்றம், 'ள' கர 'ண'கர 'ந' கர மாற்றமும் கொண்ட எழுத்து வேறுபாடுஇச்சுவடியில் நிறைய காணப்படுகின்றன. மேலும் பேச்சு சொற்கள், வட்டார சொற்கள் மற்றும் வடமொழிச் சொற்கள்என்று பழவகையான சொற்கலப்பு நிலையும் காணப்படுகிறது.

மிகவும் பிற்பட்ட காலத்தில் சுவடியாதலாலும், சுவடியின் ஏடுகள் பல இடங்களில் உடைந்தும் பூச்சியரிப்புக்கு உட்பட்டுஇருப்பதாலும் எழுத்துக்கள் தெளிவாகத் தெரியவில்லை. எனவேபிரதி வாசிப்பில் சிக்கல் ஏற்பட்டது. மேலும் பல இடங்களில் தொடர்ச்சியாக வரிகளே தெரியாமல் இருப்பதால் கதைக் கோவையிலும் சிக்கல் ஏற்பட்டன.

நாட்டுப்புறக் கதைப்பாடலுக்கே உரிய சிறப்புத் தன்மைகள்கொண்ட இக்கதைப் பாடல் புராணக் கதைப்பாடல் வகையைச்சேர்ந்தது. கதைப்பாடல் கால மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பாடு நம்பிக்கைகள் என்று ஒட்டு மொத்த மக்களின் வாழ்வியலை இக்கதைப் பாடல் விளக்குகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. சி. சுப்பிரமணியன், நாட்டுப்புறக் கதைப்பாடல்களில் காப்பியக் கூறுகள் ப–3
2. E.F. Brenda Beck, The tree, The telling of a South India Flot EPIC, P.8
3. வ. அலமேலு, தோட்டுக்காரி கதை,ப.1
4. மேலது, ப.3

# 40. நாட்டுப்புற ஒப்பாரிப் பாடல்கள் - ஓர் அறிமுகம்

*எஸ். ஜெயசுதா*
ஆய்வாளர், தமிழியல் துறை
புதுவைப் பல்கலைக் கழகம்

## முன்னுரை

இன்று வளர்ந்து வரும் துறைகளில் நாட்டுப்புறவியலும் ஒன்றாகும். நாட்டுப்பறவியலை இலக்கிய வடிவம் பெற்றவை, இலக்கிய வடிவம் பெறாதவை என்ற இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். இந்த நாட்டுப்புறப்பாடல்களை அறிஞர்கள் பொதுவாகத் தாலாட்டுப்பாடல்கள், சிறுவர் பாடல்கள், தொழில் பாடல்கள், ஆட்டப்பாடல்கள், ஒப்பாரிப்பாடல்கள் என்று வகைப்படுத்துவர். சில அறிஞர்கள் தம் நிலைக்கு ஏற்ப பலவாறாகப் பிரிக்கின்றனர். அவர்களில் ஆறு. அழகப்பன், சுரேந்திரன், க. சண்முக சுந்தரம், நா வானமாமலை ஆகியோர் குறிப்பிடத்தக்க வர்களாவர். அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் இருந்தாலும் அனைவருமே ஒப்பாரிப் பாடல் என்ற ஒரு பிரிவைக் குறிப்பிட்டிருப்பது இங்கே குறிப்பிடத்தக்கதாகும். வாழ்க்கையின் அவல நிலைகளை ஒப்பாரிப்பாடல்கள் உள்வாங்கியிருப்பதால் இவை உணர்ச்சிப்பாடல்களாக அமைந்திருக்கின்றன.

புலவர்களால் உருவாக்கப்பட்டுக் கற்றவர்களால் போற்றப்படுபவை ஏட்டிலக்கியங்களாகும். பாமர மக்களால் உருவாக்கப்பட்டு அவர்களாலேயே காப்பாற்றப்படுபவை நாட்டுப்புற இலக்கியங்களாகும். நாட்டுப்புறப்பாடல்களை, நாடோடிப் பாடல்கள், வாய்மொழி இலக்கியம், ஏட்டில் எழுதாக் கவிதைகள், பரம்பரைப் பாடல்கள், காற்றில் வந்த கவிதைகள், காற்றில் மிதந்த கவிதைகள், நாட்டார் பாடல்கள் என்று பலவாறாகக் குறிப்பிடுவர். நாட்டுப்புறப்பாடல்கள் நாட்டுப்புற மக்களின் வாழ்வோடு வாழ்வாகப் பின்னிப் பிணைந்துள்ளன. மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரையுள்ள நிகழ்வுகள் நாட்டுப்புறப்பாடல்களின் பொருளாகின்றன.

நாட்டுப்புறப்பாடல்கள் பெரும்பாலும் காடு, கழனிகளிலும், தோட்ட வயல்களிலும், தொழில் செய்யும் இடங்களிலும்பிறக்கின்றன. நாட்டுப்புற மக்களின் வாழ்க்கைத் தாலாட்டுப்பாடல்களில் தொடங்கி விளையாட்டு, காதல் பாடல்களில் வளர்ந்து திருமணப்பாடல்களில் நிறைவெய்தி ஒப்பாரிப்பாடல்களில் முடிவடைகின்றது. இன்ப துன்பங்களைப்பற்றி மக்கள் தாங்களாகவே பாடுவதால் இதனை மக்கள் இலக்கியம் என்றும் அழைப்பர். ஒரு நாட்டு மக்களின் நாகரீகத்தை, பண்பாட்டை பழக்க வழக்கங்களை, வரலாற்றை, நாட்டு நடப்பை உண்மையான முறையில் படம் பிடித்துக்காட்டுவனநாட்டுப்புறப்பாடல்கள் என்பது மிகவும் பொருத்தமானதாகும். நாட்டுப்புறப்பாடல்கள் எளியவை, இனியவை, எழுதப்படாதவை, வாயில் பிறந்து செவிகளில் உலவி காற்றில் மிதந்து கருத்தில் இனிப்பவைகளாக உள்ளன.

"ஒப்பாரி'' என்னும் சொல் ஆங்கிலத்தில் என்று அழைக்கப்படுகிறது. ஒப்பாரி என்பதை ஒப்பு + ஆரி என்று பிரித்து "ஒப்புச் சொல்லிஅழுதல்'' என்று பொருள் கொள்ளலாம். இன்றளவில் ஒப்பாரிஎன்பதை ஒப்புக்கு அழுதல் என்றும், இறந்தவர்களுக்கும், பிறபொருள்களுக்கும் ஒப்புச் சொல்லிப் பாடி அழுதல் என்றும் கூறுவர். சிலர் ஒப்பாரியைப் பிணைக்கானம், இரங்கற்பா, இழவுப்பாட்டு என்றெல்லாம் கூறுகின்றனர். "தலைச்சன் பிள்ளைக்குத் தாலாட்டும் புருஷனை இழந்தவனுக்கு ஒப்பாரியும் தானாகவே வரும்'' என்ற பழமொழி இக்கருத்துக்கு அரணாக விளங்குகிறது. இறந்தவர்களை நினைத்து அவர்கள் மீது பாடப்படும் பாடல்களே ஒப்பாரிப்பாடல்கள் ஆகும். இன்று ஒப்பாரிப்பாடுதல் ஒரு தொழிலாகவே மாறிவிட்டது. இதை 'கூலிக்கு மாரடித்தல்' என்ற நாட்டுப்புற வழக்காறு உறுதிப்படுத்தும்.

ஒப்பாரிப்பாடல்களை அவற்றின் உள்ளடக்கத்தை அடிப்படையாகக் கொண்டு குழந்தைக்கு ஒப்பாரி, கணவனுக்குஒப்பாரி, தாய், தந்தை, மாமனார், அண்ணன், தம்பி, போன்றோர்க்கு ஒப்பாரி பாடுதல் என்ற வகையில் வகைப்படுத்தலாம். ஒரு பெண் குழந்தைப்பருவத்தில்பெற்றோரின் பாதுகாவலிலும் இளமைப்பருவத்தில் கணவனின் பாதுகாவலிலும் முதுமைப்பருவத்தில் தன் மக்களின் பாதுகாவலிலும் வாழ்கிறாள். இம்மூன்று பருவங்களில், கணவனின் பாதுகாப்பிலும் அரவணைப்பிலும் வாழும் வாழ்க்கைதான் ஒரு பெண்ணுக்கு ஏற்றமும் பெருமையும் அளிக்கக்கூடியதாக அமைகின்றது. 'ஒரு பெண் தன் கணவனுக்கு நிகராக வேறு ஒருவரைநினைக்கக்கூடாது'' என்பதை "கணவனை இழந்தோருக்குக் காட்டுவது இல்'' என்று சிலப்பதிகாரமும்,'' கொண்டாளின் துன்னியகேளிர் பிந் இல்லை 'என்று நான்மணிக்கடிகையும், கணவனுக்கு மிஞ்சிய உறவும் இல்லை, கோவணத்திற்கு மிஞ்சின வறுமையும் இல்லையென்ற பழமொழியும் உணர்த்துகின்றன.

ஒரு பெண்ணுக்குத் திருமணம் முடிந்த மறுநாளே கணவன் இறந்துவிடுகிறான். அவள் பலவாராகப்புலம்புகிறாள். தான் இவ்வாறு வருத்தப்பட்டு அழுதால் கருநாகப் பாம்பும் கூடி மனம்இறங்கி கண்ணீர் விடும் என்று கூறுகிறாள்.

இதோ பாடல் வருமாறு:

கல்லுமேலே நின்னுகினு
கன்னிகுறை சொன்னாக்கா
கல்லும் கிடுகிடென்னும்
கல்லில் இருக்கும்
கருநாகம் கண்ணீர்விடும்!
புத்துமேலே நின்னுகினு
பொண்ணு குறை சொன்னாக்கா
புத்தும் கிடுகிடென்னும்
புத்தில் இருக்கும்
புதர்நாகம் கண்ணீர்விடும்!

என்ற பாடலைச் சான்றாகக் கூறலாம்.

குழந்தைக்கு: "பிள்ளை இல்லா வாழ்வு, பேய்வாழ்வு" என்பது பழமொழியாகும். தாய் ஒருத்தி குழந்தையைச் சீராட்டி பாராட்டி வளர்த்தாள். ஆனால் அக்குழந்தை 5 மாதங்களுக்குள் இறந்து விட்டதை எண்ணி,

மடியில் கிளி வளர்த்து
மலையோரம் மேய விட்டேன்
மலையோரம் மேய்ஞ்ச கிளி
மடிவந்து சேரலையே!
மடியில கிளை வளர்த்து
மதிலோரம் விட்டு வச்சேன்
மதிலோரம் விட்ட கிளி
மாயமாய் மறைச்சதடா!

இவ்வாறு கூறிக் கலங்குகிறாள்.

தந்தைக்கு: ஒரு பெண்ணின் முதல் பாதுகாவலர் அவளின் தந்தையே ஆவார். அப்பெண் தந்தையிடம் மிகுந்த பாசம் கொண்டவளாகஇருந்தாள். தந்தை இறந்த செய்தி கேட்ட அவள்,

காதவழி நடந்து – என்
காலுரெண்டும் நோகுதின்னா
காசி தீர்த்தம் வாங்கி – என்
கால் நோவு தீர்த்திடுவீர்!
தூர வழி நடந்து – என்
தொடைரெண்டும் நோகுதின்னா
துளசிமாலை தீர்த்தம் வாங்கி – என்
தொடை நோவு தீர்த்திடுவீர்!

இவ்வாறு புலம்புகிறாள்.

பல மருந்துகள் கொடுத்தும் பயன் இல்லையே என்றும் வருத்தப்பட்டு மக்களின் பாடல் வருமாறு:

இஞ்சியைத் தூளு பண்ணி
எலுமிச்சை சாறு பிழிஞ்சு – நான்
ஏழப்பொண்ணு குத்தும்பாலு
என்னப் பெத்த அப்பாவே
தேடி அழைச்சாலும் – நீங்க
திரும்புவீரோ இந்தப்பக்கம் !

தாய்க்கு: தாய்க்கும் மகளுக்கும் இருக்கும் நெருக்கம் தான் அதிகம். ஒருபெண் எந்த ஒரு குறையையும் தன் தாயிடம் தான் துணிந்து சொல்வாள். தாய் இறந்துவிட்ட செய்தி கேட்டு மகள் கதறுகிறாள்,

எட்டுமணி வண்டியேறி– நான்
இளைப்போடு வந்து நின்னா
ஏலரிசிக் கஞ்சி காய்ச்சி

இளைப்பாத்தும் அம்மாளாச்சே!
பத்துமணி வண்டியேறி – நான்
பசியோடு வந்து நின்னா
பச்சரிசிக் கஞ்சி காய்ச்சி
பசியாத்தும் அம்மாளாச்சே
தாய் வீட்டுச் சேதியின்று
தந்தி வந்து தகவல் சொல்ல – அங்கே
அழுதபிள்ளை தூக்காமல்
அரண்மனையைச் சாத்தாமல்
அரண்மனையைச் சாத்தாமல்
அவரிடத்தில் சொல்லாமல்
அலைந்த கூந்தல் முடியாமல்
உரியில பணம் எடுத்தா
ஒரு மணி ஆகுமின்னு
அறையில பணம் எடுத்தா
அஞ்சுமணி ஆகுமின்னு
அப்போ பணம் எடுத்து
ஆகாயக் கப்பல் ஏறி
அப்பாலே நான் பொறந்த
அரண்மனையை வந்தடைஞ்சேன்.

அண்ணனுடன் பிறந்த தங்கை ஒருத்தி தன் அண்ணன் இறந்துவிட்டசெய்தி கேட் துடிதுடித்து,

கருப்பு சைக்கிள் வண்டி – எங்கண்ணன்
காசாடும் ரப்பர் பந்து
காசாடும் அண்ணனுக்கு
காபி கொண்டு போனாயே
காபி இருந்தா இருக்கட்டும்மா
கவலையைச் சொல்லுமென்பார்

என்று கூறி அழுகிறாள்.

இவ்வாறாக மாமனாருக்கும், தம்பிக்கும், மைத்துனருக்கும் கூடஒப்பாரி பாடுதல் உண்டு.

இதுவரை ஒருவர் இறந்துவிட்டால் மற்ற உறவினர்கள் கூடிப்பாடி அழுவதுதான் ஒப்பாரி என்கிறோம். ஆனால் ஒரு பெண் தான்இறந்துவிட்டதாகக் கற்பனை செய்து பாடும் ஒப்பாரியும் நாட்டுப்புறப் பாடல்களின் வழியாக அறிய முடிகிறது.

அம்மாவுக்கு ஆள் அனுப்பினால் முந்தாணையை விரித்து முகத்தின்மீது போட்டழுவாள் என்றும், அக்காள் பம்பைத் தலைவிரித்துபாடை மீது விழுந்து அழுவாள் என்றும், அண்ணனோ அந்திக் கடை திறந்து, ஆகாயக் பட்டெடுத்து

வரும்போது பட்டணமும் கூட்டவரும் என்றும் அறிய அவள் தன் அண்ணி இவ்வாறு வருவாள் என்று கற்பனையாகப்பாடுகிறாள்.

அண்ணிக்கு ஆள் அனுப்ப
வாய்க்கரிசி கொண்டு வந்து
வழி நெடுக கல்பார்ப்பான்
வாய்க்கரிசி தீர்ந்து போக
அந்தவழி திரும்பிவிடுவாள்
என்று பாடுகிறாள்.

## முடிவுரை

மக்கள் வாழ்வின், முன்னுரையைத் 'தாலாட்டு' எனவும் முடிவுரையை "ஒப்பாரி" எனவும் நாட்டுப்புறப்பாடல் பாகுபடுத்துகிறது. தாலாட்டு கலங்கரை விளக்கமானால் ஒப்பாரி நினைவுச்சின்னமாகும். நாட்டுப்புறப்பாடல்களின் ஒரு பிரிவாகவும் இறந்தவர்களக்கு ஒப்புச்சொல்லி அழுதல் என்ற நிலையும் "ஒப்பாரி" அமைகிறது. பொதுவாக, ஒப்பாரிப்பாடல்கள் இறந்தவர்களின் நெருங்கிய உறவுகளை ஒட்டி அமையக்கூடியதாகும். அன்றும் சரி, இன்றும் சரி, நாட்டுப்புறப்பாடல்களில் நெஞ்சைப் பறிகொடுத்தவர்களே இல்லை என்பதில் ஐயமில்லை.

# 41. கல்வெட்டுக்கள் சுட்டும் சாதியச் செய்திகள்

*முனைவர் அரங்க.மு. முருகையன்*

புதுவை

தமிழக வரலாற்றில் தொழில் அடிப்படையில் தொடக்கத்தில்பிரிந்திருந்த மக்கள் பின்னாளில் வடவரின் வருகையால் ஏற்படுத்தப்பட்ட வர்ணமுறையின் ஆதிக்கத்தால் 'சாதி' என்னும்நிறுவனமாகச் செயல்பட்டனர். தமிழரின் தொன்மை நூலான தொல்காப்பியம் நான்கு வர்ணப்பாகுபாட்டை எடுத்தியம்புகின்றது. சங்க இலக்கியத்தில் "வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்கீழ்ப்பால் ஒருவன் கற்பின் மேற்பால் ஒருவனும் அவன்கட்படுமே" எனப் புறநானூற்று பாடல் சுட்டுகின்றது.

தமிழரின் சமுதாய அமைப்பு அரசர், அந்தணர், வணிகர்,வேளாளர் எனும் படிநிலயமைப்பின்கீழ் இயங்கியதோடு அடியோர், வினைவலர் போன்ற கீழ்நிலையான தொழில் பிரிவு மக்களையும் கொண்டிருந்தது. இத்தகைய சமூக அமைப்பில் உயர்ந்த சாதிகள் ஆளும் அதிகாரங்களில் இடம் பெற்று அவை தங்களுக்குக் கீழாக இருந்த சாதிகளை ஆதிக்கம் செலுத்திய நிலைகளைப் பெரும்பான்மையான கல்வெட்டுகளில் காண முடிகிறது.

தமிழகத்தை ஆண்ட மன்னர்கள் பெரும்பாலும் மனுதர்மத்தின் அடிப்படையிலேயே ஆட்சியை மேற்கொண்டதால் ஆளும் வர்க்கமான சத்திரியவர்க்கமும் அதற்குத் துணை நின்ற வேளாள வர்க்கத்தினரும் ஆட்சியதிகாரங்களில் இடம் பெற்றனர். சமய நிலையில் முதல்படியில் இருந்து இச்சமுதாயத்தை இயக்கிய பிராமணர்களும் சமூக அமைப்பில் மேலிடத்தைப் பெற்றனர். உழைக்கும் மக்களான பிறர் சமூகத்தளத்தில் கீழ்நிலையிலேயே இடம்பெற வேண்டியதாயிற்று.

## கல்வெட்டுகள் சுட்டும் சாதிப்பெயர்கள்

கல்வெட்டுகள் பல்வேறு சாதிப் பெயர்களைப் பதிவு செய்துள்ளன.சில வருமாறு:

"பள்ளி", "கலனைகள்" "வண்ணார்" "அகம்படித்தனமுதலி", "கைக்கோளர்" "பிள்ளைமுதலி" "செட்டி" "முவச்சர்" "பெரும்வேடம்" "பாணர்" "பறையர்" "பறைமுதலி" "செக்கிலியர்" "இருளர்" "அந்தனன்" "வெள்ளாழர்" "எண்ணெய்வாணியர்", "நாவிதர்", "நாட்டுச்செட்டிகள்" "வன்னியன்" முதலிய சாதிகளைக் கல்வெட்டுகளில் காணமுடிகிறது. ஒவ்வொரு சாதியும் தங்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த பழக்க வழக்கங்களை மேற்கொண்டும் அந்த அந்தச் சாதிக்குரிய தொழிலை மேற்கொண்டும் இயங்கின.

## கல்வெட்டுக்கள் சுட்டும் சாதிக்குரிய இடங்கள்

தமிழர் வாழ்வில் மனுதர்மம் போதித்த பல சடங்குகள் வாழ்வியல் கூறுகளாயின. இந்நிலையிலேயே வாழிடம் முதல், இறந்தவர்களைப்புதைக்கவும்

எரிக்கவுமாக அமைந்த ஈமக்காடுகள் வரை அனைத்து நிலைகளிலும் ஒவ்வொரு சாதிக்குமாக வரையறைகள் மேற்கொள்ளப்பட்டிருந்தன. மக்கள் வாழிடங்கள் அந்த அந்தச் சாதிநிலைக்கேற்ப அமைக்கப்பட்டிருந்தன. "சோழர் கல்வெட்டு க்களில் பறைச்சேரி, கம்மான்சேரி, ஈழச்சேரி, வண்ணாரச்சேரி, தீண்டாச்சேரி எனத் தனி ஊர்ப்பெயர்கள்குறிக்கப்பெறுகின்றன. பிராமண சுடுகாடு, வெள்ளாள சுடுகாடு, பறைச்சுடுகாடு எனத் தனித் தனிச் சுடுகாடுகளும் அச்சுடுகாட்டுக்குப் போகும் வழிகளும்" தனித்தனியே இருந்தமையைக் கல்வெட்டுகளால் அறிய முடிகின்றது.

"உடையார் ஸ்ரீ ராஜராஜ தேவர் குடுத்த ஊர்களில் ஊர்நத்தமும்ஸ்ரீ கோயில்களும் குளங்களும். ஊடறுத்துப்போன வாய்க்கால்களும் பறைச்சேரியும் கம்மானசேரியும் சுடுகாடும் உள்ளிட்டு இறையிலி நிலங்களும்" எனவும், "ஸ்ரீ கோயில்களம் சுடுகாடும், ஈழச்சேரியும் கம்மாண சேரியும் பறைச்சேரியும் பறைக்குலங்குழியும்" எனவும், "புலத்தில் குலங்களும் தீண்டாச்சேரியும் பறைச்சேரியும், சுடுகாடும் ஆக இறையிலி நிலம் நான்கரையெ முகக்காணி" எனவும், "இவ்வூர் ஈழச்சேரியும், பறைச்சேரியும், வெள்ளான் சுடுகாடும் பறைச்சுடுகாடும் கற்கிடையுமாக" எனவும், "உழல்பறையர் இருக்கும் கீழைச்சேரியும்" எனவும்,
வரும் கல்வெட்டு வரிகள் சாதிக்குரிய சேரிகளையும் ஈமக்காடுகளையும் சுட்டுகின்றன. மேற்கண்ட சான்றுகளின் வழி மக்கள் பல்வேறு இடங்களில் பல்வேறு பிரிவுகளாக வாழ்ந்துவந்தனர் என்பதையும், பறையர்கள், வண்ணார்கள், கம்மாளர்கள், வெள்ளாளர்கள் போன்றவர்கள் தனித்தனியே வாழ்ந்துள்ளனர் என்பதையும் அறிய முடிகின்றது. இவையன்றி மேற்கண்ட இடங்களும், சுடுகாடுகளும் வரி நீக்கம் பெற்று விளங்கின.

இன்றளவிலும் சுடுகாடுகள் சாதிக்குத்தக ஒதுக்கப்பட்டுள்ளன. சேரியில்வாழும் தாழ்த்தப்பட்ட மக்கள் பிறசாதியினர் வாழும்பகுதிகளுக்கு அருகே உள்ள சுடுகாடுகளுக்குப் பிணத்தை எடுத்துச் செல்லும்போது கலவரங்கள் ஏற்படுகின்றன. இவையே சாதியப் பூசல்களுக்கு அடிப்படையாய் அமைகின்றன.

## சாதியச் சடங்குகள்

சடங்குகளை மையமாகக் கொண்டு இயங்கிய சமூக அமைப்பில் சாதிக்குச் சாதி சடங்குகள் வேறுபட்டன. இதனால் சாதியின் வளர்ச்சிக்கும் அதனைக் கட்டிக் காப்பதற்கும் சடங்குகள் பெரிதும் துணைநின்றன.

சாதியின் வளர்ச்சிக்கான சூழல் அச்சாதிகளுக்கென்று நிர்ணயம் செய்யப்பட்ட பழக்க வழக்கங்களையும் சடங்குகளையும் கொண்டு இயங்கியமையால் ஒரு சாதியின் பழக்கவழக்கங்கள் அல்லது சடங்குகளைப் பிற சாதியினர் கடைப்பிடிக்கும்போது அங்குச் சாதியப்பூசல்கள் ஏற்பட்டன. சமுதாயத்தில் உயர்ந்தசாதிக்குரிய பழக்கவழக்கங்களைக் கீழ்சாதியில் உள்ளோர் பின்பற்றுவது சமூகக் குற்றமாகக் கருதப்பட்டது.

## சாதியக் கட்டுப்பாடுகள்

காலந்தோறும் அரசர்களாலும் ஆளும் வர்க்கத்தினராலும் வர்ணமுறையிலான சாதியக்கட்டுக்கோப்புகள் கட்டிக்காக்கப்பட்டன. இச்சாதியக் கட்டுகளை மீறுவோரும் மீற முயற்சிப்போரும்கடுமையான சட்டங்களின் வழித் தடுக்கப்பட்டனர். வீரப்ப நாயக்கர் காலத்தில் சாதிக்கு இல்லாத காரியங்கள் செய்வது மிகப்பெரிய குற்றமாகக் கருதப் பெற்றது. சூத்திரர்கள் வீடுகளில் உண்ணக்கூடாது; அவ்வாறு செய்பவர்கள் சாதிக்குப் புறம்பிட்டுக் கண்ணும் பறித்துத் தேசம் கடத்தப்பட்டனர். உற்பத்தி கன்று காளி கோயிலுக்கு உரித்தானது. அவர்கள் வீடு குளம் பறித்து வண்ணான்துறை ஆக்கப்பெற்றது. எனவே, சாதிக்கென்று ஒதுக்கப்பட்ட இடங்களில் அதற்கென்று வரையறுக்கப்பட்ட பழக்கவழக்கங்களும் சடங்குகளுமே வாழ்வியல் கூறுகளாக அமைந்தன. தொழில்வழிப் பிரிந்து வாழ்ந்த மக்கள் அவர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட இடங்களிலே ஒதுங்கி வாழ்ந்தனர்.

சாதிய ஏற்றத்தாழ்வுகள் பெருகிய காலத்தில் உயர்ந்த சாதிகள் கடைபிடித்த பழக்கவழக்கங்களைச் சாதியப்படிநிலையில் கீழான இடத்தில் இருந்தவர்கள் பின்பற்றி அதன்வழி தங்களைச் சாதிப்படிநிலையில் உயர்த்திக்கொள்ள முயன்றனர்.

"தொழிலாளர்கள் பெரும் முயற்சிகள் எடுத்துப் பல உரிமைகளைப் பெற்றது உண்டு. எடுத்துக்காட்டாகத் தச்சுத் தொழிலாளர்கள் தேர்த் திருவிழாக்களின் போது தங்களுடைய தலையில் தலைப்பாகை அணிந்து கைகளில் உளியும் சுத்தியும், மரம் அறுக்கும்வாளையும் கொண்டு, தேரின்பின் போவதும், சிலர் இடுப்பில் அங்கவஸ்திரம் அணிந்து போவதும் வழக்கங்கள்" எனக்கு கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இத்தகைய உரிமைகள் அனைத்து மக்களுக்கும் அளிக்கப்பெறவில்லை என்பது கவனத்திற்குரியது.

## நில விற்பனையில் சாதி

சாதிப்படிநிலையில் உயர்ந்தவர்கள் தங்களின் கீழானவர்களுக்கு நிலத்தை விற்பதோ அல்லது அவர்களிடமிருந்து வாங்குவதோகூடாது எனச் சமூகத்தடை இருந்ததைக் கல்வெட்டுக் குறிப்புகள் வழி அறியமுடிகின்றது. விஜயநகர மன்னர்களது ஆட்சிகாலத்தில் "ஓரினத்திற்கு அல்லது சாதிக்குச் சொந்தமான நிலங்களை வேறு இனத்தை அல்லது சாதியை சேர்ந்தவர்கள் வாங்கக்கூடாதெனத் திட்டங்களும் அக்காலத்தில் நிலைபெற்றிருந்தன. மைசூர் நாட்டில் மாலவல்லி என்னும் கிராமத்தில் வசித்த அந்தணர் மற்ற வகுப்பினர்களுக்கு நிலங்களை விற்கக்கூடாதெனவும் அதற்குமாறாக விற்றால் கிரயம் செய்த அந்தணர்கள் சாதியிலிருந்து விலக்கப்படுவாரென்றும், கிரயம் செய்யப்பெற்ற நிலத்திற்குத் தண்ணீர் பாய்ச்சும் முறை வழங்கப்படாதெனவும் சமுதாயத் திட்டம் ஒன்றை இயற்றியுள்ளனர்".

### சாதிகளுக்கான வரி நீக்கம்

சமுதாயம் மேற்கண்டமுறைகளில் இயங்கியபோது உயர்ந்த சாதிகள் சமூக ஆளுமையில் உயர்வான இடத்தில் இருந்தன. அரசர்களுக்கும் கீழ்சாதி மக்களுக்கும் தொடர்பை ஏற்படுத்துகின்ற நிலையில் உயர்ந்தசாதிகள் விளங்கின. வரி வசூலிலும் ஊர் நிர்வாகத்திலும் சமூகநிலையில் உயர்ந்திருந்த சாதிகளே இடம்பெற்றன. "பிராமணர் வெள்ளாளர் முதலிகள் ஊரில் உள்ள பணத்தை வசூலித்துக் கோயிலுக்குச் செலவு செய்ய உரிமை பெற்றிருந்தனர்". மேலும், கம்மாளருக்கான வீட்டு, நிலத்துவரிகளும் மானியமாக வழங்கப்பட்டன. "களுவ நாயக்கர் திருவதிகையில் வாழ்ந்த கம்மாளருக்கு வாசல் வரி, நென்னமைரத்துவரி போன்றவற்றை மானியமாகத் தந்துள்ளதைக்" கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

### சாதிகளுக்கிடையே ஏற்பட்ட ஒப்பந்தம்

சாதிய அமைப்பு இறுக்கம் பெற்ற நிலையில் மக்களிடையே பழக்கவழக்கங்களை மேற்கொள்ளுதல் தொடர்பாக அவ்வப்போது பல ஒப்பந்தங்கள் ஏற்பட்டுள்ளன. இதைக்கல்வெட்டுகள் பதிவு செய்து வைத்துள்ளன. இத்தகைய ஒப்பந்தங்கள் வேறுபட்ட சாதிகளுக்குள்ளும், ஒரே சாதிக்குள் அச்சாதியினர் வேறு வேறு தெருக்களில் குடியிருக்கும் போதும் நிகழ்ந்துள்ளமையைக் கல்வெட்டுகளால் அறிய முடிகின்றது. இத்தகைய ஒப்பந்தம்,

1. ஆட்சியதிகாரம் பெறுதல் தொடர்பாகவும்,
2. திருவிழாக்காலங்களில் எத்தகைய உரிமைகளை யார் யார் கடைப்பிடிப்பது என்பது தொடர்பாகவும் ஏற்பட்டுள்ளது.

### ஆட்சியதிகாரம் பெறுதல் தொடர்பாக உள்ள கல்வெட்டு

திருவண்ணாமலை ரிஷிமேஸ்வர ஆலயக்கல்வெட்டொன்று குடும்பத்தில் உள்ளவர்களில் ஆட்சியை அடுத்து யார் ஆளுவது என்பது தொடர்பாக ஏற்பட்ட சிக்கல்களையும் அச்சிக்கல் தொடர்பாக அவ்வூர்பகுதியைச் சேர்ந்த சாதிகள் மேற்கொண்ட செயல்பாடுகளையும் விளக்குவதாக அமைந்துள்ளது.

"பிள்ளை, முதலிகளும் நாட்டு நாயகம் செய்வார்களும் மன்றாடுவார்களும், படைநாயகஞ்செய்வார்களும், தனியாள் முதலிகளும், மலையன் முதலிகளும், மலையான முதலிகளும், செட்டிகளும். வாணிகரும். கணக்கரும், மன்றாடிகளும், முவச்சரும், பன்னிரண்டு பணி மக்களும், பெரும்வேடரும், பாணரும். பறையரும், பறை முதலிகளும், செக்கிலியரும், இருளரும், உள்ளிட்ட அனைத்துச் சாதிகளும் அந்தணன் தலையாக அரிப்பன் கடையாக அனைத்துச் சாதிகளும்" சுற்றுப்பட்டு மக்களுமாகச் சேர்ந்து அரசாள்கின்ற தகுதி தாய்வழிவந்த நரசிங்கப்பன்மர் மகன் பெரியுடையானுக்கே அன்றி மாற்றாந்தாய்ப் பிள்ளையான அம்பட்டாழ்வானுக்கோ அவது தம்பிக்கோ அரும் உரிமை இல்லை எனத் தீர்மானித்தனர். இதை மீறி மக்கள்

அம்மட்டாழ்வானுடனோ அல்லது அவனுடைய தம்பியுடனோ தொடர்பு உண்டாகில் இவர்கள் இராசதுரோகிகள் எனவும் நாயினும் பன்றியினும் கடையானவர்கள் எனவும் இப்படி நாங்கள் உறுதிமொழி எடுத்துக்கொண்டு அதைமீறி நடப்போமென்றால் "வல்லவரையன் சத்தியம், தங்கள் அம்மைக்குத் தானோமனாளன் அசல் வன்னியர் குதிரைக்குப் புல்லுப்பறிக்கிற பறையர்க்கு எங்கள் பெண்டுகளைக் கொடுத்தோமாகில்'' எனச் சூளுரைக்கின்றனர். மேற்கண்ட கல்வெட்டு அன்றைய சமூக அமைப்பு சாதியவழியாகச் செயல்பட்ட முறையை நன்கு புலப்படுத்துகின்றது.

'அந்தணன் தலையாக அரிப்பன் கடையாக' எனவும், "வன்னியக்குதிரைக்குப் புல்லுப்பறிக்கிற பறையர்க்கு எங்கள்பெண்டுகளைக் குடுத்தோமாகில்'' எனவும் வரும் தொடர்கள் அக்காலத்தினுடைய சாதிய நிலையைத் தெளிவுபடுத்துகின்றன. சமூகத்தளத்தில் அந்தணர்கள் உயர்ந்திருந்ததையும் பறையர்கள் சாதிய தளத்தில் கீழ்நிலையில் இருந்தமையையும் இக்கல்வெட்டின் அடிகள் நன்குணர்த்துகின்றன.

சாதிய தளத்தில் உயர்ந்திருப்போர் தங்களுக்குக் கீழானசாதிகளுக்குப் பெண்களைத் திருமணம் முடித்துத் தருவதை இழிவாகவும் தகுதி குறைவானதாகவும் கருதினர் என்பதை உணர முடிகிறது. சாதியச் சமூக அமைப்பில் தமிழரிடையே வழங்குகின்ற திட்டும் முறையில் உயர்ந்த சாதியினர் தங்களைவிடக் கீழானச் சாதியின் பேரைச் சொல்லித் தாழ்த்திப் பேசுகின்ற பழக்கத்தை மேற்கொண்டு வருவதை இக்கல்வெட்டு தெரிவிக்கின்றது.

## ஒரே சாதியனருக்குள் ஏற்பட்ட ஒப்பந்தம்

- இரண்டு தெருக்களுக்குள் வசித்த ஒரே சாதியினருக்குள் ஒப்பந்தம் நிகழ்ந்துள்ளதைக் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது. இவ்வொப்பந்தமானது தேவி வழிபாட்டில் பயன்படுத்தக்கூடிய உரிமைப்பொருள் தொடர்பாக நடந்துள்ளது. கி.பி.1455 ஆம் ஆண்டு பண்டேரிதேவன்காலத்தில் கொண்டபூர் என்ற இடத்தில் வாழ்ந்த இரண்டு தெரு செட்டிகளுக்கிடையே ஏற்பட்ட ஒப்பந்தமாவது, "திருவிழாக் காலங்களில் தேவி வழிபாட்டிற்கு இவ்விரண்டுத் தெருவைச்சேர்ந்த செட்டிகளில் ஒருபிரிவினர் ஆடுகளையும் அரிக்காமரத்தையும் உடன்கொண்டு செல்ல'' ஒப்பந்தம் செய்துகொண்டனர்.

எனவே, மேற்கண்ட கல்வெட்டுகளின் வழிச் சாதிகள் தங்களுக்குள்ளாக ஒன்றுகூடி சமூக முரண்பாடுகள் ஏற்படாதவண்ணம் உடன்பாடுகளை ஏற்படுத்திக்கொண்டு இயங்கினர் என்பதை உணரமுடிகிறது. மேலும் கல்வெட்டுகளில் நிறுவனமயப்பட்ட சாதிய அமைப்பின் வெளிப்பாடுகளே பதிவாகி உள்ளன.

# 42. மட்பாண்டக் கலையின் வளர்ச்சி

ச. முத்துவேல்
தமிழ் விரிவுரையாளர்
நல்லமுத்துக்கவுண்டர் மாகலிங்கம் கல்லூரி, பொள்ளாச்சி

## முன்னுரை

மட்பாண்டம் என்ற சொல் மண்ணால் உருவாக்கப்படும் பொருட்களைக் குறிக்கும். அவ்வாறு மண்ணால் பொருட்களை உருவாக்கும் இத்தொழில் மட்பாண்டக் கலை எனப்படும். "கண்ணுக்குப்புலப்படாத நுண்தொலைகளுள்ள (Porous) பாண்டப்பொருள் அனைத்தும் பாண்டங்கள் எனப்படும்" எனக் கலைக் களஞ்சியம் விளக்கம் தருகிறது. இதன் மூலம் பாண்டம்என்பது மட்பாண்டத்தைக் குறிக்கிறது.

மட்பாண்டக் கலை மிகவும் தொன்மை வாய்ந்ததாகவும் பண்பாட்டின் எச்சங்களாகவும் விளக்கிடைக்கின்றன. "ஹரப்பா மோகஞ்சதாரோவின் காலம் கி.மு. 3200–க்கும் 2500 க்கும் இடைப்பட்டது" என்பர். ஏசு கிறிஸ்து பிறப்பதற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பே மட்பாண்டங்களைப் பயன்படுத்தியதற்கான சான்றுகள் ஹரப்பா மொகஞ்சதாரோ அகழாய்வின் மூலம் கண்டுணர்த்தப் பட்டிருக்கிறது. மனிதன் அழிந்து போகக் கூடியவன். அவனால் படைக்கப்படும் படைப்புகள் கலை வடிவில் காலந்தோறும் நிலைபெற்றுக் கொண்டிருப்பவை.

'மட்பாண்டக் கலையின் தோற்றம் வளர்ச்சியினைப் பரந்துபட்டநோக்கில் ஆராயும் முகமாக அதன் பொதுக்கலைத் தன்மையினையும் அதனின்று அது நுண்கலையாக வளர்ச்சி பெற்றமையும், இதன் தொடக்க காலம் முதல் இக்காலம் வரை இன்ன பிற கலைகளோடு பெற்று வந்துள்ள தேர்ச்சியையும்வளர்ச்சியையும் பற்றிக் கூறுவதாய் இக்கட்டுரை அமைகிறது.

## மட்பாண்டம் பற்றிய தமிழகக் கண்ணோட்டம்

தமிழகத்திலேயும் மட்பாண்டக்கலை தொன்மைக் காலத்திலேயே தோன்றியிருக்க வேண்டும். இலக்கிய இலக்கணங்களில்மட்பாண்டங்கள் பற்றிய செய்திகள் இடம் பெற்றிருப்பதைக் காணும்போது அதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே அவை புழக்கதத்தில் இருந்திருக்கவேண்டும் என்பதை உணர முடிகிறது.

"தமிழ் மக்களது படைப்பு விலங்கு வடிவில் உள்ள சுட்ட மண்ணாலான தாழிகளும், தாழிகளுள் சில கலைப்பொருள்களுமாகக் கிடைத்துள்ளன" மட்பாண்ட வரலாற்றின் தொன்மையை ஆராய்பவர்கள் ஆதிச்சநல்லூர் புதை பொருட்களைச் சுட்டுகின்றனர்.

சிற்பக்கலைக்கு உரிய பத்து செய்பொருட்களில் மண்ணும் ஒன்றெனப்பதைத் திவாகர நிகண்டும் சுட்டுகிறது.

"கல்லும் உலோகமும் செங்கலும் மரமும்
மண்ணும் கதையும் தந்தமும் வண்ணமும்
கண்ட சருக்கரையும் மெழுகும் என்றிவை
பத்தே சிற்பத் தொழிற் குறுப்பாவன"

மேலும் சங்க இலக்கியங்களான புறநானூறு, ஐங்குறுநூறு, குறுந்தொகை போன்றவற்றிலும் இன்னபிற இலக்கியங்களிலும் மட்பாண்டம் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. அதற்குப் பின்னால் வந்த காலங்களிலும் படைப்பின் தரமும், கலை நயமும் சிறப்பாகவே இருந்திருக்கிறது. "சென்னை மாநிலத்தில் வட ஆற்காடு மாவட்டத்தில் கிரிகிரி என்ற ஊரில் செய்தவை பல அகில உலக பொருட்காட்சிச் சாலைகளில் பாராட்டு பெற்றுள்ளன. மதுரையில் செய்யும் கருநிற மட்பாண்டங்கள் மிகச் சிறந்தவை. சேலத்தில் ஓவியம் வரைந்த மட்பாண்டங்கள் தயாராகின்றன."

"தென்னிந்தியாவில் நீலகிரி மாவட்டத்தின் பழைய பாவைகள், விலங்குகள், மனிதர்கள் முதலியன அலங்கரிப்புள்ளவை. (முதுமக்கள் தாழிகள் என வழங்கும் சவப்பானைகளோடு கிடைத்த பானைகளில் கோயமுத்தூர் ஜில்லாவில் கிடைத்த மெருகு கொடுத்த பானைகள் விசேஷமாகக் கருதப்பட்டன" என்ற செய்திகளும் உள்ளன.

தமிழகத்தைப் பொறுத்தவரை பெரும்பாலும் கருப்பு, சிவப்பு நிறப் பாண்டங்களே செய்யப்பட்டிருக்கின்றன. ஏனை கிரேக்க ரோமானிய நாடுகளைப் போல் பச்சை, நீலம் நிறமுடைய பாண்டங்கள் இருந்திருப்பதாகத் தெரியவில்லை. மேலும் தமிழகத்தில் சக்கர உதவியினால் நேர்த்தியான பானைகளை வனைந்திருக்கின்றனர். "மலையாள ஊராளிக் குறும்பர், சிங்களத்திலுள்ள வேடர்கள், ஆப்பிரிக்க நீக்ரோக்கள், சைபீரிய யாகுட்சுகள் போன்றோர் சக்கர உதவியின்றியே பானை வனைந்தனர்" என்ற செய்தி கிடைக்கிறது.

"தென் ஆற்காடு மாவட்டம் திருக்கோவலூர் வட்டம் கீழ்வாலை என்னும் ஊரிலுள்ள வெவ்வேறு மூன்று குன்றுகளின் குகைப் பகுதிகளிலும், குன்றைச் சூழ்ந்துள்ள புன்செய் நிலப்பகுதிகளிலும், கருப்புச்சிவப்புச்சுடுமண் ஓடுகளும், மெல்லிய வழுவழுப்பான சிவப்பு மற்றும் கருப்பு நிற ஓடுகளும் முதுமக்கள் தாழிகளின் உடைபாடுகளும் பெருமளவு சிதறிக் கிடக்கின்றன. இவையனைத்தும் கி.பி. 1,2–ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்தவை எனக் கொள்ளலாம்". எனவே பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழகத்தில் மட்பாண்டக்கலை தோற்றம் பெற்றிருக்கின்றது என்பதை அறிய முடிகிறது.

## தமிழகத்தில் மட்பாண்டக்கலையின் வளர்ச்சி

தமிழகத்தின் மட்பாண்டக் கலை வளர்ச்சியினைப் பற்றி ஆராயுமிடத்து மட்பாண்டக்கலை–பொதுப்படைப்பு, மட்பாண்டக்கலை நுண்படைப்பு என்ற இருபெரும் பகுதிகளாகப் பாகுபடுத்திப்பார்த்தல் பயன்தரும். ஏனெனில் முன்னது வாழ்வியற் பயன்பாடுடையதாகும் பின்னது கலை முருகியல் உணர்வும் இன்பத்தையும் அளிப்பதாய் உள்ளன.

## மட்பாண்டக்கலை - பொதுப்படைப்பு

மனித வாழ்க்கைக்குப் பயன்படும் விதத்தில் அமைந்த தொழிலையே பொதுக்கலை என்று பார்த்தோம். தேவை என்றபயன்பாட்டு நிலையிலேயே ஆரம்பகாலத்தில் இக்கலை இன்றியமையாத சேவைகளில் ஒன்றாகப் பயன்பட்டிருக்கின்றன. மட்பாண்டம் கண்டுபிடிக்கப்படுவதற்கு முன் சுரைக்குடுக்கை,பாறை இடுக்குகள் போன்றவற்றில் நீரைச் சேமித்து வைத்தான் என்ற செய்தியை அறிவதன் மூலம் மட்பாண்டம் கண்டுபிடிக்கப்பட்டதற்கப் பின் பயன் கருதியே நிலையிலேதான் வளர்ச்சி பெற்றிருக்கக்கூடும் என்பதை ஊகிக்கவியலும். அக்கால கட்டத்தில் இக்கலையின் இன்றியமையாமை உணரப்பட்டு மிகுந்த * அளவிலே பயன்படுத்தப்பட்டு வந்திருக்கிறது. இன்றளவிலும் சுமார் ஐந்து மைல் தொலைவிற்குள் ஒரு குயவரையாவது காண முடியும் என்பதனின்று இக்கலையின் தேவையை அறிந்துகொள்ள இயலும். வேளாண்குடி மக்களிடையே புழக்கத்திலுள்ள மட்பாண்டங்களாலும் இதை நிறுவலாம்.

அறிவியல் வளர்ச்சியினால் இன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ள சில்வர், ஈயம் போன்ற இன்னபிற பாத்திரங்கள் வருகைக்கு முன் மட்பாண்டங்களே அதிகம் புழக்கத்தில் இருந்திருக்கின்றன. மனிதன் பிறந்தது முதல் அவனது இறப்புவரை சில மட்பாண்டங்கள் பயன்பட்டிருக்கின்றன. தண்ணீர் குடிக்க, உணவு சமைக்க, சாப்பிட, தானியங்கள் சேமிக்க என பல நிலைகளில் பயன்பாடுடைய பொதுக்கலையாகப் பல்வேறு வடிவமைப்புகளில்இக்கலை வளர்ச்சி பெற்று வந்திருக்கிறது.

## மட்பாண்டக்கலை - நுண்கலை படைப்பு

நுண்கலை, பொதுக்கலையிலிருந்து வேறுபட்டதும் வரலாற்று அடிப் படையில் பிற்பட்டதும் ஆகும். கலைநயமும், நேர்த்தியும், வேலைப்பாடும் மிகுந்த படைப்புகளை நுண்கலை என்கிறோம். மட்பாண்டக்கலையைப் பொறுத்தவரை நுன்கலைப் படைப்பு மேற்கூட்டிய சிறப்புகளை உள்ளடக்கியதாகவே காண ப்படுகிறது. இது கண்ணால் கண்டும் மனத்தால் உணர்ந்தும் மகிழத்தக்கது. பயன்பாடு என்ற தேவை நிலையிலிருந்து மாறி உணர்வுப் பூர்வமான நுண்கலை தோன்றுவதாயிற்று.

"பண்டைக்கால எகிப்தியர்கள் பொதுக்கலையிலிருந்துபடிப்படியாக விலங்குகள், தெய்வ உருவங்கள், இயற்கைப்பொருட்கள் போன்றவற்றைப் படைக்கலாயினர்" என்ற ஆங்கில நூற்குறிப்பு இதை உணர்த்தும், மனிதன் தன்னுடைய அறிவினாலும், மனோபாவத்தாலும், கற்பனையாலும் நுண்கலையைப் படைக்லானான். அதன்மூலம் கிடைக்கப்பெறும் உணர்வால் மகிழ்வையும் ஆன்மீக நிறைவையும் அடைந்தான்.

பொதுக்கலையாகத் தோற்றம் கொண்ட கலை காலப்போக்கில் நுண்கலையாகவும் பயின்று வருதல் கூடும். தண்ணீர் முகந்துகுடிக்கக் குவளை

பயன்படுகின்றது இது பொதுக்கலை. அக்குவளைகழுத்துப்பகுதி, கைப்பிடி, வாய்ப்பகுதி வேலைப்பாடமைந்த கலைநயம் வாய்ந்ததாகக் காட்சி தருமாயின் அதுவே நுண்கலைத் தன்மையையும் பெற்றுவிடுகின்றது.

தமிழகத்தைப் பொறுத்த அளவில் இக்கலை சிற்பக்கலைவடிவிலேயேயும் வளர்ச்சி பெற்று வந்துள்ளது. தெய்வம், மனிதர், விலங்கு, பறவை முதலிய வடிவங்களைக் கற்பனை உருவங்களாக அமைத்து வழிபாட்டுப் பொருள்களாகப் போற்றி வந்தனர். தமிழகத்தில் பெரும்பாலான இடங்களில் சிறுதெய்வ வழிபாடு நடந்து வந்து கொண்டிருப்பதனால் இக்கலை மேலும் வளர்ச்சிதேர்ச்சியும் பெறுவதாயிற்று. "பல வண்ணங்களிம் வடிவங்களிலும் தயாரிக்கப்படும் பாண்டங்கள் கண்ணையும் கருத்தையும் கவருவதுடன் அன்றாட வாழ்வின் அவசியத் தேவைகளையும் நிறைவுசெய்கிறது. நாட்டுப்புறக் கலைகள் (கைவினை) பாரம்பரியத்தின் படிவங்களாகும். குடும்பச் சொத்துக்களாக வாழையடிவாழையென வந்த வம்சா விருத்திகளாகவும் விளங்குகின்றன".

மட்பாண்டக்கலை என்பதற்கேற்றாற் போல்,வாழையடிவாழையாய் பல புதிய நிலைகளில் வடிவமைப்பு, வர்ணம் தீட்டுதல் கலைநயம் முதலிய நுண்கலைத் திறமைகளுடன் வளர்ச்சி பெற்று வந்து கொண்டுள்ளது.

## மட்பாண்டக்கலையும் பிற கலைகளும்

மட்பாண்டக் கிராமியக் கைவினைக் கலைக்குப் பெருமைசேர்ப்பதாய் இருப்பதோடு பிற கலைகளோடும் பொருத்திப் பார்க்கும் வகையில் பயனுடையதாய் அமைவதைக் காணலாம். அறிவியலின் முன்னோடியாகவும் இது திகழ்கிறது. "சக்கரத்தையும் துடுப்பையும் கண்டுபிடித்தவர்கள் தாம் தொழில், அறிவியல் ஆகியவற்றின் வரலாற்றின் முன்னோடிகளாவார்கள்" என்பர் அறி ஞர். அவ்வகையில் இக்கலை இசை, கல்வி, ஓவியம், சிற்ம், மருத்துவம் எனப் பல கலைகளுக்கும் பயன்பட்டு வந்திருக்கின்றது.

## அறிவியல்

சக்கரத்தைக் கண்டுபிடித்ததன் மூலம் இக்கலை அறிவியலுக்கு முன்னோடியாகவும். மனித இனம், நாகரிகம் ஆகியவற்றை அறிந்து கொள்ளப் பேருதவியாக இக்கலை சான்றாதாரமாதப் பயன்படுகிறது.

## கல்விக்கலை

கல்விக்கு முன்னோடியாக இருந்தது மட்பாண்டக்கலையே எனலாம். "பாபிலோன் மற்றும் ஆரியர்கள் முதலானோர் மட்பாண்டங்களில் எழுத்து முறையைப் பயன்படுத்தியதாகத் தெரிய வருகிறது. அம்மக்கள் பெரும்பாலும் ஈரமான மட்பாண்டங்களில் எழுதி வைத்தனர்". களிமண்ணைப் பிசைந்து சிறுசிறு பலகைகளைப் போல் அமைத்து அப்பலகையின் ஈரம் உலர்ந்து போவதற்கு முன்னமே ஆணி போன்ற கருவியினால் எழுதி உலர வைத்துப் புத்தகமாக உபயோகித்திருக்கின்றனர் என்ற செய்திகளின் மூலம் களிமண் சுவடியாக

இக்கலை கல்விக்கலைக்குப் பயன்பட்டிருக்கிறது என்பதை அறிய முடிகிறது.

### இசைக்கலை

இசைக்கருவிகளும் மண்ணினால் செய்யப்பட்டிருக்கின்றன என்பதை அறிய முடிகிறது. புல்லாங்குழல், நாதகவரம், மிருதங்கம் (கடம்), தாளப்பானை, மண்முழவு, உடுக்கை போன்ற கருவிகள் மண்ணால் செய்யப்பட்டவை.

"கஞ்சத்தால் செய்வது குமுழவம்
கருங்காலியால் செய்வது இடரிகை
செங்காலியால் செய்வது சல்லி
வேம்பாற் செய்வது மத்தளம்

போன்று சல்லி, இடக்கை ஒழித்த மற்ற கருவிகளெல்லாம் இவை ஒன்றும் பெறாத காலத்து மண்ணாற் செய்வது உத்தமம்" என்று ஆளவந்தார் தம் நூலில் ஆய்ந்து கூறியுள்ளார். கொசவன்பட்டி என்னும் ஊரில் இன்றும் மாரியம்மன் கோயிலில் 'மண்முழவு' பயன்பட்டு வருவதைக் காணலாம்.

### ஓவியக்கலை

வர்ணங்கள் தீட்டுவதற்கும் மண் ஒரு கலவைப் பொருளாகப் பயன்பட்டிருக்கின்றது. இன்றளவிலும் நாட்டுப்புறங்களில் உள்ள குயவர்கள், சாமி சிலைகள், குதிரைகள் போன்ற சிலைகளுக்கு மண்கொண்டு வர்ணம் தீட்டுவதையும் வேலைப்பாட்டிற்காகக் கோலமிடுவதையும் காண முடிகிறது. கோயில்களின் மதிற்சுவர்களிலும், வீடுகளிலும் மண் ஒரு வர்ணக் கலவையாகப் பயன்படுத்தப் படுகிறதை அறியலாம்.

### சிற்பக்கலை

சிற்பக்கலை வளர்ச்சி பெறுவதற்கு முற்பட்ட தொடக்க காலங்களில் மண்ணைக் கொண்டுதான் சிற்பம் செய்திருக்கக்கூடும். இரும்பைக் கண்டுபிடிப்பதற்கு முன்னரே மரத்தாலும், கல்லாலும் சிலை செய்திருக்கக்கூடும். இன்றளவிலும் மண்ணைக் கொண்டுதான் குயவர்கள் சிலையைச் செய்கின்றனர். மாறாக ஒன்று சிமெண்டு உதவிகொண்டு சிலை செய்யத் தலைப்பட்டு அதில் வளர்ச்சி பெற்றிருப்பினும் சிலை உருவாக்கத்தின் முன்னோடியாக இருப்பவை மட்சிலைகளே.

### மருத்துவக்கலை

மண்ணிற்குச் சில மருத்துவக் குணங்கள் உண்டு. "மண்பாண்டச் சமையல் ருசியான உணவாக இருப்பதுடன் குடற்புண் போன்ற நோய்கள் வராமல் தடுத்து உடலைக் குளிர்ச்சியாக இருக்கச் செய்கிறது. "சித்த மருத்துவத்தில் மண் மருத்துவப் பொருளாகப் பயன்படுகிறதை அறிய முடிகிறது. "தலைவலி, கண்நோய், உடல் சூடு, கை கால் வீக்கம், முடி உதிர்தல், பொடுகு, தேமல், சிரங்கு, படை போன்ற நோய்களை மண் சிகிச்சை அளிப்பதன் மூலம் நல்ல பலனை

அடையலாம்" என்பர். எனவே மண் மருத்துவக் கலைக்கும் பயனுடையதாய் உள்ளது.

## கட்டிடக்கலை

செங்கல் என்றாலே அது மண்ணைத்தான் குறிக்கும். கோவில் கோபுரங்களையும், மாட மாளிகைகளையும் செங்கற்களாற்றான் எழுப்பினர். "சிந்து சமவெளியில் அகழ்வாராய்ச்சி செய்த வரலாற்றாளர்கள் அதன் காலத்தை கி.மு. 3200–க்கும் கி.மு. 2500–க்கும் இடைப்பட்டது என்று கூறக் காண்கின்றோம். " . சிந்து சமவெளியில் கட்ட செங்கற்களான வீடுகளையும், கட்டட அமைப்புகளையும் அறியப் பெறுவதனின்று அதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே இது பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும். மண் கட்டிடக் கலைக்கும் பயன்படுமாற்றை இதனால் அறியப்பெறும்.

மண்பாண்டக் கலை மனிதக் கரங்கொண்டு சக்கரத்தின் உதவியோடு படைக்கப்படும் கைவினைக்கலை என்பதை அறிவோம். இக்கைவினைக்கலையால் உருவாக்கப்படும் மட்பாண்டங்கள் மக்கள் மத்தியில் போதிய வரவேற்பின்மையால் நலிவுற்றுப் போகும் போக்கையும் உணர முடிகிறது. ஆயினும் அறிவியல் கண்டுபிடிப்புகளினாலும், மக்கள் விரும்பும்படியாகவும் புதிய எந்திரத்தயாரிப்பு, புதிய கலவைகள், புதிய வர்ணங்கள் போன்றவை மூலம் புதிய படைப்புகளைப் படைக்குமளவிற்கு இக்கலை ஓரளவு வளர்ச்சி பெற்றுள்ளது.

மேற்கூறப்பட்டவை மூலம் மட்பாண்டக்கலையின் தோற்றம், தொடக்க காலத்தில் தேவை அடிப்படையில் பொதுக்கலையாகவும், பின்னர் நுண்கலையாகவும் வளர்ச்சி பெற்று வந்துள்ளதை அறிய முடிகிறது. இதன் தோற்ற காலம் கி.மு.3500 க்கும் பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்டது. சக்கரம் கண்டுபிடிக்கப்படுவதற்கு முன்பே சூளை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது என்பதும் உலகளாவிய நிலையில் இக்கலை சில பொதுமைகளை கொண்டிலங்குகின்றது என்பதும் புலனாகிறது.

# 43. பெரியபுராணத்தில் எதிர் மரபு

*முனைவர். இரா. காசிராசன்*

தமிழ் பேராசிரியர், தொலைநிலைக் கல்வி இயக்ககம்

மதுரை காமராசர் பலகலைக்கழகம்.

தமிழ்க் காப்பியங்கள் சமய, சமூக, அரசியல், வரலாற்றுப்பின்னனியோடு ப்ராணீயப் பின்னணியும் கொண்டு எழுந்துள்ளன.வேத, ஆரிய மரபின் தாக்கம், சமண பௌத்த சாங்கிய சமயங்களின் ஊடாடல், இவற்றில் மிகுதியும் செல்வாக்குப் பெற்றுள்ளன. சமயம் இன்றேல் காப்பியம் இல்லை எனலாம். சமய ரீதியான எதிர்ப்பியக்கம் ஆங்காங்கே எழுந்து, தத்தம் சமயமேபின்பற்றத் தக்கன என மக்களை நம்பச் செய்யும் முயற்சி இவற்றில் மேற்கொள்ளப்பட்டன. இச்சமய எதிர்ப்பியக்கம் வேத ஆரியப் பண்டபாட்டு எதிர்ப்பாகப் பழைய சமண, பௌத்த காப்பியங்களில் இழையோடுதலைக் காணலாம். இவ் ஆரியஎதிர்ப்புச் சிந்தனை சிலம்பிலேயே தொடங்கி விடுகிறது. தொடர்ந்து சமண, பௌத்த காவியங்கள் இதனைத் தீவிரமாக எதிர்த்தாலும் வேத ஆரிய பார்ப்பணீய ஆதிக்கமும் செல்வாக்கும் நாளுக்கு நாள் வளர்ந்து, சோழர் காலத்தில் அதன் உச்சத்தை எட்டியது. ஆரியம், சமயத்தின் பேரால், மக்கள் மத்தியில் அதீத நம்பிக்கையை ஊட்டியதோடு, கடவுள் பேரைச் செல்லியே அரசியலிலும் சமூகத்திலும் தங்கள் மேலான ஆளுன்மயைச்செலுத்தினர். பல்லவர் காலந் தொடங்கி, ஆட்சியாளர்கள் இவர்தம் கைப்பாவை ஆயினர். சத்திரியர் ஆட்சியாளராக அரசு ஒச்சினும், உண்மையில் அறிவு ரீதியாக ஆரியர்களே ஆட்சி நடத்தினர். கடவுள், வேதம், இதிகாசம், புராணம் பற்றிய கருத்தாக்கம் வாழ்வின் அனைத்து நிலைகளிலும் ஊடுருவியது. கோயில்கள் கட்டிக் குவிக்கப்பட்ன. ஆழ்வார்களும் நாயன்மார்களும் பிராமணீயப் பெருமரபில் தங்களை ஐக்கியப்படுத்திக் கொண்டு பக்தி நெறியை நாடெங்கும் பரப்பினர். இதன்விளைவாகப் பல புராணப்புனைவுகள் உருவாயின. சமயம், கடவுள் பற்றிய நம்பிக்கையைப் பலப்படுத்த, இப்பக்த கோடிகள் பற்றிய நம்ப முடியாத கதைகள் எழுந்தன. இவர்கள் தம் 'சித்து வேலை மூலம் பல அற்புதங்களை நிகழ்த்தி மக்களை நம்பச் செய்தனர்;அறிவு பூர்வமான சிந்தனையைப் புறந்தள்ளி, உணர்வு பூர்வமானநம்பிக்கையை இவர் தம் கதைகள் பலப்படுத்தின. இவ்வகையில் எழுந்த ஒரு பழமரபுக் கதைத் தொகுதியே பெரிய புராணம்.

ஏறத்தாழ 72 அடியார்கள் (தனி அடியார் –63; தொகை அடியார் -9)பற்றிய திருத்தொண்டர் பற்றிய புனை கதை பெரியபுராணம்; இவர்கள், சேர நாடு, சோழ நாடு, பாண்டியநாடு, நடுநாடு, மலை நாடு, தொண்டை நாடு, வட நாடு எனப் பல நாட்டைச் சேர்ந்தவராயினும், பாதிக்கு மேல் (37 பேர்) சோழநாட்டவர். இரு அடியார் மட்டுமே உள்ளவை சேரநாடு, மலைநாடு, வடநாடு, பாண்டி நாட்டில் ஐவர்; தொண்டை நாட்டில் எண்மர்; நடுநாட்டில் எழுவர். இந்த எண்ணிக்கைசோழ

நாட்டைச் சுற்றியே அமைவது குறிப்பிடத்தக்கது. இவர்களில் அரசர்–12; அந்தணர் –12; வேளாளர் – 13; வணிகர்–6; ஆதிசைவர்–4; ஏனைக் குயவர், வேடர், ஆயர், வண்ணார், மீனவர், நெசவாளர், பாணர், பறையர், சான்றார், மாமாத்திரர் ஆகிய சாதிகளில் முறையே ஒவ்வொருவர். சாதி அறியப்படாத அடியார் அறுவர். இதனால் இவ்விலக்கியத்திற்கும் தேசிய தன்மை வந்துவிட்டதாகக் கருதுவர். என்றாலும் ஆரிய மயமாக்குதலே இவற்றில் இழையோடுவதைக் காணலாம். இடையிடையே இதற்கு மாறுபட்ட சிந்தனை இருப்பதாக மாயாசாலம் காட்டினும். ஒட்டு மொத்தமான இதன் சிந்தனைப் போக்கு ஆரியமய மாக்குதலேஇதற்கான எதிர்ப்புக்குரல் ஆங்காங்கே மங்கிய நிலையில் ஒலிப்பதைக் காணலாம். பல நாயன்மார்களின் கதை இதனை இலைமறைகாயாக உணர்த்துகின்றன.

இந்நிலையில் இங்கு பல கதைகள் அறிவியல் ஆய்விற்கு உட்படுத்தப்படுகின்றன. சமூக முரண்பாட்டுக் கோட்பாடு (Conflict theory)மாற்று மரபு அல்லது எதிர் மரபு பற்றிய சிந்தனை (Dissent, Alternative Tradition) செயல்பாட்டியல் கோட்பாடு (Functional Theory), பின்னமைப்பியல் போன்ற எதிர்மரபுச் சிந்தனையை உள்வாங்கி இக்கதைகளை ஆராய்ந்தால் இவற்றின் உள்ளார்ந்த அர்த்தம் வெளிப்படலாம். இவ்வகையில் புராண நாயகராக சுந்தரர் தம் சமூக வாழ்வியல் தொடர்பான கதைகள் நமக்குச் சில தகவல்களைத் தருகின்றன.

அருமறை அந்தணர் குலத்தோன்றல் சுந்தரர் நரசிங்க முனையரையர் என்ற அரச குலத்தவரால் மகன்மை கொள்ளப் பெறுகிறார். அவர்தம் வேதியர் முறையிலான திருமணம் – மறைவழிப்பட்ட அந்தணர் குல மகளைத் திருமணம் செய்தல் – புத்தூர் சடங்கவி மகள் – தடைப்படுகிறது. அதற்கான காரணம் அவர் அடிமை என்பதே. ஆயின் அந்தணர் அடிமையாதல் இல்லை என்றமரபும் சுட்டப் பெறுகிறது[1] அந்தணர்தம் வழக்கைத் தீர்க்க அந்தணர் அடங்கிய நீதிக்குழுவே இருந்திருக்கிறது. தம் குலத்திற்கு ஒத்த குலமடந்தையை மணக்காது, தாசிகுல நங்கை பரவையையும், வேளார்குல மடந்தை சங்கிலியாரையும் மணம்செய்கிறார் சுந்தரர். இதனால் ஏயர்கோன் சுந்தரரை வெறுக்கிறார்.

இத்தகவல்கள் அடிமைமுறை சோழர்காலத்தில் இருந்தது பெறப்படுவதோடு, அந்தணர் பிறிதொரு அந்தணர்களே அன்றி வேறு ஒருவருக்கோ 'அடிமையாருக்கும் வழக்கம் இல்லை என்பது தெளிபடுத்தப் படுகிறது. அதோடு அந்தணர் தம் வழக்கை அந்தணர் அவையிலேதான் விசாரணை செய்தல் வேண்டும் என்பது, திருநீலகண்டர் புராணத்தும் (திருநீல: 32) பெறப்படுகிறது, இது சமூகதத்தில் அவர்களுக்கிருந்த மேல்நிலை ஆக்கத்திற்குத் தக்க சான்றாகும். அதோடு அவர்தம் ஆதிக்கஉணர்வினையும் இச்செய்தி நமக்கு உணர்த்துகிறது.

சுந்தரர், திருவாரூர் கோவிலுக்குள் பரவை கண்டு, கற்பகத்தின் பூங்கொம்போ காமன் தன் பெருவாழ்வோ[2] (1.5:141) என்று அதிசயிப்பதும், பரவை ஆரூரனைக் கண்டு 'முன்னே வந்தெதிர்தோன்றும் முருகனோ பெரு கொளியால்

தன்னேரில் மாரனோ' (1:5:144) என மனம் திரிந்து நோக்குவதும் குறிப்பிடத்தக்கது. இதே போன்று திருவொற்றியூர்க் கோயில் சங்கிலியாரைக் கண்டு காமுற்று, 'என் உள்ளத் தொடை அவிழ்த்த திங்கள் வதனச்சங்கிலியைத் தந்தென் வருத்தம் தீருக' என வேண்டுகிறார் ஆரூரர். இவ்விரு பெண்களும் கோவிலுக்காகத் தங்களை அர்ப்பணம் செய்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. இராசராசன் காலத்தில் 400 தேவதாசிகள் தஞ்சைப் பெருவுடையார் கோவில் பணிக்காக அர்ப்பனம் செய்யப்பட்டமை இங்கு ஒப்பு நோக்கத் தக்கது. காலப்போக்கில் கோயில் குருக்களும் உயர்சாதிப்பிராமணர்களும் இவர்களுடன் உறவு கொண்டதன் விளைவாக புதிய ஒரு சாதிய அமைப்பு உருவானதுபற்றி வரலாறு கூறும். கேரள வரலாற்றில் 19–ஆம் நூற்றாண்டு வரை கோயிலுக்குள் 6 – முதல் 60 வரை வயது உள்ள மகளிர் இடுப்புக்கு மேல் துணி போடக்கூடாது. என்றும், அவர்களை நம்பூதிரிப் பிராமணர்கள் என்ன வேண்டுமானாலும் செய்ய உரிமை பெற்றிருந்தனர் என்பதும், தட்டிக் கேட்பவர் தண்டனைக்கு உள்ளாவார்கள் என்ற வரலாற்று உண்மையும் இங்குக் கருதத்தக்கது. இவற்றை எல்லாம் மனதிற் கொண்டு, சுந்தரர் தம் காதல் லீலைகளை நோக்குகின்ற போது, இதற்கான மூலாதாரக் கூறு அக்கால சமூகச் சூழல் என்பது தெற்றெனப் புலப்படும். சுந்தரர் இவ்வாறு செய்தாரா இல்லையா என்பதல்ல இங்குக் கேள்வி. இக்கதை, பிராமணர்களுக்கு இத்தகைய உரிமை இருந்ததைக் காட்டுகிறது என்பதே இங்குக் கருதத் தக்கது.

சுந்தரர், சங்கிலியை மணக்க, ஊடல் கொண்ட பரவை ஊடல் தீர்க்க இறைவனே தூதராக நடந்தார் என்றும்; அதனால் கலிக்காமர் கடுங்கோபம் கொண்டார் என்பதும், இப்பகைமை தீர்க்க இறைவன் கலிக்காமர்க்கு "சூலைநோய்" கொடுத்தார் என்றும், நோய் தீர்க்கச் சுந்தரர் வர, காமர் உயிர் நீக்க, அறிந்த சுந்தரர் தன் உயிர் போக்க முற்படப் பின் இறைவன் அருள்பெற்று இருவரும் உய்தி பெற்றனர் என்றும் சொல்லப்படும் கதைசுந்தரர் காதலுக்கு ஓர் எதிர்ப்பு இருந்த தகவலை நமக்குத்தெரிவிக்கிறதன்றோ? அதற்குக் 'கலிக்காமர்' பெற்ற தண்டனையே சூலை நோய்.

ஆக இறைவன் – கோவில் என்று சொல்லிக் கொண்டுகோவில்களில் நடத்திய காமக் களியாட்டப் பின்னணியில் எழுந்த ஒரு கதையே சுந்தர் – பரவை – சங்கிலியார் கதை. இதற்கு அற்றை நாளிலேயே எதிர்ப்புக் குரல் இருந்தது. என்பதையே கலிக்காமர் கதை நமக்கு உணர்த்துகிறது.

சுந்தரர் வரலாற்றில் ஆரிய ஆதிக்கமும் அதற்கான எதிர்ப்பும்இருந்தது என்பதற்குப் பிறிதொரு சான்றாக நிற்பது விறல்மிண்ட நாயனார் புராணம், திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்துக் குழுமியுள்ள சிவனடியார்களை வணங்காது சென்ற சுந்தரரைக் கண்ட வேளாள நாயனார் விறல் மிண்டர், 'சிவனடியார் தம்மைத் தொழுது வந்தணையாது, ஒருவாறொதுங்கும் வன்றொண்டன் புறகு' என்று ஏசப் பின் தேவாசிரிரியர்த் தொழுது திருத்தொண்டத் தொகை பாடினார் என்பர் சேக்கிழார். இதற்கும் சமூக

ஏற்றத்தாழ்வே காரணமாகலாம். இங்குக் குழுமியுள்ள சிவனடியார் அந்தணரல்லாத சிவனடியாராக இருந்திருக்கலாம் என ஊகிக்கவும் இடமுண்டு.

அடுத்து நாம் காண வேண்டியது அப்பர்–சம்பந்தர் பற்றிய கதைகளில் வரும் சில உண்மைகள் மருணீக்கியார் – தருமசேனர் – நாவுக்கரசர் – என்ற பெயர்களைப் பெற்ற அப்பர் வேளாளர்.சம்பந்தர் பிராமணர். தரும சேனர் 'சூலை நோய்' என்ற தண்டனை பெற்றுச் சைவரானவர். சமயக் குரவர்களில் ஏறத்தாழ ஒத்த புகழுடையவர் சம்பந்தரும் அப்பரும் என்றாலும் சம்பந்தருக்கு இருந்த செல்வாக்கு அப்பருக்கு இல்லை என்பதுவெளிப்படை. இதற்கு அடிப்படை சாதி ஏற்றத் தாழ்வு என்பதில் ஐயமில்லை.

சமகாலத்தவராகிய இருவருக்கும் கோயில் தோறும் கிடைத்தவரவேற்பில் கூட வேறுபாடு காணப்படுகிறது. சான்றாக ஒன்றைக் குறிப்பிடலாம். தில்லை சென்ற சம்பந்தரையும் (6:26:154 – 55) சுந்தரரையும் (1:5:98) வரவேற்றது போலத் தில்லைவாழ் அந்தணர்க்ள் நாவுக்கரசரை வரவேற்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. சம்பந்தர் போகுமிடமெல்லாம் அந்தணர் எதிர்கொண்டு வரவேற்றது போல. (6:28:245 etc.,) அப்பரை வரவேற்றதாகத் தெரியவில்லை.

சிறப்புடை அடியார் இருவரில் அப்பர் வயதால் முதியவர். தம் முதுமையிலும் சம்பந்தரைக் காணவேண்டும் என்ற ஒரே ஆவலுடன் பல பயணங்களை மேற்கொண்டுள்ளார். (5:21:181:234:393) ஆனால் சம்பந்தர் அப்பரைக் காணத் தன் யாத்திரையை மேற்கொண்டதாகத் தெரியவில்லை.

இருவரும் ஒருவரை ஒருவர் வணங்கும் முறையிலும் கூட ஏற்றத்தாழ்வுகள் காணப்படுகின்றன. அப்பர், பிள்ளையின் அடிபணிதல் (182, 183, 234) பல இடங்களில் இடம்பெற, சம்பந்தர் வெறுமனே வணங்குகிறார்[3] 'அப்பரே' என விளிக்க அவர் 'அடியேன்' எனத் தாழ்ந்தோர கூற்றில் விடை பகர்தலும் இடம்பெறும். அதோடு சம்பந்தர் ஏறிவந்த சிவிகையையும் சுமக்கிறார்[4]. இதற்கு இருவரிடையே காணப்படும் சாதிவேறுபாடே காரணம் எனக் கருதலாம்.

இனி, திருமறைக்காட்டுக் கோயில் கதவு திறக்கப்பாடியதும், அடைக்கப் பாடியதும் குறித்த செய்தி இங்கு நோக்கத்தக்கது (5:21:264 – 272) அப்பர் பல பாடல்கள் பாடத் திறக்காத கதவு பின் அவர் வருந்திப் பாடத் திறக்கிறது. சம்பந்தர் ஒரு பாடல் பாட மூடிக் கொள்கிறது. இங்கு இறைவன் அப்பர் பாடலைக் கேட்க விரும்பிக் கதவம் திறக்கக் கால தாமதம் செய்தார் என்பர். இந்த இடத்தில், கோவில் கதவடைப்பிற்கான சில சமூகக் காரணங்கள் இருந்ததை நினைவு கூரல் நல்லது. சில தாழ்ந்த சாதியின் நுழையும் வாயில் அடைக்கப்பட்டதும், அது திறக்கப் போராடிய போராட்டம் பற்றியும் வரலாற்றறிஞர் குறிப்பிடுவர். இவ்வகையில், பிராமணர் அல்லாத தாழ்ந்த சாதியினர் நடத்திய கோயில் நுழைவுரிமைப் போராட்டத்தின் பின்னணியில் இக்கதை எழுந்திருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது.

திருநீலகண்ட யாழ்ப் பாணரோடு சீர்காழி, தில்லை சென்ற சம்பந்தர், பாணரைக் கோயில் வாசலில் நிற்க வைத்து விட்டுத் தான் மட்டுமே கோயிலுக்குள்

சென்று வழிபடுகிறார். (6:28:134, 175, 176)[5] இங்குத் தாழ்ந்த சாதி நாயனார் கூட கோயிலுக்குள் நுழைந்து இறைவனை வழிபடும் உரிமை இழந்திருந்தனர் என்ற உண்மை பெறப்படுகிறது. இது நந்தன் கதையில் மேலும் வலிவு பெறுகின்றது.

திருநாளைப் போவார் 'கோயில் திருவாயிற் புறநின்று', 'ஆடுதலும்' 'பாடுதலும்' (18:15) செய்து அவ்வாயில் மகிழ்ச்சி கொள்கிறார். திருப்புன்கூர்க் கோயில் திருவாயில் முன் நின்று இறையருளால் நந்தி விலக இறைவனைக் கும்பிடுகிறார். பின் கோயில் புறம் வலங்கொண்டு வழிபாடு செய்கிறார் (18:17–19) அவர் தில்லைப் பெருமானை வணங்கப் பேரவாக் கொண்டபோது இறைவன் கனவில் வந்து 'இப்பிறவி போய் நீங்க எரியினிடை நீ மூழ்கி, முப்புரிநூல் மார்பருடன் முன்னணைவாய் (18:28) என உரைக்கிறார். அவ்வண்ணமே தில்லை வாழ் அந்தணர் கனவில் உரைப்பு, அவர் 'தென் திசையில் மதிற்புறத்து நெருப்பமைத்து'க் கொடுக்க, அதில் புகுந்த அடியார், இம்மாயப் பொய்தகையும் உருவொழித்துப் புண்ணியமா முனிவடிவாய், மெய் திகழ்வெண்ணூல் விளங்க வேணிமுடி கொண்டெழுந்தார்; 'செந்தீமேல் எழும் பொழுது செம்மலர் மேல் வந்தெழுந்த அந்தணன் போல் தோன்றினார்' – (18: 32 – 33) எனக் குறிப்பிடுவார் சேக்கிழார்.

இங்குக் கோவிலுக்குள் புக முயன்ற நந்தனைத் தீயிட்டுப் பொசுக்கிய தில்லைவாழ் அந்தணர், அதனை மறைக்க 'இறையருள்' என்று நம்பச்செய்தனர். நந்தன் கதை அக்காலக் கோயில் நுழையுரிமைப் போராட்டத்தின் எதிரொலி என்பதில் ஐயம் இல்லை.

கூற்றுவ நாயனார் பல வெற்றிகளைப் பெற்றுச் சிறப்புடை மன்னராகத் திகழ்ந்தாலும், தில்லை வாழ் அந்தணர்கள் அவருக்கு முடிசூட்ட மறுத்து விடுகின்றனர் [6]. இது அந்தணர் பெற்றிருந்த செல்வாக்கை உணர்த்துவதோடு, அரசியலில் அவர்கள் பெற்றிருந்த இடத்தையும் காட்டும்.

கண்ணப்பர்கரை, வேதாகம – பிராமணிய வழிபாட்டின் எதிர்ப்புக் குரலாக அமைவதைக் காணலாம். இங்குச் சிவகோசரியார் இறைவனைப் பார்ப்பனிய முறையில் வழிபடுகிறார். வேடர் கண்ணப்பர். அதற்கு எதிராக நாட்டுப்புற மரபில், வழிபடுபவர். கண்ணப்பர் 'புச்சிலையோடு பூவும் நீரும் வார்த்து அர்ச்சித்தது யார் எனக்கேட்க நாணன் 'ஓர் பார்பான் என்றிது செய்தான். இன்றும் அவன் செய்ததாகும் (10:108 – 109) என்கிறான். திண்ணன், அவற்றைத் தன் செருப்புக் காலால் நீக்கி, நீரால் அஞ்சனமாட்டி எச்சில் இறைச்சியைப் படைக்கிறார். அது கண்ட சிவ கோசிரியார் 'பழுது புகுந்தது பவித்திரம் கெட்டது' எனப் பதைத்து தூய்மை செய்து – தூநீராடி தூயக பூசனை செய்கிறார்.

இவ்வழிபாட்டு முரண் பார்ப்பனர் – பார்ப்பனர் அல்லாத தாழ்ந்த இனத்தவர் தம் போராட்ட உணர்வின் பிரதிபலிப்பாகலாம் அல்லது பார்ப்பன வழிபாட்டிற்கு எதிரான 'சிவநிந்தனை', காரணமாகத் திண்ணன் கண்ணை இழந்தாரோ என்ற சிந்தனையும் எழுகிறது. எவ்வாறாயினும் இவ்வழிபாட்டு முரண் அந்தணர் ஆதிக்க எதிர்ப்புணர்ச்சியே என்பதில் ஐயமில்லை.

பார்ப்பனரான நமிநந்தி, திருமணலிக் கோயில் விழாவில் பல சாதியாரோடு கலந்து சென்றதால் தம் புனிதம் கெட்டுவிட்டதாக எண்ணித் தூய்மை செய்தே அகம் புகுந்து வேதநாதர் பூசனையைத் தொடங்கவேண்டும் (27:25) என்றிருப்ப, இறைவன் 'ஆரூரில் பிறந்தார் எல்லாம் நம் கணங்கள்' (27) என்று கனவில் கூற உடன் சென்று வழிபடுகிறார். இங்குச் சாதிவேறுபாடும் அதனால் ஏற்படும் 'தீட்டு பற்றிய சிந்தனையும் பெறப்படுகிறது. இதற்கு எதிர்ப்புத் தெரிப்பதாக' இறைவாக்கு அமைகிறது.

திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தில் காஞ்சி நகர வருணனையில் அந்தணர்–அரசர்–வணிகர்–வேளாளர் தெருக்களை முறைப்படுத்துகிறார் சேக்கிழார் (19:99–102) இங்கு அந்தணர் பெற்றிருந்த முதன்மைச் சிறப்பு விளக்கும். அதோடு உயர்ந்த இழிந்த குலம் பற்றிய கருத்தும் இடம் பெறுகின்றது. "ஓங்கிய நாற்குலத்தொவ்வா புணர்வில் தம்மில் உயர்ந்தனவும், இழிந்தனவும் ஆன சாதி தாங்குழுமிப் பிறந்த குல பேதம் எல்லாம், தம் தகைமைக்கேற்ற தனி இடங்கள் மேவி" – என்பது சேக்கிழர் வாக்கு. இதனால் காஞ்சிநகர் சாதி ஏற்றத் தாழ்வுகள் நிறைந்தது என்பது பெறப்படுகிறது. இங்கு தான், தமிழக நகரங்களிலேயே கோவில்கள் மிக அதிகம் என்பது குறிப்பிடத்தக்கது.

## குறிப்புகள்

1. ஆசில் அந்தணர் வேறோர் அந்தணர்க்கு அடிமையாதல் இல்லை (பெரி:1:5:40) மறையவர் அடிமையாதல் இந்தமாநிலத்தில் இல்லை (பெரி:1:5:52)
2. திருநீல கண்டர் புராணமும் 'தில்லைவாழ் அந்தணர்பேரவையிலே மறைவராக வந்த இறைவன் தன் வழக்குரைக்கிறார் (திருநீல:3,2)
3. 'பழுதில் பெருங் காதலுடன் அடிபணிய' – அப்பர்
   பிள்ளையார் கழல் வணங்க 'எதிர்வணங்கி' – சம்பந்தர்
4. "உம் அடியேன் உம் அடிகள் தாங்கி வரும், பெருவாழ்வு வந்தெய்தப் பெற்றிங்குற்றேன் (5:21, 396, 394)
5. "கோயிலின்றி புறமுன்றிற் கொடுபுக்குக் கும்பிடுவித்து"
6. 'செம்பியர்தம் தொல்லை நீடுங் குலமுதலோர்க் கன்றிச் சூட்டோம் முடி' ' (39:4)

# 44. தமிழ்ப் புனைகதைகளில் இடிபஸ் தொன்மமும் எலெக்ட்ரா தொன்மமும்

சு. சந்திரா
தமிழ் விரிவுரையாளர்
அரசு மகளிர் கலைக் கல்லூரி, புதுக்கோட்டை

## முன்னுரை

இலக்கியத் திறனாய்வுத் துறைகளில் தொன்மவியல் திறனாய்வுமார்ந்து வரும் ஒரு நெறியாகும். அந்நெறி வழி எலக்ட்ரா தொன்மங்கள் தமிழ்ப் புனைகதைகளில் பயிலுமாற்றைக் காண்பது ஆய்வுச் செல்நெறியாகும்.

## தொன்மவியல் திறனாய்வில் உளவியல்

தொன்மவியல் திறனாய்வு பிறதுறைகளுடன் இணைத்துப் பேசப்படுகின்றது. ஏனெனில் இத்திறனாய்வு முறையின் மையப்பொருளான தொன்மம் என்பது தனித்த ஒன்றாக இல்லை.மாறாக, அது சமுதாயத்தோடும், நாட்டுப்பாடலோடும்,மானிடவியலோடும், சமூகவியலோடும் உளவியல் நுண்முறை அறிவோடும் நுண்கலையொடும் தொடர்பு கொண்டு பலவகைப்பொருள் பொதிந்திலங்கும் செறிவுமிக்க ஒரு சொல்லாக உள்ளது.

தொன்மத்தை இலக்கியத்தின் ஒளியாகக் கூறுகின்ற வில்பர்ஸ்காட் (Wiburs.Scott) தொன்மவியல் திறனாய்வு உளவியல் முறையினைஉள்ளடக்கியது எனக் குறிப்பிடுகின்றார். (Scott. S. Wibu-, 1979 P.247) உளவியல் பற்றி ஆய்வு செய்த பிராய்டும் (Freud) அவரைத் தொடர்ந்து அத்துறைக்கு வளம் சேர்த்த யுங்கும் (C.G. Jung) சில புதிய சிந்தனைகளைத் தரும் போது தொன்மவியலையும் குறிப்பிட்டு இரு துறைகளுக்கும் இணைவுகள் காண வழியமைக்கின்றனர் (பகவதி, கு. (பதி), 1989, ப.127) என்ற கருத்தின் வழி,தொன்மவியல் திறனாய்வில் உளவியல் கோட்பாடுகள் பெறுமிடம் தெளிவாகிறது எனலாம்.

## உளச்சிக்கல் தொன்மங்கள்

உளப் பகுப்பாய்வுக் கோட்பாட்டின் தந்தை எனப்படுகின்றபிராய்டு மனித உணர்வுகளை, இச்சையுணர்வு (Id) தன்னுணர்வு (Ego) பண்பாட்டுணர்வு (Super Ego) என்ற நிலைகளில் விளக்குகின்றார். இவற்றுள் இச்சையுணர்வு தன் தேவையை நினைத்த மாத்திரத்தில் உருவாக்கிக் கொள்ளத் துடிக்கிறது. பண்பாட்டுணர்ச்சியோடு ஏற்படும் இத்தகைய முரண்பாட்டினால் உளச்சிக்கல் ஏற்படுகிறது. ஒரு குறிப்பிட்ட வயதில் (3–6 வயது) குழந்தை தாய் மற்றும்தந்தையர் மீது கொள்ளும் நாட்டம், அதன் காரணமாக ஏற்படும் போராட்டங்களைச் சந்தித்தல், அதன் விளைவான செயற்பாடு முதலியவற்றினால் ஏற்படும் சிக்கல் உளச்சிக்கலாகி விடுகின்றதுஎன்பார் பிராய்டு (Freud, 1986 P. 403) .

இவ்வுளவுச்சிக்கலை விளக்குவதற் இடிபஸ், எலெக்ட்ரா முதலிய கிரேக்கத் தொன்மங்களைக் கையாளுகின்றார்.

## இடிபஸ் தொன்மம்

பிராய்டு முதன்முதலில் இடிபஸ் உளச்சிக்கல் பற்றிய தமது கருத்தை கனவுகளைப் பற்றிய விளக்கங்கள் என்னும் தமது நூலின் முதற்பதிப்பில் அடிக்குறிப்பாக இணைத்திருக்கிறார். இடிபஸ்ரெக்ஸ (Odpus Rex) இளவரசன் ஆம்லெட் (Prince Hamlet) ஆகிய இருவருமே இடிபஸ் மனச்சிக்கல் (Odepus Complox) எனும் பண்பு நலனின் வார்ப்புகளாகத் திகழ்பவர்கள் என அவர் குறிப்பிடுகின்றார்.

கிரேக்கத் தொன்மவியலில் இடிபஸ் பற்றிய க்தை காணப்படுகிறது. இடிபஸ் என்ற் கிரேக்கப் புராணப் பாத்திரம் முதலில்ஹோமராலும் (Homer)பின்னர் ஹசியட் (Hesid) என்பவராலும் குறிப்பிடப்பட்டது. இடிபஸ் தொன்மம் வருமாறு:

லூயி இடிபாஸின் தந்தை, லூயிக்கு பெலாப்ஸ் அடைக்கலம்தந்தான். லூயி தனக்கு அடைக்கலம் தந்த பெலாப்ஸின் மகனான க்ரைசிப்ஸைக் கடத்திவிட்டுத் தெப்ஸ் நாட்டின் மன்னன் ஆனான். அதனால், “லூயி! நீ உன் மகனாலே கொல்லப்படுவாய்!” என அப்பல்லோ தெய்வத்தால் சபிக்கப்பட்டான். ஆனால், லூயி பொருட்படுத்தாமல் அயகோஸ்டா மூலம் ஒரு குழந்தையைப் பெற்றான். மகனின் காலை ஈட்டியால் குத்திக் காட்டில் விட்டுவிட்டான். குழந்தை இல்லாமலிருந்த காரிந்த் (Carinth) நாட்டு மன்னன்ான பாலிபஸ் பாதம் வீங்கி இருந்த அக்குழந்தையை காப்பாற்றி இடிபஸ் என்று பெயரிட்டு வளர்த்தான். ஒரு நாள் இடிபஸ் டெல்பிக் கடவுளால் “அவனே அவன் தந்தையைக் கொன்றுதாயை மணப்பான்” என்று எச்சரிக்கப்பட்டான். பாவிபாஸையையே தனது தந்தை என்றெண்ணிய இடிபஸ் காரிந்தை நாட்டை விட்டு வெளியேறினான். தெபஸ் நாட்டிற்குச் சென்றான். செல்லும் வழியில் அறியாது தந்தையைக் கொன்றுஅந்த நாட்டிலுள்ள ஸ்பிங்களின் புதிரை விடுத்துஅயோகாஸ்டாவைத் திருமணம் செய்து அந்த நாட்டின் மன்னன் ஆனான். இடிபஸுக்கும் அயோகாஸட்ாவுக்கும் நான்கு குழந்தைகள் பிறந்தனர். ஒழுக்கக்கேட்டின் பின்னால் உண்மை தெரிந்தவுடன் அயோகாஸ்டா தற்கொலை செய்து கொண்டாள். இடிபஸ் தன்கண்ணை தானே குத்திக் கொண்டு தன் மகன் ஆண்டிகோனுடன்நாட்டை விட் வெளியேறினான். (Michancel ariyonals, 1976, P.32)

இடிபஸ் பற்றிய இக்கதை, வரலாற்று உண்மையை அடிப்படையாகக் கொண்டது. இக்கதை அல்பேனியா, பின்லாந்து, சைப்ரஸ் போன்ற ஐரோப்பிய நாடுகளின் நாட்டுப்புறக் கதைகளில் காணப்படுகிறது. இக்கதையை அடிப்படையாகக் கொண்டு பிராய்டு ‘ஒரு குறிப்பிட்ட வயதில் (3–6)ஆண் குழந்தைகள் தன் தாயார்பால் பற்றும் தந்தையின் பால் அழுக்காறும் கொண்டவர்களாக உள்ளனர் என்பார்.இச்சிக்கலினை, இடிபஸ் தொன்மத்தோடு இணைத்து இதற்கு இடிபஸ் உளச்சிக்கல் எனப் பெயரிடுகின்றார். (Freud. 1986,P.321)

## பிராய்டிய நோக்கில் ஆம்லெட்

ஷேக்ஸ்பியரின் ஆம்லெட் நாடகத்தில் தன் தந்தையின் ஆவிக்கு வாக்கு கொடுத்தபடி சிற்றப்பனைப் பழி வாங்காமல் ஆம்லெட் வாளாவிருக்கின்றான். பல வாய்ப்புகள் ஏற்படும் போதும் கூட விட்டுவிடுகிறான். எண்ணங்களை அடைக்காப்பான் ஆம்லெட் எனக் கருதப்பட்டாலும் அந்த மனப்போக்கு நாடகம் படைக்கப்பட்ட காலத்திலிருந்து யாராலும் விளக்கப்படவில்லை. பிராய்டு தமது நூலுள் இடிபஸ் கொண்டிருந்த மனச்சிக்கல் அவனது தந்தையைக் கொன்றுவிட்டுத் தாயுடன் சேர்ந்து வாழும் வகையில் அவனைத் தூண்டிக் கொண்டிருந்தது. குழந்தைப் பருவத்தில் அவன் கொண்டிருந்த இத்தகைய விழைவு அவனது மனமறியா நிலைக்குத்தள்ளப்பட்டது. அத்தகைம விழைவினை நிறைவேற்றிய அவனது சிறப்பினைக் கொல்ல அவன் மனம் ஒருப்படவில்லை. சிற்றப்பனைத் தண்டிக்க எண்ணிய போதெல்லாம், சிற்றப்பன் செய்த இதே தவறைக் குழந்தைப் பருவத்தில் செய்வதற்கு விழைந்தமையால் தானும் ஒரு பாவியே என்னும் எண்ணம் மேலோங்கித் தடுக்கிறது என்பது பிராய்டு கூறிய விளக்கமாகும். பிராய்டு அத்தகைய விளக்கமளித்துப் பத்தாண்டுகளுக்குப் பிறகு சர். ஏர்னச்டு ஜோன்சு ஆம்லேட்டின் மர்மத்தை விளக்கும் விளக்கமாகிய இடிபசு மனச்சிக்கல் செயல் நோக்கத்தைப் பற்றிய ஆய்வு (The Odepus Comple as on Explanation of Hamlet's mystery A study in Motive) என்னும் நூலினை எழுதினார்.

அதன் பின்னர் உலகம் முழுவதும் இலக்கியப் படைப்பாக்கமுறையிலும், திறனாய்வு நெறியிலும் புதிய சீர்மைகள் தோன்றின. ஜேம்ஸ் நூாய்ஸ், ஜெர்வுட் ஆண்டர்ஸன், பிரான்ஸ் காப்பா முதலிய படைப்பாளிகளும் எட்மண்டு வில்சன், லயனல் டிரில்லிங், எஃப் எல். லூகாஸ் முதலிய திறனாய்வாளர்களும் இடிபஸ் உளச்சிக்கல் கோட்பாடின் தாக்கத்திற்கு உள்ளானார்கள். மேலை நாட்டினர் பரவலாகக் கையாண்ட இப்போக்கு ஆங்கிலக் கல்வியால்தமிழிலும் பரவியது. அவ்வகையில் தமிழ்ப் புனைகதைகளில் இடிபஸ் சிக்கல் படைப்பு, திறனாய்வு ஆகிய இருநிலைகளில் ஊடாடுவதைக் காணலாம்.

## தமிழ்ப் புனைகதைகளில் இடிபஸ்

இடிபஸ் உளச்சிக்கல் இக்காலப் படைப்பாளிகளிடத்து ஆழப்பதிந்து படைப்பாக்கங்களில் பொதிந்து கிடப்பதைப் பலரும் சுட்டுவர். உளவியற் கருத்துக்கள் பரவரலாகப் பேசப்பட்ட போது அதனை நன்கு அறிந்த நனவு நிலையிலேயே இக்காலப் படைப்பாளர்கள் தமது படைப்புகளில் பயன்படுத்துகின்றனர்.

அவ்வகையில் தி. ஜானகிராமனின் அம்மா வந்தாள் (நாவல்) ஜெயகாந்தனின் ரிஷி மூலம், (நாவல்) ஆர். சூடாமணியின் அன்னையின் முகத்துப் புன்னகை (சிறுகதை) இந்திரா பார்த்தசாரதியின் வேஷங்கள் (நாவல்) முதலிய புனைகதைகள் அமைகின்றன எனலாம். ஆனால், சி.இ. மறைமலை இப்புனைகதைகளில் இடிபஸ் சிக்கல் முழுமையாக இல்லை என்று கூறுகிறார்.

அதற்கு அரணாக, 'ஒரு படைப்பு புதிர் மிக்கதாக அமைந்து அப்புதிரை விடுவிப்பதற்கு உரிய ஒரே தீர்வாக இடிபஸ் மனச்சிக்கல் அமையுமாயின் அப்படைப்பு உளவியற் பகுப்பாய்வு அணுகுமுறையைச் செம்மையாகப் பின்பற்றியுள்ளதாகக் கொள்ளலாம்" (மறைமலை–சி. இ. 1979 ப.32) என்ற கருத்தை எடுத்துக் காட்டுகின்றார்.

ரிஷிமூலம், வேஷங்கள் முதலிய இரு புனைகதைகளிலும் ஆசிரியர்கள் இவ்வுளச்சிக்கல் கோட்பாட்டை அறிந்து கொண்டமையை வெளிப் படுத்துகின்றனர். ரிஷிமூலம் கதையின் தலைவனான ராஜாராமன் தனது தாயுடன் உறவு கொள்வதாகக் கனவு காண்கிறான். நனவில்,தன்னை வளர்த்த மாமியுடன் உறவு கொள்கிறான் இதனை இடிபஸ்சிக்கலின் தாய் மாறா நிலைப்பாடு (Mother - Fixation) தாய் உரு (Mother Image) என்ற படிநிலைகளுக்குள் விளக்க முற்படலாம்.

தி. ஜானகிராமன் தனது புனைகதையில் இந்துவை மணக்கத்தயங்கும் அப்புவின் செயலுக்கு நேரடியாக விளக்கம் கூறாமல்விடுப்பது ஆய்வு நெறிக்கு வளம் சேர்ப்பதாகும். படைப்பாளி தமது படைப்பில் ஏற்படுத்தும் இத்தகைய விடுதல்கள் படைப்பின் சிறப்பினை மேம்படுத்துகின்றன. கதை நாயகனான அப்பு தனது தாய் மீது கொண்டிருக்கும் அன்பு கலந்த மதிப்பினை உளச்சிக்கல் கோட்பாட்டின் வழி "தாய் உரு" எனலாம். அவ்வெண்ணத்தின் ஆளுகை வழி இந்துவை மறுக்கிற போது தாயின் நினைவு அவனுள் ஊடாடுவது தாயின் பதிலியாக (Mothers Substitude) இந்துவை எண்ணும் அவனது மனப்பாங்கிற்குச் சான்றாகிறது.

ஆர். சூடாமணியின் அன்னையின் முகத்துப் புன்னகை என்ற சிறுகதை இவ்வளவுச்சிக்கலுக்கு மற்றொரு சான்றாகும். காயத்திரி தனது சிறுவயதில் கணவனை இழக்கிறாள். கணவன் இறந்த இருமாதங்களில் மகன் பிறக்கின்றான். மகனைத் தன் கணவனின் சாயலில் காண்கிறாள். அவளது நனவில், மனதில் கணவனின் வடிவம், செயல் முதலியன மகன் உருவில் நிலவுகின்றன. மகன் மணி பெரியவனாகித் திருமணமாக வேண்டிய நேரத்தில் அவளது உரையாடல் மகன் மீது தாய் கொண்டுள்ள எதிர்பால் ஈர்ப்பைக் காட்டுகின்றது. தன் மகனான மணி தனக்கு மட்டும் உரியவன் என்று எண்ணுகிறாள். அவனுக்குத் திருமணமாகி மனைவி வந்து அவனது அன்பு பகிர்ந்தளிக்கப்படுவதை அவள் விரும்பவில்லை. தாய் எதிர்பாலரிடம் கொண்ட அந்த அன்பு இடிபஸ் சிக்கலின் மற்றொரு பரிமாணமாக இப்புனைகதையில் வெளிப்படுகிறது.

இடிபஸ் தொன்மத்தை மையமிடுகின்ற இவ்வுளச்சிக்கல் அண்ணன் மனைவி, ஆசிரியர் மனைவி, உடன் பிறந்த பெண்கள் எனத்தாயையொத்த பிற பெண்களிடம் ஏற்படுவதனைத் "தாய் பதிலி"(Mother's Substitude) என்று விளக்க முற்படலாம். இடிபஸ் மனச்சிக்கலின் இந்நிலை, மு. கருணாநிதியின் பனங்குலை (சிறுகதை) என்னும் புனைகதையில் பொதிந்து கிடக்கிறது. இப்புனைகதை உடன் பிறந்தவர்கள் உறவு கொள்வதாக அமைகின்றனது.

மேலும் ஜெயகாந்தனின் ஆடும் நாற்காலிகள் ஆடுகின்றன (குறுநாவல், சிவசங்கரின் ஒரு மனிதனின் கதை (புதினம்), பொன்.சவுரிராஜனின் தாய்க்குமரி (புதினம்) வாஸந்தியின் தாகம் (புதினம்) முதலிய புனை கதைகளும் இடிபஸ் உளச்சிக்கலை அகப்படுத்தியனவாக அமைகின்றன.

## எலெக்ட்ரா சிக்கலும் தொன்மக் கதையும்

மகள் X தந்தை; தந்தை X மகள் ; என்ற எதிர்பால் ஈர்ப்பினை மையமிட்டதாக எலெக்ட்ரா சிக்கல் அமைகின்றது. முதலில்எலெக்ட்ரா தொன்மம் பற்றிய கதையினைக் காண்போம்.

கிரேக்க அரசனது மகளான எலெக்ட்ரா தனது தாய் வேறொருவனை மணந்து கொள்வதால் எளிய விவசாயியிடம் வளர நேரிடுகிறது. விவசாயத்தில் அவளும் ஈடுபட வேண்டியுள்ளது. தனதுதாயின் செயலால் செல்வம், செல்வாக்கு முதலியவற்றை இழக்க நேர்ந்தது என எண்ணும் எலெக்ட்ரா தாயை வெறுக்கிறாள். தந்தையின் அருகாமையை விரும்பி ஏங்குகிறாள் என்பது எலெக்ட்ரா தொன்மமாகும்.

தந்தை மீது மகள் கொள்ளும் பாலியல் வேட்கையை அகப்படுத்தியதாகப் பிராய்டு தமது உளவியல் கோட்பாட்டிற்கு பெயரிடுகின்றனர். ஒரு பெண் குழந்தையானது தான் ஒரு ஆண் குழந்தையாகப் பிறக்காமல் பெண்ணாகப் பிறந்ததற்குத் தன் தாய் தான் காரணம் எனக் கருதுகிறது. பால் உந்துதல் உண்டாகும் உணர்ச்சிகள் அவற்றால் ஏற்படும் முரண்பாடுகள் முதலியவற்றால் தன் தாயாரின்பால் அழுக்காறும், தந்தைபால் பற்றும் உடையவளாகின்றாள். இதற்கு எலெக்ட்ரா மனச்சிக்கல் என பிராய்டு பெயரிடுகின்றார். (பெசண்ட் கீர்ப்பர்ராஜ்: 1965, ப.605)

## இந்திய புராணங்களும் எலெக்ட்ரா மனச்சிக்கலும்

இந்தியப் புராணங்களில் இவ்வுளச்சிக்கல் சரசுவதி கதையாகவும் திலோத்தமை கதையாகவும் விரிவாகிறது. சரசுவதி, திலோத்தமை கதைகள் வருமாறு: இவள் தன்னைச் சிருட்டித்துத் தன்னுடன் கூட பிரமன் வருகையில் பிரமனுக்குப் அஞ்சிப் பெண் மான் உருக்கொண்டு ஓடினாள்.பிரமன் ஆண்மான் உருக்கொண்டு தொடர்ந்து சிவமூர்த்தியால்தடையடைக் கண்டு சிவமூர்த்தியை வேண்டிப் பிரமனைக் கணவனாகப் பெற்றவள் (சிங்காரவேலு முதலியார், 1931, ப.596) என்ற குறிப்பும், பிரம்மனால் படைக்கப்பட்டு அவன் மயல் கொள்ள கிளியறுக் கொண்டு ஓடி நீங்கினாள். அவள் அழகினால் மயல் கொண்டபிரம்மன், நான்கு திக்கில் முகம் கொண்டு பார்த்ததில் நான்குமுகம் உண்டாயிற்று என்பர். (முன்னது ப.858) என்ற திலோத்தமை பற்றிய குறிப்பும் எலெக்ட்ரா சிக்கலின் மாற்றீடு எனலாம்.

## புத்திலக்கியப் படைப்பில் எலெக்ட்ரா தொன்மம்

கலைஞர். கருணாநிதியின் வாழ முடியாதவர்கள் சிறுகதை எலெக்ட்ரா சிக்கலுக்குச் சரியான சான்றாகும். திலோத்தமைதிரைப்படம் பார்த்துவிட்டு வரும்

போலிஸ்காரத் தந்தையும், பருவம் வந்தும், மணம் புரிய முடியாது வாழும் மகளுக்கும்.இடையே ஏற்படும் பாலியல் வேட்கையும் உறவும் இச்சிறுகதையில் விரிக்கப்படுகிறது. தந்தை X மகள் என உள்ள இவ்வெதிர் பால் (Opposite Sex) வேட்கைகள் பற்றிய மனவுணர்வுகளையும், போராட்டங்களையும் கற்றுச் சூழல்களையும் விளக்குவதாக ஆர். சூடாமணியின் தந்தை வடிவம், ஸ்டெல்லா புரூஸின் வெகுதூரத்தில் மனம். இந்திரா பார்த்த சாரதியின் நிலமென்னும் நல்லாள் ஆகிய நாவல்களைக் கூறலாம்.

இந்திரா பார்த்த சாரதியின் நிலமென்னும் நல்லாளில் வரும்ஹரிஹரினும், நிர்மலாவும் உளவியல் படித்தவர்களாக வருகின்றனர்.

நீங்கதான் கட்டிப்போட்டேள். ஆனால் நாருக்காகச் செஞ்சேன் உங்களை விட்டுப் போனா அது தப்புன்னு நினைக்கிற அளவுக்கு ஓர் அசட்டுத் தனமான குற்ற உணர்ச்சியினாலே நான் கஷ்டப்படும்படியாக என்னைப் பலஹீனமாக்கியது நீங்கதான். என்றும்,

நான் கல்யாணம் பண்ணிண்டு போயிட்டா யாரு உங்களுக்கு இந்த மருந்தெல்லாம் கொடுப்பா! மூளையைக் குழப்புற உங்களோட ஜர்னல்ஸையெல்லாம் படிச்சு டைப் செய்து அனுப்புவா! பொண்ணு, நர்ஸ், செகரட்டரி மூணும் சேர்த்தும் ஒரே ஆளாகக் கிடைக்கறிது சுலபமா!

என்ற நிர்மலாவின் உரையாடல்களும், தொடர்ந்த நடவடிக்கைகளும், நாவலின் இறுதியில் அவளது அண்ணன் ரகு,

நிர்மலாவுக்கு ஒரு பிரமைன்னு நினைக்கிறேன். அப்பாவைக் கொலை பண்ண மாதிரி — இந்த மழை இருபது நாளும் பெஞ்சிகிட்டு இருக்கையிலே— அப்பா தான் மழைய மாறி ஹண்ட் பண்ற மாதிரி இருந்த போதும் தொணதொணத்தார். இப்பவும் விடமாட்டேங்கறான்னு சொல்லிக் கிட்டிருக்கா — என்று கூறுவதும் எலெக்ட்ரா சிக்கலைக் காட்டுகின்றன.

## தொகுப்புரை

காலகாலமாகக் மனித மனங்களில் கடத்தப்பட்டு வரும்இவ்வுளச்சிக்கல், பிராய்டின் கருத்துக்களால் செப்பமுற்று கோட்பாடாகியது. அதனைப் படைப்பாளிகள் நமது படைப்புகளில் பயன்படுத்தியமையைத் தமிழ்ப் புனைகதைகளின் வழிகண்டோம். அதன் வழி பெறப்பட்ட கருத்துக்கள் வருமாறு:

தொன்மம் சார் உளவியல் கோட்பாடுகளான பிராய்டின் இடிபஸ்மற்றும் எலெக்ட்ரா உளச்சிக்கல் பற்றிய கோட்பாடுகள்படைப்பிலக்கியத்திலும் திறனாய்வு நெறியிலும் புதிய சீர்மைகளை ஏற்படுத்தின.

தற்காலத்தில் தமிழில் இக்கோட்பாடுகள் புனை கதையில் பொருளாகின்றன. ஆகவே திறனாய்வு நெறியிலும் இடம்பெறுகின்றன.

தொன்மங்களை மையமிட்ட இவ்விரு சிக்கல்களிலும் இடிபஸ் உளச்சிக்கலே திறனாய்வில் பெரும்பான்மையும் இடம் பெறுகின்றதுஎனலாம்.

# 45. நளனம்மானை : நாட்டுப்புறக்காப்பியம்

*முனைவர் கா.பகவதி*
தமிழ் விரிவுரையாளர்
அரசு மகளிர் கலைக்கல்லூரி, புதுக்கோட்டை

## முன்னுரை

நளன் – தமயந்தி கதை கூறும் நாட்டுப்புற இலக்கியங்களுள் ஒன்று நளனம்மானை. இது கேரளப் பல்கலைக்கழகக் கீழ்திசைச் சுவடிகள் நூலகத்திலுள்ள ஏட்டு இலக்கியமாகும். அச்சில்வெளிவராத இவ்விலக்கியத்துள் நாட்டுப்புறக் காப்பியக் கூறுகளைக் கண்டறிவது ஆய்வுச் செல்நெறியாகும்.

## நளனம்மானை

நளனம்மானையைப் பாடியவர் திருநெல்வேலி மாவட்டத்தில்தச்சநல்லூர் பகுதியிலுள்ள தாமரையூரைச் சேர்ந்த அருதகுட்டி என்பவர். இதனை ஏட்டில் எழுதியவர் முத்துக் கறுப்பன். இந்நூல்ஏட்டில் எழுதப்பட்ட காலம் பிலவங்க வருடம் ஐப்பசி 21 ஆம் தேதி ஆயிலிய நட்சத்திரம் கூடிய சனிக்கிழமை ஆகும். எல்.டி.சுவாமிக்கண்ணு பிள்ளையின் இந்தியப் பஞ்சாகப்படி (Indian Ephemeis) இந்நாள் 03-11-1787 எனத் தெரியவருகின்றது. ஆகவே, இவ்விலக்கியம் 18 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது எனக் கொள்ளலாம்.

## நளனம்மானை: நாட்டுப்புற இலக்கியம்

அம்மானை என்பது வாய்மொழித் தன்மையுடைய இலக்கியவகையாகும். இதனை, 'நாட்டுப்பாடலாக இருந்து இலக்கியமாக ஏற்றம் பெற்ற வகைகளுள் அம்மானை குறிப்பிடத்தக்கது' (ச.வேசுப்பிரமணியன், ப.477, 1984) என்ற கூற்று அரண் செய்கின்றது. மேலும், நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் முற்காலக் காப்பியங்களின் எச்சம் என்றும், இன்றைய கதைபொதிஇதிகாசங்களின் கதைக் கூறுகளை ாக் கொண்டது என்றும், வாய்மொழிக் கதைப்பாடலும் காப்பியங்களும் எல்லாக் காலத்தும் தம்முள் சில ஒப்புமையையும் வேற்றுமையும் கொண்டு அமைவதை எதிர்பார்க்கலாம் என்றும், இவற்றில் ஓசை நிறைக்கச்சில அடிகள் அம்மானை எனும் சொல்கொண்டு முடியும். (மேலது, பக் 292 – 293) எனவும் கூறுவர். அவ்வழி, நளனம்மானையின் கதையானது இந்தியாவின் இருபெரும் இதிகாசங்களில் ஒன்றான மகாபாரதத்தின் கிளைக்கதைகளுள் ஒன்றான நளன் கதை (தமிழண்ணல், ப.212, 1986) ஆகும்.

நாட்டுப்புற இலக்கியமான கதைப்பாடல்கள் வாழ்த்தும் வணக்கமும் அவையடக்கமும் கொண்டு தொடக்கம் கொள்கின்றன. (ச.வேசுப்பிரமணியன் ப.293, 184) என்பர். அவ்வழி, நளனம்மானையில் நூல் தொடக்கம், கதைத் தொடக்கம் இரண்டும் அவைது கருதத்தக்கது.

எல்லாக் கதைப்பாடல்களும் முதலில் பிள்ளையார் முதலிய தெய்வ ங்களைப் பரவி காப்புப் பாடல்கள் பாடப்படுவனவாகவும், நூல்இனிதே முடிய தெய்வங்களை வேண்டுவதாகவும், அவையடக்கம் நுதலிப்புகுதல் முதலிய மரபுகளைக் கடைபிடிப்பனவாகவும்உள்ளன. (இரா.சுரேந்திரன், ப.176, 1981) என்று கூறுவர். இவ்வமைப்பை நளனம்மானையில் காணலாம்.

"நன்றாக நளனம்மானை நீடுளி வாள்க
துங்கமானில வேந்தன் சூதினால்த் தோற்று மீண்ட
வங்கமான நளன் கதையை யம்மானைப் பாடலிற்
சேர்ப்பங்கயத்த
யனும் மாலும் பார்பதியாளுங் கங்கை
செங்கையற் சடையல்ச் சூடும்சிவ பதம்
சென்னி வைப்பாம் வெண்பா சீரோங்கும்
பொன் மார்பன் சிறந்த நளன் கதையை யாராய்ந்து
யம்மானை யாக்கவே போரோடு மங்கையற்கண்
சிற்ப வீடையம்மை
யுமை யீன்றெடுத்த கற்பகமே யிக்கதைக்குக் காப்பு" (ந.அ.பக்1)

என்று நூலை வாழ்த்தி, பாடப்போகும் கதையைக் கூறி, அயன்,மால், சிவன், மூவரையும் வணங்கி பிள்ளையாரைக் காப்பாக்கிப் பாடும் நிலையைக் காண்கின்றோம். மேலும் கதை பாடத் தொடங்கியதும் முதலில்

"மின்னி முகில் சொரிந்து மேதினியோ தான் வாள்க
மன்ன னளனென்போனு மங்கை தமை எந்தியையும்
கன்ம விதியாலே கலி படித்துத் தீந்த கதை
பொன்னங்கிரி யதனில்ப் பொருப்பினாலே எளுதும்
கன்னமதம் வெற்றிக் கணபதயே காப்பாமே" (ந.அ–5 அடி)

என்று பாடியிருப்பதிலும் மேதினியோரை வாழ்த்தி, வருபொருள்,கணபதி காப்பு ஆகியவை இடம்பெறும் மரபைக் காண்கின்றோம். அத்துடன் காப்பியக் கூறுகளில் முக்கிய இடம் பெறும் அவையடக்கமும்.

"மூட்டி முன்னாள்த் தான் பயின்று முதியாருரைத்தாலும்
கூட்டி நான் சொன்னதில்க் குறை சொன்னதில்க் குறைசொன்னென்ற
பின்பு
கேட்டுப் படித்து கிளர்ந்த பொருளுரையால்
நாட்டு தமிளோர்கள் நல்லதென்று கொள்வீரே" (ந.அ.24–27 அடி)

என்று இவ்விலக்கியத்தில் இடம் பெறக் காண்கின்றோம்.

'வாழி' என வாழ்த்திக் கதை முற்றுப் பெறுவது கதைப்பாடல்களின் மரபு (இரா.சுரேந்திரன், ப.176, 1981) என்பர். அவ்விதமே நாட்டுப்புறக் காப்பியமான இந்நூலில்,

'மன்ன னளன் வாளிமங்கை தமயந்தி வாளி
கேட்டோரும் கற்றோரும் கிளைதோறும் வாளியதே

எளுதிப் படித்தோர் வாளி யின் புறக்கேட்டார் வாளி
பாடிவித்த யண்ணாவி பைந்தமிழோர் வாளியதே
வாளி க வாளி வையகத்தோர் வாளியதே
நளனம்மானை முகுந்தது முற்றும்'' (ந.அ.617 – 3622 அடி)

என்று வாழ்த்துடன் கதை முற்றுப் பெறுகின்றது. இவ்வாறான தொடக்கமும், முடிவும் ஆகிய நளனம்மானையின் நாட்டுப்புறக் காப்பியக் கூறினைத் தெளிவுப்படுத்துகின்றன.

## நாட்டுவளம், நகர்வளம்

காப்பியங்களில் கதை தொடங்கியதும் நாட்டுவளம், நகர்வளம் முதலானவை இடம்பெறும். நளனம்மானையிலும்,

'நீட்டும் நிடதநாடன் நேமிச்சக்கரம் புரந்தோன்
நாட்டின் சிறப்பதனை நானுரைப்பே னம்மானை
கருக்கொண்டல் தானேளுங் கலைமகள் தன் மேனிதனில்
.............
கள்ளவிளுங் கோதை கல்வி நலந்தோர் பயின்று
நன்னீதியும் போர்மலநாட்டில் முறையிது காண்' (ந.அ.29–56 அடி)

என்று நாட்டுவளம் முதலில் கூறப்படுகின்றது. இதில் கதைபாடுவோர் நிடத நாட்டின் வளம் கூறி முடிக்கும் போது 'மலநாட்டில் முறையிது' என்று கூறுவதால், இவ்விலக்கியம் பாடப்பட்ட பகுதியின் வளத்தைப் பாடுவது போலுள்ளது. இது நாட்டுப்புற இலக்கியத்தின் மரபைக் காட்டுகின்றது.

இதனையடுத்துக் காப்பியம் போன்றே நளனம்மானையிலும்
'நாட்டின் முறையிது காண் நகர்ச் சிறப்புக் கூறுகிறேன்' (ந.அ.57 அடி)
என்று நகர்வளம் தொடங்குகின்றது.

## கூற்றுமுறை

வழிவழியாக வழங்கிவரும் நாட்டுப்புறக் காப்பியம் கேட்கும் வாசகர்களுக்காகவே உருவாக்கப்பட்ட ஒன்றாக இருக்கவேண்டுமேயன்றி படிப்பவர்களுக்காக அல்ல (George W.Bosewell, J.Reaver, P.86, 1962) என்றுரைப்பர், நளனம்மானை கேட்கும் வாசகர்களுக்காகவே உருவான நாட்டுப்புறக்காப்பியம். அதனால் கேட்போர் கவனத்தைக் கவர,

'இன்னபடி வேந்தனினிதிருக்கு மன்னாளில்' (ந.அ.153 அடி)
'அப்படியே மன்னவனிருக்கு மன்னாளில்' (ந.அ.172 அடி)
என்ற தொடர்கள் காணப்படுகின்றன.

இந்நூல் நீண்ட நாட்டுப்புறக் காப்பியமாக இருப்பதால், கதைகூறுபவர் எப்பகுதியைக் கூறி வருகிறார் என்பதைக் கேட்போர் அறிந்து கொள்ள,

'நாட்டின் முறையிதுகாண் நகர்ச்சிறப்புக் கூறுகிறேன்' என்றும்
(ந.அ.57 அடி)

'நன்னகற்கு நகர் படலமுற்றியதே

அன்னத்தைக் கண்ணுற்ற கதையது வுரைப்பேனம்மானை'

(ந.அ.151–152 அடி)

என்றும் கூறி முடிக்கும் நிகழ்ச்சியையும், கூறப்போகும் நிகழ்ச்சியையும் கூறுகின்ற முறையினைக் காண முடிகின்றது.

இவ்வாறு நளனம்மானையில் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் பிரித்துக் கூறும், அமைப்பானது நடைத்தின் படலப்பிரிவுகளை நினைவூட்டுவதுடன், இது ஒரு நாட்டுப்புறக் காப்பியம் என்பதை உறுதி செய்கின்றது.

## மொழிநடை

இவ்வியலக்கியம் கலிவெள்ளோசயுடைய கலிவெண்பாட்டில் அமைந்துள்ளது. இடையிடையே விருத்தங்களும் வெள்பாக்களும்வந்துள்ளன. சிலவிடங்களில் சொற்களின் ஓசைநயம் சரியாக அமையாவிட்டாலும் கூட அவற்றை எழுதியதால் ஏற்பட்ட பிழையென்றே கொண்டு மேற்கூறிய யாப்பின் கீழ்க் கொள்ளலாம்.

நாட்டுப்புற இலக்கியங்களில் அவை உருவாகிய சமுதாயத்தினரின் வழக்குச் சொற்களும், அவை வழங்கிய வந்த வட்டாரச் சொற்களும் விரவி வருதலுண்டு. அவ்வாறே நளனம்மானையிலும் விரவி வரக் காண்கின்றோம்.

| வழக்குச்சொற்கள் | - | பொருள் |
|---|---|---|
| பூறா | - | எல்லாம் |
| கருதறுக்க | - | கதிரறுக்க |
| துடந்து | - | தொடர்ந்து |
| சடுதி | - | விரைவு |
| தவசு | - | தவம் |
| மெத்த | - | நிறைய |

மேலும், இவ்விலக்கியம் வழங்கி வந்த வட்டாரத்தைப் பொறுத்து மலையாளச் சொற்களும் இடம்பெறுகின்றன.

| வட்டாரச் சொற்கள் | – | பொருள் |
|---|---|---|
| கத்தபம் | - | கழுதை |
| பாரி | - | மனைவி |
| அப்போழ் | - | அப்போது |
| நன்னி | - | நன்றி |

இது போன்று மொழிநடையில் வழக்குச் சொற்களும், மலையாளச் சொற்கள் கலந்த வட்டாரச் சொற்களும் கலந்து நளனம்மானையினை ஒரு நாட்டுப்புறக் காப்பியமாக்குகின்றன எனலாம்.

## அடுக்கிக்கூறுதல்

'நாட்டுப்பாடலுக்குரிய வந்த சொல்லே மீண்டும் வரல், ஒரேபொருளை பலவிதமாகப் பன்முறை சுருக்கிக் கூறல் அம்மானைப் பாடலிலும்

காணப்படுகின்றது' (ச.வே. சுப்பிரமணியன். ப.478, 1984) என்பர். நளனம்மானையில் சுருக்கிக்கூறும் அமைப்பு வந்துள்ளது. நளன் பிரிந்து சென்றபின் தமயந்தி தனியாய் வனத்தில் புலம்புவது (ந.அ.2786 – 2821 அடி) இடம் பெறுகின்றது. அப்புலம்பலில் இடையிடையே

'ஆதி பிரமாவே அரியமாவே யீசனே' (ந.அ.2786 அடி)

'வாளு மிளமான்காள் மயிர்காமென் புள்ளினங்கா

கூவுங்கரிய குயில்காள் மென்மயிலினங்காள் (ந.அ.2794 அடி)

'புன்னைகாள் செண்பகங்காள் பூந்தாமரைன்றினமே' (ந.அ.2799 அடி)

'பிச்சிகாள் முல்லை மெய்குட மல்லிகைகாள்' (ந.அ.2801 அடி)

என்று தெய்வங்கள், பறவைகள், மலர்கள், மரங்கள், ஆகியவற்றை வரிசையாக விளித்துக்கூறும் முறையினைக் காண்கின்றோம். ஆயின், அடுக்கிக்கூறும் இவ்வரிசை நளனம்மானையின் தனித்த கூறு எனலாம்.

## கதாபாத்திரங்கள்

கதைக்கருவும் கதாபாத்திரங்களும் நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களாலும், நம்பிக்கையாலும், மொழியாலும், செயலாலும் உருவாக்கப்பட்டவையாக நாட்டுப்புறக் காப்பியங்களில் அமையும். (George W.Bosewell, J.Reaver, P.86, 1962) என்றுரைப்பர். அவ்வண்ணமே நாட்டுப்புற மக்களால் நன்கறியப்பட்ட,'ஒராளி ஏளும் ஒரு குடைக்குள் ஆண்ட நளன்' (ந.அ.125 அடி) தான் கதைத்தலைவனாக உள்ளான்; வீரத்துடன் நற்குணங்கள் வாய்க்கப்பட்டவனாக நளனம்மானையில் சித்திரிக்கப்பட்டுள்ளான். நளனைப் போலவே தமயந்தியும் கற்புநலம் வாய்க்கப்பட்ட நளனம்மானையில் சித்திரக்கப்பட்டுள்ளான். நளனைப்போலவேதமயந்தியுங் கற்புநலம் வாய்க்கப்பட்ட நல்லாளாகப் படைக்கப்பட்டுள்ளாள்.அத்துடன் மீவியல்பு ஆற்றல்மிக்க பாத்திரங்களாகத் தேவர்களும் கலியும் அன்னமும் பாம்பும் நளனம்மானையில் இடம்பெற்று மக்கள் மனதில் பலவித உணர்வுகளைத் தூண்டிக் கதையை மையக் கருத்தோடு ஒன்றி நடத்திச் செல்லத் துணைபுரிகின்றன. இவ்வாறுநாட்டுப்புறக் காப்பியத்தன்மைக்கு அரண் செய்வதாக நளனம்மானையில் பாத்திரப்படைப்பு அமைந்துள்ளது.

## இயற்கை இகந்த நிகழ்ச்சிகள்

'மனித சக்திக்கு அப்பாற்பட்டு நிகழும் விந்தைகள் தெய்வீகஆற்றலை மக்களுக்கு உணர்த்தக் கூடியனவாக இருப்பது தொல்பழங்காலத்தொட்டு இருந்து வரும் ஒரு நம்பிக்கை மரபாகும்.இது எல்லா இன மக்களுக்கும் உரிய பண்பாட்டு மரபே . இதன் விளைவாகவே பல்வேறு புராணமரபுக் கதைகள் தோன்றின (து.சீனிச்சாமி, ப.162, 1985) என்பர். அவ்வகை இயற்கை இகந்த நிகழ்ச்சிகள் நளனம்மானையில் இடம் பெறுகின்றன. அவற்றுள் கலி என்ற பாத்திரம் நாட்டுக்கல், அன்னப்புள்,பாக்குவெட்டி, தான்றிக்காய் எனப் பல்வேறு

உருவெடுப்பதனைக் சுட்டலாம். இவ்வுரு மாற்றங்கள் கதைப்போக்கிற்கு விறுவிறுப்பும், தலைமைப் பாத்திரங்கள் மீது இரக்க உணர்வும் மிகுவிக்கச் செய்வதாக அமைகின்றன.

'காப்பியத்தில் இடம்பெறும் பாத்திரங்களுக்கு அற்புதம் நிகழ்த்தும் ஆற்றலை ஏற்றுவதற்காக இயற்கை இகந்த நிகழ்ச்சிகள் இடம் பெறுவது முக்கியத்தன்மை (மேலது, ப.163) எனக்கூறுவர். நளனம்மானையில் பாம்பு ஒன்று தமயந்தியை விழுங்குவதும், மற்றொருபாம்பு வேதியனாக மாறி நளனிடம் பேசிவிட்டு மீண்டும் பழைய உருவை பெற்றுக் செல்வதுமாகிய நிகழ்ச்சிகள் இடம்பெறுகின்றன. இவ்வாறு நளனம்மானையில் இயற்கை இயந்த நிகழ்ச்சிகள் இடம் பெறுவது இந்நூலின் சிறப்பிற்குக் காரணமாகின்றது. மேலும் இவ்வாறான இயற்கை இகந்த நிகழ்ச்சிக் கூறுகள் நளனம்மானையை நாட்டுப்புறக்காப்பியமாக உயர்த்துகின்றன எனலாம்.

## நாட்டுப்புற நம்பிக்கைகள்

நாட்டுப்புற இலக்கியத்தில் மக்களிடையே நிலவிவரும் நம்பிக்கைகள் இடம்பெற்றுக் கேட்போர் மனதைக் கவரும். விதி பற்றிய நம்பிக்கை காலங்காலமாக மக்களிடையே நிலவி வருவது 'கன்ம விதியாலே கலிபிடித்துத் தீந்த கதை' என்று நளனம்மானையின் மையக் கருத்தே விதித்தொடர்பானதாகக் கூறப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. இதனை கதைப்போக்கில்பலவிடங்களில் கூறி உறுதி செய்கின்றனர். ஆசிரியர் 'நாடு விட்டுக் காடு குறைந்தும் நம்மை வினை விட்டிலையே (ந.அ.2527 அடி), 'பெண்ணே உனைப் பிரிய பிரம விதி '(ந.அ.3055 அடி), 'எழுதியவாறீதுவென்றால் முன்செய்த பாவம் முகிழ்ந்த காண்' (ந.அ.2637–38 அடி) என்று பலவிடங்களில் விதிபற்றிய நம்பிக்கை ஆதிக்கம் கொள்கின்றது. நாட்டுப்புற மக்களிடையே நிலவும் பேய், பிசாககளுக்கு அஞ்சும் மூடநம்பிக்கை,

"காவில் மலரெடுக்க வந்த மிளங் கன்னியற்கு
தேவர் மனக்குறையோ தெய்வமோ என்றளுவார்
காளி குறையோ கண்ணாதரதன் குறையோ
கூளி குறையத் தலைகள் கண்டதுண்டோ
ஏது குறையோ கானின்னேரம் கன்னியற்கு" (ந.அ. 551 – 555 அடி)

என்று விரக தாபத்தால் வருந்தும் தமயந்தி நிலையுணராததாதியின் புலம்பலில் வெளியிடப்படுவதைக் காணலாம். இவ்வாறு மக்களின் இயல்பான மனஉணர்வுகளை வெளிப்படுத்தும் நாட்டுப்புறக்கூறுகள் நளனம்மானையில் இடம்பெற்று அதனை நாட்டுப்புறக் காப்பியமாக்குகின்றன.

## தொகுப்புரை

அச்சு வடிவம் ஏறாத நாட்டுபுற இலக்கியமான நளனம்மானையில் நாட்டுப்புறக் காப்பியக்கூறுகள் அமைந்து கிடக்குமாற்றை ஆய்கின்றது இக்கட்டுரை.

நளனம்மானை வாழ்த்தும், வணக்கம், வருபொருள், காப்பு,அவையடக்கம் எனத் தொடங்கி வாழ்த்துடன் முடிந்துள்ளது.

நாட்டுவளம், நகர்வளம் முதலிய காப்பியக் கூறுகள் இடம்பெறுகின்றன.

கதைகூறும் முறை முன்னிலைக் கூற்று முறையாக அமைந்து இந்நாட்டுப்புறக் காப்பியத்தை நிகழ்வதை வடிவமாக அமைக்கின்றது.

இவ்வேட்டிலக்கியத்தின் மொழிநடை செவ்விய இலக்கிய நடையும், வழக்குச் சொற்கள் ஆகியவை கலந்து வரும் மொழிநடையாக உள்ளது.

மக்கள் மனதில் இடம்பெற்ற நளன் இவ்விலக்கியத்தின் கதைத் தலைவன், அவனுடன் இடம்பெற்ற பிற காத்திரங்கள் காப்பியங்களில் இடம்பெறக் கூடிய மீவியல்பு ஆற்றல்மிக்க பாத்திரங்களாக அமைந்துள்ளனர்.

இவ்விலக்கியத்தில் இயற்கை இகந்த நிகழ்ச்சிகள் அமைந்து இதனை நாட்டுப்புறக் காப்பியத் தன்மைக்கு உயர்த்துகின்றன.

நாட்டுப்புற மக்களிடையே இருந்துவரும் நம்பிக்கைகள் இவ்வேட்டலக்கியத்தில் கலந்து வருகின்றது.

நாட்டுப்புறக் காப்பியமான நளனம்மானை பற்றிய அறிமுகமாகக்கட்டுரை அமைகின்றது. பல்வேறு அணுகுமுறைகளில் ஆய்வு செய்வதற்கு இந்நளனம்மானையில் இடம் உண்டு.

## பயன்பட்ட நூற்கள்


1. சீனிச்சாமி து., தமிழில் காப்பியக் கொள்கை முதற்பகுதி, 1985
2. சுப்பிரமணியன் ச.வே. தமிழ் இலக்கிய வகையும் வடிவும் 1984
3. சுரேந்திரன் இரா., நாட்டுப்புற இலக்கியம் 1981
4. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழிலக்கிய வரலாறு, 1986
5. பகவதி காளிமுத்து, நளனம்மானை – நூற்பதிப்பும்நூலாராய்ச்சியும் தமிழ் முதுகலை ஆய்வேடு, தமிழ்த்துறை.கேரளப் பல்கலைக்கழகம், காரியா வட்டம் 1978
6. Geroge w.Bosewell, J.Reaver, Fundamentals of Folk Literature, 1962
7. Swamikkannu, L.D., Indian Ephemeris Vol - VI

# 46. கல்கியின் பாத்திரப்படைப்பில் நாகநந்தி அடிகள்

*முனைவர் சோதிபாய் தேவதாஸ்*
தமிழ்ப் பேராசிரியர், தொலைநிலைக் கல்வி இயக்ககம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

## முன்னுரை

பார்த்திபன் கனவு, சிவகாமியின் சபதம்,பொன்னியின் செல்வன் முதலாய கல்கியின் வரலாற்று நாவல்கள் சிலவற்றில் வரும் வரலாற்ற மாந்தர் சிலர் கற்பனை மாந்தர் சிலர். இவர்கள் அனைவரும் கல்கியின் பல்லாண்டு மனக்கருவில் உருவானோரேயாவர். சிவகாமிகள் செல்வன் நாவலில் மகேந்திர பல்லவர் மாமல்ல நரசிம்மர், பரஞ்சோதியார், வாதாபி புலிகேசி, இலங்கை மானவன்மன், நெடுமாற் பாண்டியன், மங்கையற்கரசி, குலச்சிறையார், திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தர் முதலானோரைத் தவிர மற்ற அனைவரும் கற்பனை மாந்தர்களே. புதினப் பெயருக்குக் காரணமான சிவகாமியும், அந்நடனக்கலைச் செல்வியைப் பெற்றெடுத்த ஆயனச் சிற்பியும், சிவகாமியின் நடனக்கலையில் தன் மனத்தைப் பறிகொடுத்த, சூழ்ச்சித் திறனில் வல்ல நாகநந்தி அடிகளும் கற்பனை மாந்தருள் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்களுள் நாகநந்தி சற்று வேறுபாடானவராகப் படைக்கப் பட்டிருப்பதற்கான காரணத்தை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## கதைப்போக்கு

கி.பி.ஏழாம் நூற்றாண்டையொட்டிய பல்லவர் காலநிகழ்ச்சியே சிவகாமியின் சபதக் கதையென்பது பலரும் அறிந்ததே. 4 பாகங்களிலும் 209 (49 + 55 + 57 + 50) அத்தியாயங்களிலும் கல்கிகூறும் கதை இதுதான். மகேந்திர பல்லவர் காலத்தில் வடக்கே வாதாபியை ஆண்ட புலிகேசி, கல்வியும், கலையும் மலிந்த காஞ்சியைப் பிடிப்பதற்காகத் தமிழ்நாட்டை நோக்கிப் படையெடுத்து வருகிறான். மகேந்திரர் கலை வளர்ச்சியிலேயே காலம் கழித்த காரணத்தால் வலுவற்ற தம் கோட்டையை நம்பாமல் ஒரு சிறு படையுடன் வெளிச்சென்று தம் அறிவுத்திறத்தால் செயற்படுகிறார். அத்துடன் பௌத்த விகாரத்தில் க்ஷீவாக இருந்த நாகநந்தி ஆயனச் சிறிபியின் சீடரான பரஞ்சோதியின் வாயிலாகக் கொடுத்தனுப்பிய இரகசிய ஓலையை, வாதாபி ஒற்றனின் ஓலையென்பதால் மாற்றியமைத்து, வடபெண்ணைக் கரையிலேயே புலிகேசியை ஆறுமாதம் தங்க வைத்து விடுகிறார். அதற்கு இளவரசர் நரசிம்மர் கோட்டைப் பலப்படுத்துவதில் ஈடுபட்டிருக்க, பரஞ்சோதியைப் படைத்தளபதியாக்கிச் சிற்சிலவெற்றிகளையும் பெறுகிறார்.

காஞ்சிக்கோட்டை முற்றுகையிடப்படுகின்றது. தொடர்ந்து நிகழ்ந்த முற்றுகையால் 5 லட்சம் வீரர்களுக்கும் 15000யானைக்களும் அடங்கிய வாதாபிப்

படைகளுக்குரிய உணவின்மையால் புலிகேசி தெற்கு நோக்கிச் சென்று பாண்டியனின் உணவு உதவிகோரி, சமரச உடன்படிக்கையுடன் திரும்பி வருகிறான். மகேந்திரரின் அறிவுக் கூர்மையால் சிறைப்பிடிக்கப்பட்டிருந்த நாகநந்தி அடிகளை விடுவித்தற்பொருட்டு புலிகேசி அவரோடு சமரசம் செய்து கொள்கிறான். மகேந்திரரின் பழைய சூழ்ச்சித் திறனை உணர்ந்த புலிகேசி ஆத்திரங்கொண்டு கோட்டைக்கு வெளியேயிருந்த ஊர்களை அழிக்கிறான். மக்களைச் சிறைப்பிடித்து இழுத்துச் செல்கிறான். அக்கூட்டத்தில் ஆயனரும் சிவகாமியும் அகப்பட்டுக் கொள்கின்றனர்.

மகேந்திரரால் விடுவிக்கப்பெற்ற நாகநந்தி வாதாபி செல்லும் வழியில் புலிகேசியைச் சந்தித்து, சிவகாமியிடம் தமக்கேற்பட்டுள்ள கலைக்காதலைத் தெரியப்படுத்தி, அவளைப் பாதுகாப்பாக அழைத்துக் கொண்டு போகும்படி கேட்டுக் கொள்கிறார். புலிகேசியின் வேண்டுகோட்படி மற்றொரு தம்பியைக் காக்க அவர் வேங்கி செல்கிறார். வாதாபியில் காஞ்சி மகளிரும் ஆடவரும் படும் சாட்டையடிக்கு நொந்து, வேங்கியிலிருந்து திரும்பி வந்த நாகநந்தி, அச்செயல் கண்டு வருந்தி, புலிகேசியோடு முரண்படுகிறார். பிக்ஷுவின் விரதத்தைத் துறந்து நீலகேசியாகி நாடாளவு துணிகிறார். வாதாபியை நரசிம்மர் வந்து அழித்த பின்னரே தான் காஞ்சிக்குத் திரும்புவதாகச் சிவகாமி சபதம் எடுக்கவும் அவர் தூண்டுகிறார். மகேந்தரின் ஆணைப்படி பாண்டியனின் மகளை மணந்து இரு குழந்தைகளைப் பெற்றெடுத்த நரசிம்மர் 9 ஆண்டுகளுக்குப் பின் வாதாபியின் மீது படையெடுத்து வருகிறார். பரஞ்சோதியின் உதவியுடன் வெற்றிக்கொடி நாட்டுகிறார். ஆனால் காஞ்சி சென்ற சிவகாமியோ நடந்ததை அறிந்து கொண்டு, சிவபிரானுக்கே தன் கலை வாழ்க்கையை அர்ப்பணிக்கிறாள்.

## நாகநந்தியின் வஜ்ரதேகம்

கதைத் தொடக்கத்தில் நாகநந்தியை அறிமுகப்படுத்தும் கல்வி, அவருடைய வைரம் பாய்ந்த உடம்பையே சுட்டிக்காட்டுகிறார். ஆறடி உயரத்தோடு ஆஜானுபாகுவாய், வறண்டு கெட்டிப்பட்டுக் கடினமான தேகத்தோடும், அன்புக்கும் பக்திக்கும் மாறாக அச்சத்தை ஊட்டும் முகத்தோற்றத்தோடும் விளங்குவதாக அவரைக்குறிப்பிட்டுள்ளார். அப்படிப்பட்ட உடம்பு பெற்றமுறையை நாகநந்தியே ஒரு முறை வாதாபியிலிருந்த சிவகாமியிடம் விளக்குகிறார். "கடுமையான தவவிரதங்களை அனுசரித்து என் தேகத்தை நான் அவ்வாறு கெட்டிப்படுத்திக் கொண்டிருந்தேன். வெகுகாலம் விஷ மூலிகைகளை உட்கொண்டு என் தேகத்தில் ஓடிய இரத்தத்தை எப்பேர்ப்பட்ட கொடியவிஷநாகம் கடித்தாலும், கடித்த மறுகணம் அந்த நாகம்செத்துப்போகுமே தவிர எனக்கு ஒரு தீங்கும் நேராது. என்னுடைய உடம்பின் வியர்வை நாற்றம் காற்றிலே கலந்துவிட்டால், அதன் கடுமையைத் தாங்க முடியாமல் சுற்று வட்டாரத்திலுள்ள விஷப்பாம்புகள் எல்லாம் பயந்து நாலா திசைகளிலும் சிதறிஓடும்" (பாகம் 4

அத்தியாயம் 27 (வானதி பதிப்பகம், சென்னைஐந்தாம் பதிப்பு 1998) பக்கம் 917 என்பது நாகநந்தியின் கூற்று.மகேந்திரரும் இதை நன்கு அறிந்திருக்கிறார்.

நாகநந்திக்குப் பின்னால் ஒற்றறிய அனுப்பப்பட்ட குண்டோதரன், நரசிம்மரின் உயிருக்கு அவரால் ஆபத்து வரவிருப்பதை அறிந்துகத்தியால் குத்தி பிக்ஷுவைக் கொல்ல எண்ணுகிறான். அப்போது மகேந்திரர் அவனிடம், "புத்த பிக்ஷுவின் உடம்பில் இந்தக் கத்தியை நீ செலுத்த முடியாது. அவருடைய தேகம் வஜ்ரதேகம். அவரைக் குத்தினால் கத்தியின் முனைதான் மழுங்கும். அப்படி நீ காயப்படுத்தினாலும் இந்தக் கத்தியிலுள்ள விஷம் அவரைக்கொல்லாது. (ப.452) என எச்சரிக்கிறார். ஒருமுறை பிக்ஷுவின் மீது சிவகாமி வீசிய கத்தியும் அவரைப் பாதிக்காததை நாம் பார்க்கிறோம்.

## நாகநந்தி ஒரு நாகமா?

நாகநந்தி என்ற பெயருக்கேற்ப அவருடைய இயல்பான மூச்சுக்காற்றே பாம்பின் சீறல்போல் உள்ளதுவாதாபி மாளிகையில் இருந்தபோது மயங்கி விழுந்த தன் பக்கம் வந்த நாகநந்தியின் மூச்சில் சிவகாமி அதை உணர்கிறாள். சளுக்கர் படையின் சார்பாக அவர் பேசியபோது சினங்கொண்ட சிவகாமி, 'கடவுளே! நாக்கிலே விஷமுள்ள இந்த நாகநந்தியின் கர்வத்தை அடக்க மாட்டாயா? (ப.335) என எண்ணுகிறாள். மாமல்லரிடம் பேசும்போதும் இவரைத் 'துஷ்ட நாகம் என்றே அவள் சுட்டுகிறாள். மண்டகப்பட்டு கிராமத்தில் மாமல்லரும்சிவகாமியும் அமர்ந்து மகிழ்வோடு பேசிக்கொண்டிருந்தபோது நாகநந்தி அங்கு மறைந்திருந்ததால் நாகமொன்று நகர்ந்து சென்றது. நாகநந்திக்குக் கூடுவிட்டுக்கூடு பாயும் ஆற்றல் இருக்குமோ என்றுகூட அவள் ஐயுறுகிறாள். ஆனால் மாமல்லரோ, மனிதன் பாம்பாக முடியாதெனவும், அப்படியே ஒருவன் பாம்புருவுடன் வந்தால் தான் கருடனாகி அவனை அழிப்பதாகவும், அவன் விஷப்பல்லைப் பிடுங்குவதாகவும் கூறி (ப.424) அவளது அச்சத்தை நீக்குகிறார்.

பரஞ்சோதியையும், காவல்வீரன் மருதப்பனின் மகனையும், நாகநத்தி பாம்பிடமிருந்தும், அதன் நஞ்சிடமிருந்தும், காப்பற்றியிருக்கிறார். ஆயனார் வீட்டருகிலும் பரஞ்சோதி ஒருமுறை பாம்பின் சீறலைக் கேட்டிருக்கிறான். மாமல்லரும் பரஞ் சோதியிடம் வாதாபியில் பேசும் போது, "எதிரில்பாயும் புலியைக் காட்டிலும் காலடியில் நெளிந்து ஓடும் பாம்பு அதிக அபாயம் உள்ளதல்லவா, " (ப.986) என நாகநத்தியை மனதில் எண்ணியே கேட்கிறார். தம் கைப்பையில் வைத்திருந்த பாம்பொன்றைக் குண்டோதரன் மீது தூக்கிப் போட்டு அவனது குதிரையை இவர் எடுத்துக்கொண்டு ஓடியதையும் நாம்காண்கிறோம்.

கெடில நதிக்கரையில் உள்ள சர்ப்பக் குறையொன்றில் ஆயிரக்கணக்கான சர்ப்பங்களை நாகநந்தி வைத்திருக்கிறார். காஞ்சிக் கோட்டையை வேறு வழியில் பிடிக்க முடியாவிட்டால், கோட்டைக்குள் இருக்கும் குடி தண்ணீரிலெல்லாம் விஷயத்தைக் கலந்து விடும் அவரது நோக்கத்தை மகேந்திரர் தம் ஒற்றர்களிடம் விளக்குகிறார்.

நாகநந்தியின் சினம் முற்றும்போது அவரிடம் பாம்பின் சீறல் மிகுதியாவதை மாமல்லர் சிவகாமிக்கு எழுதிய காதல் ஓலைகளைப் படித்த போதும், குண்டோதரனிடம் அகப்பட்ட பௌத்தபிக்ஷுவின் ஓலையைப் படித்தபோதும் எழுந்த சீறலால் உணரமுடிகின்றது. சிவகாமியின் காதலர் மாமல்லரைக் கொல்வதற்காகக் கையில் நஞ்சு தடவிய நாகவடிவக் கைப்பிடியுடன் கூடிய கத்தியை இவர் வைத்திருந்ததையும் நாம் காண்கிறோம். தன்னைக் காதலித்துச் சுற்றிய ரஞ்சனி என்ற அழகிய பெண்ணையும் இவர் தன் கை நாகத்தால் கீறி அருவமாக்கியிருக்கிறார். இவ்வாறு உடம்பும் உள்ளமும் நஞ்சாய் விளங்கும் நாகநந்தியிடம் வியக்கத்தக்க ஓர் இயல்பினையும் நாம்காண்கிறோம். அது என்ன?

## சிவகாமியிடம் கொண்ட கலைக்காதல்

நாகநந்தியும் புலிகேசியும் இரட்டைப் பிள்ளைகள் என்றாலும், ஆளும் போகம் புலிகேசிக்கு இருப்பதை உணர்ந்த அரண்மனைவாசிகள் நாகநந்தியை அரண்மனையினின்று அப்புறப்படுத்துகின்றனர். அஜந்தக் குகையில் ஓவிய வேலைகளில் ஈடுபட்ட வளர்ந்த நாகநத்தி ஒருமுறை வெளியுலகம் காணக்குகையை விட்டு வெளிவந்தபோது, ஆதரவற்ற புலிகேசியைத் தம்பி என்றறியாமலே உயிர் பிழைக்க உதவுகிறார். பிக்ஷுகளுக்கெல்லாம் தலைவராக வேண்டும் என்ற ஆசையாலும், தம்பியின் ஆட்சிப் பரப்பை விரிவுபடுத்தும் வேட்கையாலும் அவர் ஒற்று வேலையில் ஈடுபடுகிறார். அவர் ஒற்று வேலையில் ஈடுபடுகிறார். தெற்கே – குறிப்பாகக் காஞ்சியிலுள்ள பௌத்த விகாரத்திற்கு வருகிறார்.

மாமல்லபுரத்திலும் ஆயனர் வீட்டிலும் உள்ள அழகுச்சிலைகளைக்கண்டு பெருமகிழ்ச்சி எய்துகிறார் நாகநந்தி. அஜந்தாவில் கண்ட அழகுச் சிலையொன்று உயிர்பெற்று வந்தது போல் அங்கு வந்த சிவகாமியைப் பார்த்தவுடன் காதல் கொள்கிறார். அவளை எப்படியாவது வாதாபிக்கு அழைத்துச் சென்றுவிட எண்ணுகிறார். ஆனால் மாமல்லர்பால் பெருங்காதல் கொண்ட அவளை அப்படிச் செய்ய இயலவில்லை. எனவே, அஜந்தா வண்ணக் கலவையை அறிந்து கொள்வதில் மோகம் கொண்டிருந்த ஆயனரை ஏமாற்றி,அவரது சீடராவதற்காக அப்போது அங்கு வந்த-வீரமிக்க பரஞ்சோதியிடம் தம் தம்பிக்கு ஓர் ஓலையைக் கொடுத்தனுப்புகிறார். அதில், பல்லவ சாம்ராஜ்யத்தையும் காஞ்சி சுந்தரியையும்நீ எடுத்துக் கொள்; நடன கலாராணி சிவகாமியை மட்டும் எனக்குக் கொடுத்து விடு. என்று எழுதப்பட்டிருந்தது. ஆனால்அவ்வோலை மகேந்திரரால் மாற்றப்பட்டு விடுகின்றது.

சிவகாமிக்கு மாமல்லர் மேல் வெறுப்பை உண்டாக்குவதற்காக அவரை 'பயங்கொள்ளிப் பல்லவன் என்றும், ஸ்திரீலோலன்' எனவும்பொய் சொல்கிறான் நாகநந்தி. சிவகாமியும் கோட்டைவிட்டு வெளிவராத நரசிம்மனை எண்ணி அதை நம்பி விடுகிறாள்.

படையெடுத்த தம்பி ஆறு மாதமாகியும் காஞ்சிக்கு வராததால் நாகநந்தி குழப்பமடைகிறார்? தெற்கே சென்று பாண்டியனையும், கங்கநாட்டுத் துர்விநீதனையும் தமக்குச் சார்பாக நடக்க ஏற்பாடு செய்து திரும்புகிறார். பின்பு காஞ்சி முற்றுகை தொடங்கியபோது சிவகாமியின் நடனத்தைத் தெற்கிலுள்ளோர் பலபடப் பாராட்டியதைக் கூறி, புகழ்ப் போதையேற்றிச் சிவகாமியையும் ஆயனரையும் அழைத்துக் கொண்டு தெற்கே புறப்பட்டுச் செல்கிறார். மகேந்திரனின் சூழ்ச்சியால் துர்விநீதன் காஞ்சியின் மீது படையெடுத்து வரவே அவனை அடக்க மகேந்திரர் நரசிம்மரை அனுப்புகிறார். அப்போது பிக்ஷுவின் யோசனைப்படி அசோகபுரத்தில் தங்கியிருந்த சிவகாமியை போர் அவசரத்தில் காண்கிறார். மாமல்லர் மீண்டும் வருவார் என்ற நம்பிக்கையில் நாகநந்தி அங்கிருந்து புறப்படுமாறு கூறியதையும் அவள் மறுத்துவிடுகிறாள். அதனால் நாகந்தி ஏரியை உடைத்துவிட்டு வெள்ளத்திலிருந்து அவளைக் காக்க ஏற்பாடு செய்கிறார். "மற்றவர்கள் எப்படியானாலும் சிவகாமியைக் கட்டாயம்காப்பற்றியாக வேண்டும்'' (ப.363) என்கிறார். ஒரு ஷுவிடம்.

மாமல்லர் சிவகாமியை வெள்ளத்திலிருந்து காப்பாற்றிவிடுகிறார். மண்டகப்பட்டு கிராமத்தில் இருவரும் மனமகிழ்வோடு உரையாடிக் கொண்டிருக்கும்போது மாமல்லரைக் கொல்ல நான்கைந்து முறை விஷக்கத்தியை ஓங்குகிறார் நாகநந்தி. ஆனால் அது அருகிலுள்ள சிவகாமியின் மீது பட்டுவிடுமோ என்ற அச்சத்தால் அதை எறியவில்லை. சிவகாமி தனக்கு மட்டும் உரியவள் என்ற உடைமை எண்ணம் தான் நாகநந்தியின் உள்ளத்தில் குழப்பதிந்திருந்தது.

நரசிம்மர் கோழையல்ல, சபலபுத்தியனல்ல என்பதைச் சிவகாமி அறிந்து கொண்டபோது நாகநந்தி மிக சாதுரியமாக அவளிடம்,

'வீரத்துக்கு அர்ச்சுனன்' என்ற பேச்சை இனிமேல் விட்டுவிட்டு 'வீரத்துக்கு மாமல்லன் என்று வழங்க வேண்டியது தான். பெண்களே கண்ணெடுத்தே பார்க்காத பரிசுத்தன்' (ப.461) என்றெல்லாம் கூறிச் சமாளிக்கிறார்.

புலிகேசி மகேந்திரரோடு சமரசம் செய்து கொண்டுநாகநந்தியை மீட்கும் பணியில் தோல்வியடைகிறான். சினங்கொண்ட அவன் கோட்டைக்கு வெளியே உள்ள ஊர்பகுதிகளைச் சின்னாபின்னப்படுத்துகிறான். தற்செயலாக வெளியே வந்த நாகநந்தி சிவகாமியின் மீது கொண்ட அன்பால் ஆயனரின் உயிரைக் காப்பாற்றுகிறார். மாமல்லபுரச் சிற்பங்களைப் பாதுகாககிறார்; கைதாக்கப்பட்ட அபலைப் பெண்களைச் சிவகாமியின் வேண்டுகோட்படி, புலிகேசியின் வேடத்தில் சென்று காப்பாற்றுகிறார்.

புலிகேசியோடு பேசும் போது தன்னுடைய காதல் மற்ற உலகமாந்தரின் காதலை ஒத்ததன்று என்று கூறுகிறார் நாகநந்தி. "என்னுடைய காதலில் தேக நத்துவம் என்பது சிறிதும் கிடையாது'' (ப.710) என்று மிக உறுதியாகக் கூறுகிறார். தன்னுடைய பிக்ஷு விரதத்திற்கு அவளால் யாதொரு தடங்கலும்

ஏற்படவில்லைஎன்றும், சிவகாமியிடம் இருக்கும் கலைத் தெய்வத்திடம் தான் தனக்கு மோகம் என்றும் விளக்குகிறார். மனிதர்கள் வரமுடியாத ஏகாந்த இடத்திற்குச் சென்று அவளை ஆடச்சொல்லி அதைப் பார்த்துக்கொண்டே தன் ஆயுளைக் கழித்து விடுவதாகவும் கூறுகிறார் "தம்பி! சிவகாமியைப் பெண்டாளும் எண்ணத்துடன் அவள் அருகில் நெருங்குகிறவன் யமனுலகம் போக ஆயத்தமாயிருக்க வேண்டும்'' (ப.713-14) எனவும் எச்சரிக்கிறார்.

சிவகாமியைப் பாதுகாக்கும்படி கூறியும் அவளை வாதாபியின் நாற்சந்தியில் ஒன்றரை மாதம் நடனமாடச் செய்த புலிகேசியைத் தீர்த்துக்கட்ட எண்ணுகிறார் நாகநந்தி, மாமல்லர் படைபெடுத்து வருவதைக் கூட அவளிடம் சொல்லாதற்குக் காரணம் இதுதான். அஜந்தாவில் கலைவிழாவுக்கு ஏற்பாடு செய்கிறார். அங்கே, சிவகாமி புலிகேசியின் கால்களில் விழுந்து மன்றாடுவது போலவும், அதைத்தடுக்க ஒரு பிக்ஷு (நாகநந்தி) விரைந்து வருவது போலவும் வரையப்பட்டிருந்த ஓவியம் ஒன்றைக் கண்டவுடன், அதை வரைந்தஓவியனையே நகந்தால் கீறி அவனே ஆற்றில் விழுந்து சாகச் செய்கிறார். சிவகாமியின் பால் வெறுப்புக் கொண்ட ரஞ்சனியையும் கத்தி வீசிக் கொல்கிறார்.

இப்படிப்பட்ட நாகநந்திக்கு பிக்ஷுவிரதம் நீக்கி நீலகேசியாகி வாதாபி நாட்டை ஆளும் எண்ணம் எப்படி வந்தது என்று தெரியவில்லை. அதற்கேற்ப நஞ்சுமிக்க வஜ்ரம் பாய்ந்த தன் உடம்பின் நஞ்சை முறித்து மென்மையாக்கிக் கொள்கிறார். தம் மாற்றத்தை விரும்பாத புலிகேசியை ஆத்திரத்துடன் சபிக்கிறார். அதற்கேற்பவே அவனும் அழிகிறான், வாதாபி தம் தீக்கிரையாகின்றது. சிவகாமியிடம் தம் இதயக்கனலைக் கொட்டுகிறார். "உன்னுடன் ஒருநாள் வாழ்வதற்காகப் பதினாயிரம் வருஷம் நரகத்திலே கிடக்க வேண்டுமென்றால், அதற்கும் நான் ஆயத்தமாயிருக்கிறேன். உன்னுடைய அன்பை ஒரு கணநேரம் பெறும் பாக்கியத்துக்காக என்றென்றைக்கும் மோட்சத்தைஇழந்துவிடவேண்டும் என்றால் அதற்கும் சித்தமாயிருக்கிறேன்'' (ப.916) எனக் கெஞ்சுகிறான். அஜந்தா போய் மீண்ட பின்னர் மாமல்லர் வாதாபியை வெற்றிக் கொள்கிறார். மயங்கிய சிவகாமியைத் தூக்கிக்கொண்டு சுரங்கப்பாதை வழியாகத் தப்பிக்க முயன்றபோது ஏற்பட்ட தடையால் சிவகாமியையேகொல்ல முனைகிறார். ஆனால் பரஞ்சோதியோ அவர் கையைத் துண்டித்து விடுகிறான்.

இவ்வளவிற்கும் காரணம் மாஸ்லோ என்ற அமெரிக்க உளவியல்அறிஞர் தேவைப்படிநிலைகள் ஐந்தில் மூன்றாவதாகக் கூறியLove Needs அல்லது Belonging needs என்பதில் நாகநந்திகளின் மனம் தோய்ந்ததே எனலாம்.

## முடிவுரை

நாவல் முழுவதும் உடைமைத் தேவையுள் மூழ்கிக்கிடந்த நாக நந்தி இறுதியில் மாஸ்லோவின் முதல் தேவையான உடலியல் தேவைக்குள் (Physiological needs) சென்றதால் தான் அவருக்கு வீழ்ச்சி ஏற்பட்டது எனலாம்.

# 47. வரலாற்று நோக்கில் பஞ்சாயத்து அமைப்பின் தோற்றமும் வளர்ச்சியும்

*ச.செயராணி*

ஆய்வாளர், தமிழியல் துறை

பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி

## முன்னுரை

மனிதன் வேட்டையாடிய நிலையினை விடுத்துக் குழுக்களாகச் சேர்ந்து வாழத் தொடங்கும்போது அவர்களிடையே சிக்கல்கள் ஏற்பட்டன. குடும்ப வாழ்க்கையில் ஏற்பட்ட சிக்கலைத் தீர்ப்பதற்குத் தனியாக ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்தனர். தங்களுடைய சிக்கல்களை அந்தத் தலைவன் வழியாகத் தீர்த்துக் கொண்டனர். கிராமங்களை நிருவகிப்பதற்கு மக்கள் தாங்களாகவே ஓர் அமைப்பை ஏற்படுத்திக் கொண்டு செயல்பட்டனர். தொடக்கக் காலத்தில் அமைந்திருந்த நீதி அமைப்பு ஒவ்வொரு காலக்கட்டத்திலும் வளர்ச்சிய டைந்துள்ளது. பிற்காலத்தில் இந்த நீதி அமைப்பு கிராமப் பஞ்சாயத்து என்ற பெயரால் அழைக்கப்பட்டது. இத்தகைய பஞ்சாயத்து அமைப்பின் தோற்றம் வளர்ச்சி பற்றிய செய்திகளை அறிந்து எடுத்துக்காட்டி ஆராய்ந்து புலப்படுத்துவது இவ்வியலின் நோக்கமாகும்.

## பஞ்சாயத்து - சொல் விளக்கம்

"பஞ்சம்" என்ற சொல்லுக்கு "ஐவர்" என்றும் "ஆயம்" என்ற சொல் லுக்கு "கூட்டம்" என்றும் கழகத்தமிழ் அகராதி குறிப்பிடுகிறது.இந்த இரண்டு சொற்களும் இணைந்து (பஞ்சம் + ஆயம்) "பஞ்சாயம்" என்ற சொல் உருவானது. பஞ்சாயத்து என்ற சொல்லுக்கு "village Jury" என்று தமிழ் ஆங்கில அகராதியில் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் 'an assembly of five or more persons' என்றும் விளக்கம் தருகிறது. இதனை 'ஐவர் கூடிய நியாய சபை' எனவும் கழகத்தமிழ் அகராதி குறிப்பிடுகிறது. இலக்கியங்களிலும் இச்சொல்பற்றிப் பல பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. சிலப்பதிகாரத்தில்

'ஐம்பெருங்குழுவும் எண்பே ராயமும்
அரச குமரரும் பரதகுமரரும்'

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே பஞ்சாயத்து என்ற சொல் நாட்டு வழக்கிலும் இலக்கியங்களிலும் பல பெயர்களில் அழைக்கப்பட்டு வந்துள்ளது என்பது புலனாகிறது. தற்காலத்தில் 'பஞ்சாயத்து' என்ற சொல் 'ஐவர் குழு' எனப் பொருள் பெறுகிறது. இந்த ஐவர் குழு மக்களுக்கு நிறைவளிக்கும்வகையில் நியாயமான தீர்ப்பினை வழங்கி வந்தது. ஐவர் குழுவில் உள்ள உறுப்பினர்கள் அனைவரும் ஓரிடத்தில் கூடி அமர்ந்து பேசிநியாயம் வழங்குபவர்கள் பஞ்சாயத்து என்பதற்கு 'நியாயசபை' என்ற பெயரும் உண்டு. இது ஐந்து பேர் கூடி

விவாதிக்கக்கூடிய சபையாகும். ஒரே சாதியைச் சேர்ந்தவர்கள் தங்களுக்குள் ஏற்படக்கூடிய சிக்கல்களைத் தீர்ப்பதற்குச் சாதிப் பஞ்சாயத்து என்ற அமைப்பை வைத்துள்ளனர். ஊருக்குப் பொதுவான அமைப்பாக 'சாவடிக் கோர்ட்' என்ற அமைப்பு விளங்குகிறது. மேலும் பஞ்சாயத்து என்ற சொல் வழக்கு விவகாரம் என்ற பொருளிலும் பயன்படுத்தப்படுகிறது. 'கூட்டம்' 'ஊர்க்கூட்டம்' 'சங்கம்' போன்ற சொற்களாலும் இது அழைக்கப்படுகிறது.

## மன்றம்

சங்க இலக்கியங்களில் 'மன்றம்' என்பது மக்கள் கூடுகின்ற இடமென்று குறிப்பிடப்படுகிறது. மன்றம் என்பது முக்கிய இடத்தைப்பெற்றுள்ளது. இந்த மன்றம் என்ற அமைப்பு தான் இன்றையபஞ்சாயத்து அமைப்பின் தோற்றத்திற்கு அடிப்படையாகும். மன்றம் ஊர்நடுவிலுள்ள மரத்தடியில் கூடியது. இந்த மரத்தடி இடம் ஊர்மக்கள் அனைவரும் கூடுவதற்கு ஏற்ப ஊர் நடுவில் அமைந்திருக்கும் இந்த இடத்தில் சிக்கல்கள் எழும்போது கிராமமக்கள் ஒன்றுகூடுவர். மன்றம் என்பது இனக்குழுச் சமூகத்தில் பண்பாட்டுக் குறியீடாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. மரத்தடியில் அனைவரும்கூடுவது அவர்களின் கூட்டு வாழ்க்கையினைப் பிரதிபலிக்கின்றது. ஊர்க்கூட்டம் வேப்பமரத்தின் அடியில்தான் பெரும்பாலும் நடைபெறும். வேம்பு குளிர்ச்சி தரக்கூடியது. எனவே உடல்நலம், மனநலம் கருதி மன்றங்கள் வேப்பமரத்தடியில் செயல்பட்டிருக்கின்றன என உணரலாம்.

'மன்ற வேம்பி னொண் குலை மலைந்து
'மன்ற வேம்பி னொண் பூவுரைப்ப
'மன்ற வேம்பின் மாச்சினை யொண்டளிர்'

என்னும் புறநானூற்றுப் பாடலடிகளின் வழியாக வேம்பு ஊர்மக்கள் கூடுதற்கமைந்த மன்றமாக அமைந்திருந்தமையைத் தெரிய முடிகிறது. கிராமங்களில் இன்று பஞ்சாயத்து நடைபெறும் இடம் 'சங்கம்' 'சாவடி' எனப் பல பெயர்களில் அழைக்கப்படுகிறது. சங்ககாலத்தில் அரசர்கள் மக்களிடம் உள்ள குறைகளைத் தீர்க்க நான்கு சுவர்களுக்கிடையே அமைந்த அரண்மனையைத் தான் பயன்படுத்தினர். அரசர்கள் இந்த இடத்தில் அமர்ந்து நாட்டுமக்களிடம் நீதியைக் கூடி அதிகாரத்தைப் பயன்படுத்தியுள்ளனர். ஒவ்வொரு மனிதனும் அரசனிடம் கொண்டு வந்த வழக்குகளைத் தீர்த்த இடம் வளர்ச்சியடைந்த நிலையில் 'அவை' என்று அழைக்கப்பட்டது.

## தொடக்க நிலை

பஞ்சாயத்துக்களின் தோற்றம் பற்றி ஆராயுமுன் சிற்றூர்களின் தோற்றத்தைப் பற்றி அறிவது இன்றியமையாததாகும். சிற்றூர்கள் தோன்றிய பின்னரே பஞ்சாயத்துத் தோன்றியது. மனிதன் அனைத்தையும் கணிக்கக் கூடியவன் 'பிரபஞ்சம் முழுவதிலும்' மனிதன் முதன்மையாக விளங்குகிறான். மனிதர்களின் செயல்களில் கடவுளின் பங்கு எதுவும் இல்லை என்பதை நம்மால்

உணரமுடிகிறது. தொடக்ககாலச் சமுதாயம் ஏற்றத்தாழ்வுகளின்றி ஒரே தன்மையுடன் (Homogeneous) இருந்தது. மனித சமுதாயத்தில் குடும்பச் சிக்கல்களைத் தீர்க்கும் முறை ஒழுக்க முறை, மொழி போன்ற சிலகூறுகள் தொடக்கக் காலத்திலேயே தோன்றிவிட்டன. மனிதன் பழங்காலத்தில் நாடோடியாகக் காடுகளில் வேட்டையாடியும் இயற்கையாகக் கிடைக்கும் காய் கனிகளை உண்டும் வாழ்ந்திருக்கிறான். பின்பு இம்மனிதன் நீர்நிலைகளை கொண்ட செழிப்பான இடங்களாகப் பார்த்து ஓரிடத்தில் தங்கி வாழத் தொடங்கினான். இத்தகைய மனிதர்கள் கூட்டம் கூட்டமாக வாழ்ந்தனர். இவர்களின் வாழ்க்கையை 'இனக்குழு வாழ்க்கை' என்று வரலாற்று ஆசிரியர் ஆந்திரயெவ் குறிப்பிட்டிருக்கிறார். வேட்டைச் சமூகத்தில் குகைகளில் வாழ்ந்த மனிதன் இனக்குழு வாழ்க்கையில் வீடு கட்டிக்கொண்டு வாழத் தொடங்கினான். இவ்வாறு ஓர் இடத்தில் நிலையாக வாழ்ந்த இனக்குழுவே பின்பு சிற்றூராகப் பரிணாம வளர்ச்சி பெற்றது. மனிதன் கூடி வாழத் தொடங்கிய போது தேவைகள் அதிகமாயின். எல்லோராலும் அனைத்துத் தேவைகளையும் நிறைவு செய்து கொள்ள இயலவில்லை. எனவே மனிதனுடைய தேவைகளை நிறைவு செய்துகொள்ளும்பொருட்டு உறவுகள் ஏற்பட்டன. உறவின் அடிப்படையில் குடும்ப வாழ்க்கை ஏற்பட்டன.

குடும்ப வாழ்க்கையில் கணவன் மனைவி உறவுநிலை இருந்தது. குடும்பத்தின் தலைவன் கணவனே. குடும்ப நிர்வாகத்தைக் கணவனே ஏற்று நடத்தி வந்தான். மனிதன் கூடி வாழத் தொடங்கிய போது சிக்கல்கள் ஏற்பட்டன. இச்சிக்கல்களைத் தீர்த்துக் கொள்ள அனைத்துக் குடும்பத்திலும் உள்ள தலைவர்கள் ஒன்று கூடித் தங்களுக்குள் ஒருவனை வீரத்தின் அடிப்படையில் நேர்வு செய்திருக்கின்றனர். அவனே அக்குழுவிற்குத் தலைவனாக இருந்திருக்கிறான். அத்தலைவன் தன் குழுவிலுள்ள குடும்பங்களில்ஏற்படும் சிக்கல்களையும் குழுவிற்குள் உள்ள ஒட்டு மொத்தச்சிக்கல்களையும் மக்களுடன் கூடிப் பேசித் தீர்த்து வைத்தான். மனிதனுடைய இந்த நிலையே பஞ்சாயத்தின் தோற்றத்திற்கு அடிப்படையாக இருந்திருக்கிறது. பஞ்சாயத்து அமைப்பு முறையானது கிராமம் என்ற அமைப்புத் தோன்றி மனிதன் கூடிவாழத் தொடங்கிய போது தோன்றியிருக்கலாம் என்றும், அது அம்மக்களிடையே ஏற்படும் சிறு சிறு சிக்கல்களையும் மையமாகக் கொண்டு தோன்றியது என்றும் அறியமுடிகிறது. இவ்வமைப்பு முறையானது சிற்றூர்களிடையே தோன்றி விளங்குவதால் இது கிராமப் பஞ்சாயத்து எனவும் அழைக்கப்படுகிறது. இனக்குழுத் தலைவன் சிக்கல்கள் ஏற்படும்பொழுது மட்டுமே அவற்றைத் தீர்த்து வைக்கிறான். பிறசூழல்களில் அவனும் குழு மக்களைப் போலச் சாதாரண வாழ்க்கை நிலையிலேயே வாழ்ந்திருக்கிறான். இந்த மக்களிடம் ஏற்பட்ட சிக்கல்களைத் தீர்க்கும் முறைகள் பல நிலைகளில் மாற்றம் பெற்று தற்போதுள்ளபஞ்சாயத்து என்ற நிலைக்குக் காரணமாக இருந்திருக்கின்றதுஎன்பதை அறியமுடிகின்றது.

## மக்களின் சிக்கல்களில் மன்றங்களின் பங்கு

சிற்றூர் மக்களுக்கிடையே ஏற்படும் சிக்கல்களை ஊர்ப்பெரியவர்கள் நியாயம் கூறும்போதுதான் மன்றம் செயல்பாடுடையதாகமாறுகின்றது. மன்றத்தில் வழக்குகளை விசாரிக்கும்போது யாரும் அதிகாரம் செலுத்த முடியாது. மன்றம் என்ற அமைப்பு அதிகாரம்இல்லாத அமைப்பாக இருந்து செயல்படுவதை இன்றும் கிராமங்களில் காணமுடிகிறது. கிராமத்திலுள்ள முதியோர்கள் தான் சிக்கல்களைத் தீர்த்து வைக்கின்றனர். இவர்களுக்குத்தேர்தல் வைப்பது இல்லை. வயதிலும் அறிவிலும் முதியோராய்இருப்பவர் தாமாகவே தலைவராக முன்னின்று வழக்குகளைத் தீர விசாரித்து ஊர்ப்பொதுக் காரியங்களிலும் ஈடுபட்டனர். உழவர்கள் வயலில் கதிரை அறுத்துக் களத்திலிட்டுத் தூய்மைசெய்யும்போது பலத்த காற்று வீசிப் பதர்கள் பறந்தன. இந்தப்பதர்கள் பக்கத்தில் உள்ள பரதவரின் உப்பளங்களுக்குச் சென்று உப்பில் கலந்தன. இதனால் உழவர்களுக்கும் பரதவர்களுக்கும் கருத்து முரண்பாடு ஏற்பட்டது. ஒருவருக்கொருவர் சேற்றை அள்ளி இறைத்துக்கொண்டு சண்டை போட்டதால் முதியோர்கள் சண்டையை விலக்கினர். பரதவர்களின் உழைப்பிற்குப் பதிலாக உப்பை அசுத்தப்படுத்தியதை ஈடுகட்டுவதற்காக நன்றாகக்காய்ச்சி இறக்கிய தேறலைப் பரதவர்க்குக் கொடுக்கச்செய்தனர். முதியோர்கள் குற்றங்களை நன்கு விசாரித்து 'நடுவு நிலை பிறழாது' குற்றங்களுக்கு ஏற்ப மன்றங்களில் தண்டனை வழங்கியிருக்கிறார்கள்.

## மன்றங்களின் சிதைவு

'மன்றத்துள்ள மழியவூக்குநர் மிடறபுத்
துள்ளுநர் பனிக்கும் பாழாயினவே
நின் படைஞர் சேர்ந்த மன்றல் கழுதை யோகி'

என்ற பாடலடிகள் வழியாகப் படைவீரர் ஊரிலுள்ள மன்றங்களுக்குச் சென்று தங்கி தம்மை எதிர்த்த பகைவரை வென்று அம்மன்றங்களையும் கழுதை ஏர் பூட்டிப் பாழ் செய்திருக்கிறார்கள் என உணர முடிகிறது. மக்களின் மதிப்புக் குறியீடாக மன்றம் விளங்கியது. பகைமன்னனின் முதல்தாக்குதலுக்குப் போர்க்காலங்களில் மன்றம் இலக்காக விளங்கியது தெரிய வருகிறது. ஊர்மன்றங்கள் பகைவர் படையால் அழிந்துபோன நிலையை இதன்வழி அறியமுடிகிறது.

## இலக்கியங்களில் காணப்படும் பஞ்சாயத்து

ஒரு நாட்டின் நாகரிகச் சிறப்பையும் வாழ்க்கைப் பண்பாட்டினையும் அறிந்து கொள்ளுதற்குத் தலைசிறந்த கருவிகளாய்த் திகழ்வன. அந்த நாட்டில் நின்று நிலவுகின்ற சீரிய இலக்கியங்களே. இத்தகைய சிறப்புவாய்ந்த இலக்கியங்களில் மன்றம், பொதியில், அம்பலம், அவையம், வேதிகை, அவை, ஊராண்மை மன்றில் என்று பல பெயர்களில் பஞ்சாயத்துகுறிப்பிடப்பட்டுள்ளது. கிராம செயல்பாடுகளை நிருவகித்தல்என்னும் நிலையில் மேற்கண்ட சொற்கள்

குறித்தலைக் காண்கிறோம். இவற்றில் மன்றம், பொதியில் அம்பலம் என்பவை ஒரு பொருள் பலசொல் ஆகும். குறுந்தொகை, புறநானூறு, இவற்றில் அவையம், மன்றம் பொதியில் போன்ற சொற்கள் வழங்கப்படுவதைக் காணலாம்.

## குறுந்தொகை

குறை நேர்ந்தவர்கள் யாவரும் நீதிமன்றத்தை அணுகினர். காதலர்கள் தங்கள் காதலிகளைத் திருமணம் புரிந்துகொள்ள நீதிமன்றத்தை நாடினர். நாடியவர்களை விசாரணை செய்தது. மன்றமே அவர்களுடைய காதலை நிறைவேற்றியுள்ளது என்பதைக் குறுந்தொகையில் கோழிக் கொற்றனார் பின்வருமாறு கூறுகிறார்.

'முறையுடைய அரசன் செங்கோல் அவையத்து
இயான்றற் கடவின் யாங்கா வதுகொல்
பெரிதும் பேதை; மன்ற
அளிதோ தானேயிவ் அழுங்கல் ஊரே'

இவர் பஞ்சாயத்தை அறங்கூறவையம் என்று கூறியுள்ளார். புறநானூற்றிலும் அறங்கூறும் அவையங்கள் இருந்ததை அறியமுடிகிறது.

## நீதிநூல்கள்

சங்க காலத்தைச் சங்கம் மருவிய காலம் அல்லது நீதிநூல் காலம் என்றனர். காதல், வீரம், கொடை முதலிய உணர்ச்சிகளிலும் இயற்கை இன்பத்திலும் ஈடுபட்டிருந்த புலவர்களின் உள்ளம் அடுத்த சில தலைமுறைகளில் நீதிகளைப் பாடும் நிலைக்கு மாறியது. சேர, சோழ, பாண்டியரின் அமைதியான ஆட்சியில் களப்பிரர்கள் புகுந்து நாட்டுமக்களின் அமைதியைக் கெடுத்தனர். நாட்டு மக்களின் வாழ்க்கையில் சிக்கல் ஏற்பட்டு விட்டதால் சமுதாயத்தில் எப்படி வாழவேண்டும் என்ன நீதிகளைப் போற்றவேண்டும் என்று கூறுவதற்குப் புலவர்கள் நீதிநூல்களைப் பாடினார்கள். கி.பி. 100 முதல் 500 வரையில் இயற்றப்பட்ட நூல்கள் ஆகும். இவற்றில் திருக்குறள், நாலடியார் ஆகியநூல்களில் ஊராண்மை வேதிகை போன்றவை குறிப்பிடப்பட்டுள்ளன.

## பக்தி இலக்கியம்

சங்க காலத்தையும் நீதிநூல் காலத்தையும் அடுத்து பக்திஇயக்கக் காலம் தோன்றியது. கி.பி. ஏழு, எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளில் தமிழ்நாட்டில் சைவ சமயப் பெரியவர்கள் பாடல்கள் பல இயற்றினர். இக்கால கட்டத்தில் தோன்றிய பெரிய புராணத்தில் வழக்கு நடந்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

## வரலாற்றுச் சான்றுகள்

தென்னகத்து அரசியலில் உள்நாட்டு நிறுவனங்கள் பெற்றிருந்தஇடம் சிறப்புமிக்கதாகும். ஒவ்வொருவரும் தனக்கு வேண்டியஅனைத்து வசதிகளையும் செய்து கொண்டனர். வெளிநாட்டவரை எதிர்நோக்காது தன்னைத்தானே ஆண்டுகொணடனர். உரிமை மிகுந்த சிறு குடியரசாக விளங்கிய

இம்மன்றங்களின் சிறப்பினைப்பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஐரோப்பிய அறிஞர்கள் கண்டு போற்றி உள்ளனர். கிராம வாழ்க்கையின் ஒற்றுமையும்நீடித்த தன்மையுமே இந்தியா கடந்த காலத்தில் பெற்ற நன்மைகள் அனைத்திற்கும் அடிப்படை ஆகும் என்று கூறலாம்.

பரந்துபட்ட நிலப்பரப்பை மன்னர்கள் ஆட்சி செய்தார்கள். தம் ஆளுகைக்குக் கீழிருந்த எல்லா இடங்களுக்கும் சென்று நீதி வழங்கமுடியாததால் கிராமங்களில் ஊர்ச்சபைகள் ஏற்படுத்தப்பட்டன.ஊர்ச்சபைகளில் கிராமமக்களே தங்கள் தலைவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர். நீதி நிர்வாகங்களைக் கவனித்து வரும் மக்கள் குழுவினைக் கொண்ட அந்தக் கிராமச் சங்கங்கள் ஊர்ச்சபைகள் என்ற பெயரால் அழைக்கப்பட்டன. ஊர்ச்சபையில் அரசனின் தலையீடு இருப்பதில்லை. தமிழகத்தில் கி.பி. எட்டாம் நூற்றாண்டுக்கு முன்பு இருந்த ஊர்ச்சபை பற்றிய செய்திகள் கிடைக்கவில்லை. கி.பி. எட்டாம் நூற்றாண்டின் இறுதியில்தோன்றிய பல்லவர் சோழர், பாண்டியர், கல்வெட்டுக்கள் தென்னாட்டின் கிராம சபைகளைப் பற்றிக் கூறுகின்றன.ஊர்ச்சபைகள், பல்லவர், சோழர், பாண்டியர், நாயக்கர் ஆட்சிக்காலத்தில் சிறப்பாகச் செயல் பட்டிருக்கின்றன என்பதை வரலாற்றுச் சான்றுகள் வழி அறியமுடிகிறது.

## ஆங்கிலேயர் காலத்தில் நீதி நிர்வாக முறை

18ம் நூற்றாண்டின் இறுதியில் ஆங்கிலேயர்கள் கர்நாடகத்துஅரசியலில் பெற்ற வெற்றிகளால் நிர்வாகத்தில் புகுத்தனர். நீதி நிர்வாகப் பணிகள் இயல்பாகவே செயல்பட்டுக் கொண்டிருந்தது. நீதி நிர்வாக பணிகள் இயல்பாகவே நடைபெற்றன. நீதி நிர்வாகத்தை விரிவுபடுத்தி இந்நாட்டவர்களுக்கும் நீதி வழங்கத் தொடங்கினர். ஆங்கிலேயர்கள் பிரிட்டனின் பேரரசில் நீதி வழங்கினர். பிரிட்டனின் பாராளுமன்றத்தில் சட்டம் இயற்றிப் பழைய நீதி மன்றத்துக்குப் பதிலாக பேரரசின் பொறுப்பிலான நீதிமன்றத்தை உருவாக்கினர். தலைமைக்கு ஒரு நடுவரையும் துணைத்தலைமைக்கு இரண்டு நடுவர்களையும் இந்த நீதிமன்றத்துக்குத் தேர்ந்தெடுத்துக்கொண்டனர். இந்த மன்றம் அதிகாரத்தைப் பெற்ற அனைத்து மக்களுக்கும் நீதி வழங்கியுள்ளது. ஐரோப்பியர்களுக்கு ஐரோப்பிய சட்ட விதிகளையும் இந்துக்களுக்கு இந்து சட்ட விதிகளையும் முஸ்லீம்களுக்கு முஸ்லீம் சட்ட விதிகளையும் பின்பற்றினர். பணம் கொடுக்கல் வாங்கல் தொடர்பான வழக்குகளுக்கு இம்மன்றம் நீதி வழங்கியது. எளிய மக்கள் அதிகச் செலவு இல்லாமல் நீதி பெற்றனர். ஆங்கிலேயர் காலத்தில் அமைக்கப்பெற்ற பாதுகாப்பாளர் நீதிமன்றம் (Court of wards)இளையோர் (minor) மகளிர் மற்றும் சிலரின் உரிமைகளையும் பொருளையும் பாதுகாத்தது. நீதி நிர்வாகம் ஒழுங்கான அமைப்புடனும் அமைதியுடனும் செயல்பட்டு அனைவருக்கும் சிறந்த முறையில் நீதி வழங்கியது.

## இருபதாம் நூற்றாண்டில் நீதி நிர்வாகம்

சட்டத்தின் முன் சமம் என்ற கொள்கைக்குச் சட்ட மரபுகள் இடம் தரவில்லை. பழமையான சட்ட விதிகள் பொதுமக்களுக்குநியாயமான நீதியைக்

கொடுக்கவில்லை. சமூக ஏற்றத் தாழ்வைக் காட்டி வழக்குகளை விசாரித்து தண்டனைகளில் வேற்றுமை காட்டினர். மராட்டியர் காலத்துத் தஞ்சையில் நீதி நிர்வாகத்தில் அநீதி தாண்டவமாடியதைக் கண்ணுற்ற சுவார்ட்ஸ் பாதிரியார் புதுமுறை நீதிமன்றம் ஏற்படச் செய்தார். கர்நாடக நவாபுகளின் ஆட்சியிலும் 'காசி' இசுலாமியர்களுக்கு மட்டும் நீதி வழங்கினார்.

உரோமானியர் மரபைப் பின்பற்றி பொதுச் சட்ட மன்றங்கள் (common law courts) மூலம் சிவில் சட்டங்கள் குற்றவியல் சட்டங்கள், நடைமுறைச் சட்டங்கள் என வரன்முறை செய்து வகைப்படுத்திய சட்டங்களை நீதிமன்றங்கள் வழிச் செயல்படுத்தினர். அதற்கு டி.பி. மெக்காலே எடுத்த பங்கு பாராட்டுதலுக்குரியதாகும். கீழ்மட்டத்தில் உள்ள குற்றவியல் நீதிமன்றங்கள் ஊராண்மை வழக்கு மன்றங்கள் முதல் மேல்மட்டத்தில் உள்ள உச்ச உயர் நீதிமன்றத்திலும் அதற்கு மேல் அரசப் பேரவையிலும் (Privy council) பேரரசிடம் முறையிட்டு நீதி கிடைக்கச் செய்தனர். இவற்றுக்கு மேலாகச் சட்டத்தின் முன் எந்தவிதப் பாகுபாடுமின்றி அனைவரும் சமமாக நடத்தப்பட்டு அவர்கள் நிதி வழங்கிய முறை பாராட்டுதற்குரியதாகும். ஆயிரக்கணக்கான ஆண்டுகள் இந்தியர்கள் அறியாத இம்முறையை ஆங்கிலேயர் ஆட்சி வழங்கியதுசட்டத்தின் முன் அனைவரும் சமம் என்ற உணர்வு ஆங்கிலேயர் ஆட்சியின் விளைவுகளால் ஏற்பட்டது.

## இன்றைய நீதிமன்றங்கள்

அவையில் அரசன் தலைமை வகிப்பது போல நீதிமன்றங்களில் நீதிபதி தலைமை ஏற்றுச் செயல்படுகிறார். நீதிபதியாக இருப்பவருக்குச் சட்டம் கல்வியறிவு மிகவும் அவசியம். நீதிமன்றங்களில் நீதிபதியே மிகுந்த அதிகாரத்தைச் செலுத்தக்கூடியவராக இருந்தாலும் அரசனைப் போலச் செயல்பட முடியாது. இன்றைய நீதிமன்றம் அரசவையின் வளர்ச்சியாக விளங்குகிறது. நீதிமன்றம் பெரிய கட்டடங்களில் தற்போது இயங்கி வருகிறது. நீதிமன்ற அமைபில் நீதியினை வழங்குகின்றவர் ஒருவராக உள்ளார். இது அரசவையில் அரசனே வழங்குவதைப் போன்று உள்ளது. மேலும் பண்டைக்காலத்தில் நீதி வழங்குபவர்களுக்கு என்று தகுதிகள் இருந்தன. அதனைப் போலவே இன்றைய நீதிமன்றத்திலும் நீதியினை வழங்குபவர்களுக்குத் தகுதிகள் உள்ளன. அரசவையில் அரசனுக்கு உயர்வான இடத்தில் சிம்மாசனம் அமைந்து இருந்ததைப் போல நீதிமன்றங்களில் நீதிபதி அமர்ந்திருக்கின்ற இடமும் உயர்வானதாக அமைக்கப்பட்டுள்ளன. அரசவையினைப் போன்று தண்டனைகள் முறைகளும் நீதிமன்றத்தில் காணப்படுகிறது. ஆனால் தண்டனைகள் அரசனால் வழங்கப்பட்டதைப்போன்று கடுமையான்வையாக இல்லை. நீதிபதி அரசாங்க அதிகாரியாக அரசுக்குக் கட்டுப்பட்டுச் செயல்படக் கூடியவராக இருக்கிறார். வழக்குகளை விசாரித்த நடுநிலையுடன் சட்டத்தின் அடிப்படையில் தீர்ப்பு வழங்குகிறார். தன்னுடைய விருப்பு வெறுப்புக்கு ஏற்றபடித் தண்டனை வழங்காமல் சட்டத்திலிருக்கும் தண்டனையை வழங்குகின்றனர்.

# 48. நிழலான நாட்களில் அரசியல் சித்திரிப்பு

முனைவர் க.பூங்கொடி

மதுரை

**முன்னுரை**

மனிதன் எப்பொழுது தனித்தனியாக வாழ்வதிலிருந்து விலகி நான்கு பேருடன் பழகி சமுதாயமாக வாழ ஆரம்பித்து விட்டானோ அப்பொழுதே அவனுடைய அரசியல் வாழ்க்கையும் தொடங்கி விடுகிறது. மனிதன், அரசு இருவரின் பரஸ்பர ஒத்துழைப்பில்தான் சமுதாய வாழ்க்கை நடைபெறுகின்றது. எனவே மனிதனின் அரசியல் வாழ்க்கை என்பது அவசியமானதொன்றாகக் கருதப்படுகிறது' சமூகத்தின் வெளிப்பாடாக நாவல் இலக்கியம் இருப்பதனால் அரசியல் சார்ந்து எழுதுவது என்பது நாவல் வரலாற்றில் ஒரு நடப்பியல் சார்ந்த போக்காகவே இருக்கின்றது. இதனை "எல்லா படைப்பாளிகளும் ஏதாவது ஒரு வகையில் நேரடியாகவோ மறைமுகமாகவோ வாழ்க்கை பற்றிய சிலமதிப்பீடுகளை முன் வைக்கின்றனர். அது அவர் தமது தனிப்பட்ட வாழ்க்கை மட்டுமன்றி அவர் சார்ந்து வாழும் சமூகத்தினால் பெறப்பட்ட அனுபவத்தின் அடிப்படையில் அமையலாம். அந்த வகையில் படைப்பாளன் தான் சமூகத்தில் பெறுகின்ற அர்சியல் உணர்வை தனது படைப்புகளில் ஏதாவது ஒரு விதத்தில் பிரதிபலிக்கின்றான்"[2] என்ற கருத்து வலியுறுத்தும். இவ்வாறு படைப்பாளன் பிரதிபலிக்கும் அரசு சார்ந்த அரசியலானது "அதிகாரத்தின்" குவியலாக, மையமாக நின்று விளங்குகின்றது.

அரசியல் நாவல் குறித்து பல்வேறு அறிஞர்கள் கூறிய விளக்கம் பின்வருமாறு:

இதனை நயனதாரா சகலின் நிழலான நாட்கள் (The days in shadow) என்ற நாவல் வழி ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

நிழலான நாட்கள் என்ற நாவலில் நிழல் என்ற உருவகம் 'சுதந்திரத்தின் தேவையைச் சுட்டுவதாக அமைகிறது. இந்நாவலின் ஆசிரியர் அரசியலையும் சமூகத்தையும் இணைத்துக் கூறுவதுடன் அதுவளர்ச்சி பெற்று வரும் நாட்டில் அச்சம் தருகின்ற நிலையையும் எடுத்துரைக்கின்றனர். நயனதாரா, மேல்தட்டு மத்திய தரவர்க்கத்தினரின் சமூக அரசியல் வாழ்க்கையில் அதிகக் கவனம் செலுத்துகிறார். இது ஒருவகையில் சூழ்நிலையில் வேறுபட்டு அமைகிற மனித வாழ்க்கையை விடுத்து, ஒன்றுபட்ட முழு நிறைவான மனிதனை தமது நாவலில் சகல் படைப்பதற்கு உதவுகிறது. நவீன இந்தியாவின் நரம்பு மையமாகவும், உயிர் மையமாகவும் தலை நகராக அமைந்துள்ள தில்லி நகரம் அதனுடைய அரசியல் இலட்சியங்களாலான கவலைகளும் தடைகளும் இந்நாவலின் களமாக அமைகின்றன. காரணம் டில்லி எல்லா நிகழ்ச்சிகளும் நிகழ்வதற்குரிய

கட்டளைக்கல்லாக (touch stone) இருக்கின்றது. நாவல் தில்லி 'பிரச்சனைகளில் இதயமாக' உருவாவதை சித்தரிக்கின்றன (ப.12)

கதைப்பின்னலின் அமைப்பு முறை புதுதில்லியின் அரசியல் வட்டத்தில் குடியேறியும் அமுக்கப்பட்டும் வாழ்கிற மக்களைப் பற்றியதாகஉள்ளது. சிம்ரித்தின் (Simrit) காதலனும் இரண்டாவது கணவனுமான ராஜ்கார்க் (Raj, Garg) முற்போக்குச் சிந்தனையுடைய கிறித்துவன் அவன் சிம்ரித் மீது முதல் கணவனால் சுமத்தப்படுகிற ஒரு சார்பான விவாகரத்து ஒப்பந்தத்தை எதிர்த்து, தனது உரிமைகளை முன் வைக்கும் படி அவளைத் தூண்டுகிறான் பழையமதிப்புகளைப் போற்றுகிற பொதுத்துறை அதிகாரியின் மகனாக ராஜ் பாராளுமன்ற உறுப்பினனாக (M.P) இருப்பதுடன் சுதந்திரமானவனாக இந்துத்வ மூடப்பண்புகளிலிருந்து நாடு வெளிவரவேண்டும் என்றும் விரும்புகின்றான். தனி மனித சுதந்திரத்தின் நம்பிக்கையுள்ளவனாகவும் நேர்மையான நோக்குடைய மனிதனாகவும் விளங்கும். அவனால் மனிதச் சிக்கல்களுக்கு விதிதான்காரணம் (இந்து சமயம் சார்ந்த) என்பதை மறுக்கிறவனாக இந்நாவலில் சித்தரிக்கப்படுகிறான். இந்நாவலில் 'ராஜ்' இந்தியசோசலிஸ்ட காங்கிரஸ் சார்ந்த ஜவஹர்லால் நேருவின் மாதியாக (Model) படைக்கப்பட்டுள்ளான் என்று கூறலாம்.

ராஜ் மூலமாக பாராளுமன்றத்தையும் அதன் செயல்பாடுகளையும் புதுதில்லியின் தொடக்கநிலையான இதுவரை கண்டறியாத மாற்றங்களையும் சகல் வெளிப்படுத்துகின்றார். புதிய அரசியல்வாதிகள் இந்தியத்தின் இரக்கவுணர்ச்சிகெல்லாம் அப்பாற்பட்டவர்களாகவும் அரசின் (ஒழுக்க) விதிகளை ஏலம் விடுபவர்களாவும் இருப்பதுடன் அரசியலைச் சூதாட்டக்களமாக மாற்றிவிட்டதையும் நயனதாரா மிகச் சிறப்பாக காட்சிப்படுத்துகின்றார். சுமர்சிங் (Sumersigh) இத்தகு பண்புள்ள அரசியல்வாதியாகவே இந்நாவலில் சித்தரிக்கப்படுகிறான். இவன் முதலில் 'சினிமா உலகில் செல்ல விரும்பி, பின்னா் காங்கிரஸ் சார்பில் நின்று எதிர்பாராத விதமாக அரசியல்வாதியாகின்றான் (ப.96) முதலில் பாராளுமன்ற உறுப்பினனாகவும் ஆளும் கட்சிக்குத் 'தக்கவாறு' நடந்து கொள்வதன் மூலம் முன்னாள் நேரு ஆட்சிக்குழுவின் 'இளையமந்திரி' என்று சொல்லுமளவுக்கு தனது 'பணபலத்தான' மக்கள் செல்வாக்கில் (சினிமா துறை இருவருக்கும் கை கொடுத்தல்) அரசியல் அதிகாரத்தை தன்கையில் பிடித்துக் கொள்கிறான். இதனால் தேர்ச்சி பெற்ற உறுப்பினனாக இருப்பதைக் காட்டிலும் 'தேர்தல்' சதுரங்கத்தில் வெற்றி பெற்று அரசியல் வரலாற்றில் பிறகட்சிகளால் எதிர்க்க முடியாத தலைவர் என்ற தகுதியைப் பெறுகிறான் சுமர்சிங். அவனது அதிகாரத் தலைமைக்கு, அரசியலும் அவனது சொந்தக் குறைபாடுகளை எதிர்க்கொள்வதற்காகப் பாலுறவும் முக்கியகாரணமாக அமைகின்றன.

நாட்டின் நிலவரைத் திட்டத்திற்கான காப்பீட்டுப் பத்திரம்பற்றியும் (Policy of non-alignment) நட்புறவுடன் கூடிய உலக நாடுகளின் கூட்டு முயற்சியையும் சுமர்சிங் கேலி செய்வதுடன், 'எதிர்காலப் பிணைப்பு' என்று சாக்குப்போக்குகள்

கூறி தனிப்பட்ட பயன் சார்ந்த நட்புறவு அடிப்படையில் ரஷ்யாவுடன் 'எண்ணெய் வியாபார ஒப்பந்தம்' (Oil Portfolio) வைத்துக் கொள்கிறான். நாட்டின் பாதுகாப்புத் துறையைக் கண் மூடித்தனமாக அச்சுறுத்துவதுடன் தனது அரசியல் அணுகுமுறையில் ஓர் ஒழுக்கக்கேடான சர்வாதிகாரியாகவும் இருக்கின்றான் (ப.84) எண்ணெய் ஒப்பந்தம் விசயத்தில் மூத்த ஆட்சிக்குழு அமைச்சரான சர்தார் சாகிபின் (Sardar Sahif) ஆலோசனையையும் தவிர்த்துவிட்டு எந்தவித உதவியில்லாமல் தனியாக நிலவரைத் திட்டத்திற்கான காப்பீட்டு ஒப்பந்தத்திற்கு ஒப்புதல் அளிக்கின்றார். அவருடைய வெளிப்பாட்டு நிலை மிகவும் வேறுபட்டே அமைகிறது. இதனை நயனதாரா, 'எந்தப் பங்கீட்டிலும் அந்தப் பங்கீட்டிற்கான கமர்சிங்கின் தீர்வும் இருக்கும் (ப.42) என்ற கூற்றின் மூலம் வெளிப்படுத்துகிறது.

இன்றைய சூழலில் அரசியல் சதுரங்க விளையாட்டாக மாறிவருவதை கமர்சிங் எவ்வாறு மக்கள் செல்வாக்குப் பெற்று அரசியல்வாதியாக மாறுகிறான் என்பதை விவரிப்பதன் மூலம் சகல 'சர்வாதிகாரத்தை' விமர்சிக்கின்றார். அரசியலில் செல்வாக்குப் பெறுவதற்கு கமர்சிங் எந்தவிதமான கடுமையான முயற்சியும் எடுத்துக் கொள்வதில்லை. அவனைச் சுற்றி அமையும் மக்கள் கூட்டத்தை அதிக அளவில் இருப்பதை அதற்குக் காரணமாகக் கூறலாம். இதனை, 'மக்கள் திரள் மூலம் இவன் மிகக் குறுகிய காலத்தில் மிக உயர்வான நிலையை அடைந்து தனக்குரிய பயனைப் பெற்று விரைவில் இந்நாட்டை விட்டு விலகி விடுவான் (ப.127) என்ற கூற்றின் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

பாராளுமன்றத்தில் (சோவியத் நாட்டிற்கே உரிமைச் சலுகை) பெரும்பான்மையான 'ஓட்டுகள் அடிப்படையில் கிடைக்கின்றது அன்று, எதையும் ஆழ்ந்து சிந்திக்கின்ற அரசியல்வாதியான ராஜ், மிக வெறுப்பான, தனிப்பட்டத் துன்பமான மனநிலையில் இருப்பதால் இந்த ஒப்பந்தம் தொடர்பான எந்தக் கேள்வியும் எழுப்பாது அமைதியாயிருக்கின்றான். அவனது அத்தகு செயலற்ற மனநிலையிலும் "உறுப்பினர்களின் வெற்றியில் அமைவது தான் மக்களாட்சி போதும். இத்தகு செயல்பாடுகள் இப்பொழுதும் சரியாக இருக்கவேண்டும் என்பதில்லை (ப.156)" என்று அவனது வாய் முணுமுணுக்கின்றது. இக்கூற்றின் மூலம் இத்தகு பாராளுமன்ற செயல்பாடுகள் மாற்றவேண்டும் என்ற ஆசிரியரின் கருத்தை அறியமுடிகிறது. சோவியத்நாட்டு வணிக வாய்ப்பில் வெற்றியடைந்ததற்காக கமர்சிங்கிற்கு ஆட்சிகுழு அமைச்சர் பதவி (Cabinet Minister) கொடுத்து அதற்கான விழா வெளிப்படையாக பாராளுமன்றத்தில் நடைபெறுவதை கல் மிகுந்த வெறுப்புடன் கண்டனம் செய்கின்றார். ஒழுங்கற்ற மடத்தனமான நமது ஜனநாயக அரசாங்கம், அதனுடைய போலித்தன்மை, பலனின்மை, தகுதியற்ற தன்மை ஆகிய பாராளுமன்றத்தில் இந்த ஒப்பந்தவிழா தொடர்பாக நடக்கும் நிகழ்ச்சிகளை கீழ்க்காணுமாறு வர்ணிப்பதன் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

....... ஆழ்ந்து ஆராய்வதற்கு இடமில்லாத மனநிலையில் லோக்சபையில் ஒருநாள் விவாதம் மேற்கொள்ளப்பட்டது. பெட்ரோல் எண்ணெய்க் கிணறு

தோன்டுவதற்குரிய நிலவா உரி மைச்சலுகை பற்றிய தேர்தல் எந்த நேரத்திலும் நண்பகலிலோ அல்லது மாலை நேரத்திலோ அல்லது விவாதத்திற்குப் பிறகோ நடைபெறலாம் என்று எதிர்பார்க்கப்பட்டது. பாராளுமன்றத்தில்உறுப்பினரல்லாத ஆண்– பெண் இருபாலரும் வியாபார்ம் தொடர்பாக செயல்படுகிற இடத்தில் அமர்ந்தது போன்று அமர்ந்திருந்தனர். சிலர் அரசு பதவிக்கான சில சிறப்புரிமைகளை விரைவில் விரட்டுவதன் மூலம் இம்மன்றம் இவ்வுலகம் நல்ல இடமாக மாறிவிடும் என்ற கற்பனையான மனநிலையில் பாராளுமன்றத்தைவிட்டு வெளியேறினர் (ப.150).

இதன்மூலம் சகல பாராளுமன்றத்தில் செயல்பாடுகள் ஆக்கநிலையில் அல்லாமல் அழிவு நிலையில் சென்று கொண்டிருப்பதை எடுத்துரைக்கின்றார். மேலும் இப்பாராளுமன்றம் இந்தியாவிலுள்ள அனைத்து உயிர்களின் வளர்ச்சியையும் வீழ்ச்சியையும் நம்பிக்கையையும் நம்பிக்கையின்மையும் புதுமையையும் பழைமையையும் இணைக்கின்ற இந்நிலை மக்கள்மன்றமாக உயர்ந்து நிற்கின்றது என்று அங்கதச் சுவையுடன் விமரிசிக்கின்றார்.

சுமர்சிங்கின் பாத்திரப்படைப்பைப் பற்றிச் சித்தரிக்கையில் நயனதாரா மிகக் கசப்பான வகைச் சொற்களை பயன்படுத்துவதைக் காண முடிகிறது. அவரது படைப்பில் இவ்வாறு எழுதுவது முதன்முறையாக அமைகிறது என்பர் திறனாய்வாளர் மாறாக சுமர்சிங்கிலும் உயர்வான பதவியிலிருக்கும் பெட்ரோலியத்துறை அமைச்சரான சர்தார்சிங் காந்தி, நேருவுடன் சுதந்திரப்போராட்டத்தில் பங்கு கொண்டவர் நேர்மையின் சின்னமாக விளங்கும் அவர் புதிய இந்திய அரசாங்கத்தில் உறுப்பினர் அவையில் செயலற்றவராக இருக்கின்றார். சுமர்சிங் போன்ற திறமை வாய்ந்த அரசாங்க ஆட்சியில் பழைய தலைமுறையினரின் சாயலாக மட்டுமே 'சர்தார்சிங்' போன்றோர் இருக்கமுடியும். ஆனால் ராஜ் இத்தகு புதிய மத்திய அரசியல் விதிகளின் போக்கினை வீழ்ச்சியடையச் செய்வதற்கு முயலுகிறான். நயனதாரா 'ராஜ்' என்ற பாத்திரப்படைப்பின் மூலம் இந்திர 'சர்வாதிக்கார' பிடியிலிருந்து என்றாவது மாறும் என்ற தனது நம்பிக்கையை வெளிப்படுத்துகின்றார்.

நயனதாரா இந்திய அரசியலில் முழுமையான ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருப்பதாலேயே அரசியல் சூழல்களை மிகச் சரியாக பயன்படுத்த முடிகிறது. நயனதாரா பின்னால் நிகழப்போகும்அரசியல் சூழல்களைச் சரியானபடி கணித்து முன்னரே உரைந்திருக்கும் தன்மையால் இதனை உணரமுடிகிறது. அவரே தனது வானொலி, தொலைகாட்சி நிகழ்ச்சிப் பேட்டிகளில் இதனைத்துக் கொண்டிருக்கிறார். சண்டிகரில் புயல்' என்ற நாவலிலும்'நிழலான நாட்கள்' என்ற நாவலிலும் இடம்பெறும் அரசியல் நிகழ்ச்சிகள் நயனதாரா அவர் நாவல்களை எழுதியதற்குப் பின் நிகழ்ந்தவையாகும். இதனை அவரே ஒப்புக் கொண்டுள்ளார்.

'பஞ்சாப் மற்றும் புதிதாக உருவான ஹரியானா மாநிலத்தின் இரண்டாவது பிரிவினையும், இரண்டு மாநிலமும் சண்டிகரை தங்களுக்குச்

சொந்தம் கொண்டியதாக நான் எழுதிய நாவல் (சண்டிகரில் புயல்) அந்நிகழ்ச்சி தோன்றுவதற்கு ஒரு வருடம் முன்பே எழுதியது. அதே போன்று இந்திய சோவியத் ஒப்பந்தங்கள் பற்றி அமையும் நாவலை (நிழலான நாட்கள்) நான் எழுதிய பின் பல மாதங்களுக்குப் பிறகு அந்நிகழ்ச்சி நிகழ்ந்தது. நயனதாரா பல்வேறுபட்ட அரசியல் வாழ்க்கையை ஆழமாக பகுப்பாய்வதுடன் இதனை மனித நேயத்துடன் அணுகுகின்றார். அவருடைய அதிகளவிலான அரசியல் ஈடுபாடே 'மனித மதிப்புகளை' உருவாக்குவதற்குக் காரணமாக அமைகின்றன. 'நாவல் என்பது வாழ்க்கைப் பண்பைக் குறிப்பதாக அமையவேண்டும்' என்ற கருத்தின் அடிப்படையில் மனிதனின் நேர்மையான அரசியல் உணர்வு அவன் ஒழுக்கப் பண்புகளின் அடிப்படையிலேயே அமைகிறது என்பதாக சகல் குறிப்பிடுகின்றார்.

இந்நாவலில் நயனதாரா இரண்டு முரண்பட்ட அரசியல் தளங்களை இரண்டு பாத்திரங்கள் மூலம் முன் வைக்கின்றார். முதல் தளம், உடனுக்குடன் தற்காலிகமான வெற்றியையும் சொல்வாக்கைத் தேடித் தருகின்ற அரசு ஒப்பந்தங்கள் சார்பில் நிற்கும் அமர்சிங் இரண்டாவது தளம் நீண்டகால மக்கள் நலன் பேணுகிற நாட்டின் வளர்ச்சி சார்ந்த அரசு ஒப்பந்தகளை ஆதரிக்கும் ராஜ், ராஜ் ஒவ்வொரு அரசியல் செயல்பாட்டையும் அதன் நல்லது சிறப்பு மற்றும் சிறப்பற்ற கூறுகளை ஆராய்ந்து செயல்படுவனாக இருக்கிறான். அமர்சிங் கருத்தியல் நிலைகளில் மட்டுமே நிற்கிறான். சுருங்கக்கூறின் ஒன்று உண்மையான மக்களாட்சி மதிப்புகளைச் சார்ந்த உலகம். மற்றொன்று சர்வாதிகார தன்மைகளைக் கொண்டது. ராஜ் நாட்டிற்காக தன்னையும் அர்ப்பணிக்கத் துடிக்கின்றான். அமர்சிங் தன்னுடையசொந்த தன் முனைப்பான கருத்துக்களைப் புகுத்த நினைக்கிறான். ஆனால் 'அரசியல் நடப்பியல்' மறு பரிசீலனைக்கோ அல்லது கண்டனத்திற்கோ அழுத்தமாக உட்படவில்லை. அமர்சிங் போன்ற சர்வாதிகாரமுடையவர்தான் புதிய நாட்டின் ஆளும் உரிமையைப் பெறமுடியும் என்ற கருத்தே மேலோங்கி நிற்கிறது.

இன்னொரு விதத்தில் இந்நாவலில் பழைய தலைமுறை சார்ந்தஅரசியல் தலைவர்கள் குற்றம் சாட்டப்படுகின்றனர். அவர்கள் தங்கள் சொந்த நேர்மையை மட்டுமே காப்பற்றிக் கொள்ளுகின்றனர். தம்மைப் போன்ற அரசியல்வாதிகளை உருவாக்கத் தவறிவிட்டனர் என்பதும் இவர்களது கருத்து அதிகாரத்தால் மழுங்கடிப்படுவதும் சுட்டப்படுகிறது. குற்றத்தை அரசு சார்ந்து மட்டுமே கூறவில்லை. மக்கள் தங்களது நலன் பயக்கக்கூடிய தலைமைகளைத் தேர்ந்தெடுக்கத் தவறியமையும் ஒரு குற்றச்சாட்டாக முன் வைக்கிறார். இந்த அரசியலின் முடிவுக்கான தீர்வு தனிமனிதர்களிடமே இருக்கின்றதுஎனபதை சுதந்திரம், முன்னேற்றம் என்றடிப்படையில் பிரச்சனைகளை எதிர் கொள்வதன் மூலம் (face the problem) தீர்க்க முடியும் என்ற தனது கருத்தை சகல் முன் வைக்கின்றார்.

# 49. இந்திய மறுமலர்ச்சி இயக்கங்களும் - பாரதியாரும்

முனைவர்.க.நாகநந்தினி
தமிழ் விரிவுரையாளர்
குந்தவை நாச்சியார் மகளிர் கல்லூரி, தஞ்சாவூர்

ஒரு சமூகத்தின் அல்லது இனத்தின் வரலாற்றிலே நெருக்கடிகள்ஏற்படும் போது (சமூகம், பொருளாதாரம், சமயம், பண்பாடு) அங்கு பழமையைப் போற்றும் பண்பு தீவிரமடைவதைக் காண்கின்றோம். சமயமும் இதற்கு விதிவிலக்கல்ல. இந்திய வரலாற்றில் சமயத்தை எடுத்துக் கொண்டால் புராணங்கள், உபநிடதங்கள், வேதங்கள், சடங்குகள், வேள்விகள் மற்றும் வருணாசிரமக்கொள்கையை அடிப்படையாகக் கொண்ட இந்துசமயம், ஒரு நிறுவனமாக மாறத் தொடங்கியபோதுபொய்ம்மைகளும், ஊழல்களும் தோன்றின. பிறப்பினடிப்படையிலான சமூக ஏற்றத்தாழ்வும் சுரண்டலும் பெருகிய போது மகா வீரரும், புத்தரும் அவற்றுக்கு எதிர்ப்புக் குரல் கொடுத்தனர். அவை சமண, பௌத்த மதங்களின் தோற்றத்திற்கு வழி வகுத்தன. தமிழகத்தில் கி.பி. நான்காம், ஐந்தாம், ஆறாம் நூற்றாண்டுகளிலே அம்மதங்கள் தழைத்தோங்கின. இருப்பினும் உலகநிலையாமை, பெண் வெறுப்பு, துறவறம், போன்றகடுமையான கொள்கைகளால் மக்களிடம் இருந்து விலகிய மதமாக மாறின. இந்நெருக்கடியான காலகட்டத்தில் பழைய இந்துசமயக் கொள்கைகளை நிலைநிறுத்தும் தேவை ஏற்படுகிறது. சமண, பௌத்தம் கூறிய கொள்கைகளிலிருந்து விலகிஉலகியல்வாழ்வு, சமய வாழ்வு இரண்டும் இணைந்த பக்தி இயக்கத்தை சைவ, வைணவ சமயங்கள் பரப்பத் தொடங்கின. ஆவுரித்து தின்றுழலும் புலையரையும்,' பக்தி இயக்கம் சமய வாழ்விற்குள் இணைத்துக் கொள்ள முயன்றது. இருப்பினும் பிறப்பு அடிப்படையிலான ஏற்றத்தாழ்வு, பிராமணர்களுக்கு முதன்மை இடம், சடங்குகள் போன்றவை இன்றும் சற்று வலிமையாக இடம்பெறத் தொடங்கின. உள்ளத் தூய்மை, சரணாகதி என்ற பக்தி இயக்கக் கொள்கைகள் மறைந்து, நிறுவன சமயங்களாக மடாதிபதிகள், சொத்துக்கள், கோயில்கள், போலித்தனமான ஆச்சாரங்கள், சடங்குகள், வேள்விகள் என்று சமயக்கூறுகள் பல்கிப்பெருகி மக்களிடையே பிரிவினையை வலுப்படுத்தின.

கி.பி. பதினான்காம் நூற்றாண்டில் விசயநகரப் பேரரசர்கள்இந்து சமயப் பாதுகாவலர்களாக மாறிய போது அர்த்தமற்ற ஆடம்பர சமயவிழாக்களும், சடங்குகளும் பெருகின. பிராமணர்களின் முதன்மை இடம் ஐயத்திற்கு இடமின்றி நிலைநிறுத்தப்பட்டது. இவற்றுக்குத் துணைபோகும் வண்ணம்தலபுராணங்களும், பிரபந்தங்களும் உற்பத்தி செய்யப்பட்டன.பக்தி இயக்கத்தில் இருந்து வந்த சமய-

உலகியல் பிணைப்பு அகற்றப்பட்டு தத்துவ விளக்கங்கள் முதன்மை பெறத் தொடங்கின. சமய வாழ்வு–பக்தி–கடவுளைச் சேர்தல் என்பவை அடித்தட்டு மக்களிடமிருந்து பிரிக்கப்பட்டு அதி உயரத்தில் வைக்கப்பட்டன.பெரும்பாலான மக்கள் கிறிஸ்துவ, இசுலாம் சமயத்திற்கு மாறத் தொடங்கினர். இந்தக் காலகட்டத்தில் இந்து சமயத்தில் மீண்டும் நிலைநிறுத்த விவேகானந்தர், தாயுமானவர், வள்ளலார், தயானந்த சரஸ்வதி, ராஜாராம் மோகன்ராம், அரவிந்தர் போன்றோர் அவரவர் வழியில் முயன்றனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் அந்நியராட்சியையும் எதிர்த்துப்போராட வேண்டிய நெருக்கடி இந்தியாவிற்கு ஏற்பட்டது. இந்த நெருக்கடியில் அனைத்து மக்களையும் இணைக்கக்கூடிய தேசியஉணர்ச்சியை மீட்டெடுக்க இந்தியாவின் பழஞ்சிறப்பை மறுபடியும் நிலைநிறுத்த வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. சுவாமி விவேகானந்தர் (1863–1902) சிக்காகோ நகரில் ஆற்றிய சொற்பொழிவு இந்திய வரலாற்றில் குறிப்பிடத்தக்கது.

தேசிய உணர்ச்சியைத் தூண்டுவதற்கு இந்தியாவின் பழம்பெருமை–இந்து சமய அடிப்படையிலேயே இருக்க வேண்டும் என்று விரும்பினர். ஆங்கிலக் கல்வி கற்ற உயர்குடி மக்கள், வேத, உபநிடதக் கொள்கைகளை மீண்டும் கடைபிடிக்க வேண்டும் என்றுகருதிய தயானந்த சரஸ்வதி (1824–1883) பஞ்சாபில் நிறுவிய ஆரிய சமாஜமும், இந்து சமயத்திலுள்ள மூடநம்பிக்கை வழக்கிழந்த சடங்குகள் முதலியவற்றை நீக்கிக் காலத்திற்கு ஏற்ப இந்துசமயத்தை நிறுவ முயன்ற ராஜாராம் மோகன்ராய் (1772–1833) பிரம்மசமாஜத்தை கல்கத்தாவில் தோற்றுவித்தார். இரண்டு அமைப்புக்களுமே வேத, உபநிடதங்களை இந்தியா முழுமைக்கும் எழுச்சிதரும் வகையில் வேதாந்தத்தைப் பரப்பி வந்தன. இந்தக் காலகட்டத்தில் தான் பாரதியார் தன் இளமைப்பருவத்தைவடநாட்டில் கழித்தார்.

“இராஜாராம் மோகன்ராயின் பிரம்மசமாஜம், தேவேந்திரநாத் தாகூரின் தத்துவபோதினி சபை, விவேகானந்தரின் ஸ்ரீராமகிருஷ்ண இயக்கம், தயானந்த சரஸ்வதியின் ஆரிய சமாஜம் என்பன இந்தியாவில் தோன்றிய மறுமலர்ச்சி இய க்கங்கள் ஆகும். இவை சமய தத்துவ அடிப்படையில் தோன்றியவை எனறாலும் சமூக அரசியல் சிந்தனைகளை வெளிப்படுத்தின. இராஜாராம் மோகன்ராய் மேலைநாட்டுச் சிந்தனையின் தாக்கத்தால் விதவைத் திருமணம் ஆதரவு, பால்ய விவாகம், மூடநம்பிக்கை, உடன்கட்டை ஏறும் வழக்கம் ஒழிப்பு முதலிய சமூகப் பிரச்சனைகளில் அக்கறை காட்டினார். தயானந்த சரஸ்வதி, ‘வேதங்களுக்குத் திரும்பி செல்லுங்கள் என கோஷமிட்டு வேதங்களுக்கு நவீன சூழலில் விளக்கம் கொடுத்தார். விவேகானந்தர் மனிதனிடம் மறைந்துள்ள தெய்வீக ஆற்றலை வெளிப்படுத்துவதுதான் சமயம்” என்றும் இன்றும்ஐம்பது ஆண்டுகளுக்கு இந்தியர்களின் தெய்வம் பாரதமாதாதான்” என்று கூறியதன் மூலம் மனிதனை உலகத்தின் மையமாகக் கொண்டார். சமயத்திலிருந்து தேசியவுணர்வுக்கும் அரசியலுக்கும் சென்றார்”

இந்த இந்திய மறுமலர்ச்சி இயக்கங்களின் செல்வாக்கிற்குட்பட்ட படைப்பாளிகளில் பாரதியாரும் ஒருவர் ஆவார்.

பாரதியாரின் வாழ்க்கை வரலாற்றைப் பார்க்கும் போது இச்செல்லாக்கு அவருக்குள் ஏற்படுத்திய மாற்றத்தை உணர்த்தும். 1882ல் எட்டயபுரத்தில் பிறந்த பாரதியார் தன் குலத்திற்கேற்ப ஆச்சாரங்கள் சடங்குகள் ஏற்று இயல்பிலேயே இந்து சமயம் பற்றிய ஊக்கம் கொண்டவராய் திகழ்கின்றார். தந்தையாரின் மறைவிற்குப்பின்பு காசியிலுள்ள தன் அத்தைவீட்டிற்குச் சென்று தங்கி. அலகாத் ஸர்வ கலாசாலையில் தேர்வு பெறுகிறார் காசி இந்து கலாசாலையில் ஸமஸ்கிருதம், ஹிந்தி பயின்றார். இம்மொழியறிவு இந்து சமய வேத, உபநிடதங்கள் பற் றிய ஆழ்ந்த அறிவு பெற அவருக்கு. உதவின. இருந்த போதும் அவர் கண்முடித்தனமாக இந்துசமயக் கருத்துக்களை ஏற்கவில்லை.

"வேத உபநிடதங்களையோ, பகவத் கீதையையோ, இந்து மதத் தத்துவங்களையோ, புராணங்களையோ, நாயன்மார், ஆழ்வார்களது பாடல்களையோ, பரமஹம்சர், விவேகானந்தர், நிவேதி தாதேவியர் அரவிந்தர், தாயுமானவர், இராமலிங்க வள்ளலார், சங்கரர், முதலியோரது சமயக் கருத்துக்களையோ, ஆழ்ந்து கற்காமலும், செம்மையாக உணராமலும் வெறுமனே உணர்ச்சி முனைப்பில் மனம் போன போக்கில் பாரதியார்இந்துமதம் பற்றிய தமது கருத்துக்களை வெளியிட்டவரல்லர்."

இவற்றையெல்லாம் ஆழ்ந்து க்ற்று மேனாட்டுத் தத்துவங்களையும்,தம் காலத்து சமய சமூக நிலைமைகளை உற்று நோக்கி இதுவரை செய்திருக்கும் தவறுகளை வழிகாட்டல்களை நீக்கும் முயற்சியில் ஈடுபட்டார்.

இத்தனை உயர்ந்த கருத்துக்கள், ஆன்மீகச் செல்வங்கள் இருந்தும் பாரதநாட்டு மக்கள் கவலைப்பட்டு, அடிமையாக அஞ்சிவாழ்கின்ற நிலைமை மாற்ற இவற்றின் அடிப்படை சாராம்சங்களை மட்டுமே எடுத்துக்கொண்டார்.

பாரதியார் விரும்பியது தனிநபர் பக்தி – முக்தி – விடுதலை அல்ல. பாரதமக்களின் முழுமை விடுதலையை அவர் நாடினார். எனவேதான் அவர் மகாகவி என்றழைக்கப்படுகிறார். முழுமை நோக்கிய அவரது பார்வைதான் அவரை அவர் காலத்தில் மட்டுமல்லாது எக்காலத்திற்கேற்ற புரட்சிக் கவிஞனாய் நிலைநிறுத்துகிறது.

பாரதியாருக்கு சமய வாழ்வும், விடுதலை வாழ்வும் வேறல்ல.தேசபக்தியும் – தெய்வ பக்தியும் வேறல்ல.

பாரதியார் பாடிய தோத்திரப்பாடல்கள் 78, வேதாந்தப்பாடல்கள் 23 என்று எண்ணிக்கை இடப்பட்டாலும் அவர் கவிதைகள், கட்டுரைகள் அனைத்திலும் தேசம் தெய்வம் இரண்டையும் பிரிக்க முடியாது. பின்னிப்பிணைந்தே காணப்படுகின்றன.

'பாரதி பாடல்களிலே இது தேச பக்திப்பாடல், அது தெய்வபக்திப்பாடல் என்று தனித்தனியே பிரித்துப் பார்ப்பது இயலாது. தேசப்பக்திப் பாடல்களில் தெய்வ பக்தி மணக்கும். தெய்வ பக்திபாடல்களில் தேசபக்தி மணக்கும் "

என்று கருத்து இங்கு ஒப்புநோக்கத்தக்கது. எனவே தான்பாரதநாட்டை, பாரத தேவியாகவும், பராசக்தி வடிவமாகவும் கண்டார். அவரது தேசபக்திப் பாடல்களான 'பாரதமாதா', 'எங்கள் தாய்', வெறிகொண்ட தாய், பாரதமாதா திருப்பள்ளி எழுச்சி', பாரதமாதா நவரத்னமாலை, பாரததேவியின் திருத்தசாங்கம், 'தாயின் மணிக்கொடி பாரீர்', சுதந்திர தேவியின் துதி' போன்றவற்றை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

"முப்பதுகோடி முகமுடையாள் உயிர்
மொய்ம்புற ஒன்றுடையாள் – இவள்
செப்புமொழி பதினெட்டுடையார் எனிற்
சிந்தனையொன்றுடையாள்.
......
பூமியிறும்பொறை மிக்குடையாள் பெரும்
புண்ணியநெஞ்சினள் தாய் – எனில்
தோமிழைப்பார்முன் நின்றிடுங் காற்கொடுந்
துர்கை யனையவள் தாய்.
கற்றைச் சடைமதி வைத்த துறவியைக்
கைதொழுவாள் எங்கள் தாய் – கையில்
ஒற்றைத் திகிரிகொண்டேழுலகாளும்
ஒருவனையுந் தொழுவாள்."
"பேயவள்காண் எங்கள் அன்னை – பெரும்
பித்துடையாள் எங்கள் அன்னை
காய்தழல் ஏந்திய பித்தன் – தனைக்
காதலிப்பாள் எங்கள் அன்னை!"
"பொன்னனை யாய்! வெண் பனிமுடியிமயப்
பொருப்பினன் ஈந்த பெருந்தவப் பொருளே"
"நீலக்கடலொத்த கோலத்தினாள்
மூன்று நேத்திரத்தாள்"

என்று தேசபக்தி பாடல்களில் பராசக்தி வடிவத்தில் பாரதமாதாவைச் சுடுவதைக் காணலாம். இதுவே பாரதியாரின் கவித்துவப் போக்கின் புதுமை. உலகியலின் புதுமையையும், ஆன்மீகத்தின் பழமையையும் ஒருங்கிணைத்த

செயல்தான் பாரதியாரைப் பிற சமயக் கவிஞர்களிடமிருந்து வேறுபடுத்துகின்றது.

நாயன்மார்கள், ஆழ்வார்கள் காட்டிய பக்தி நெறி தனிப்பட்ட மனிதனின் ஆன்ம விடுதலைக்கு வித்திட்டவை. இவர்கள் அவரவர் தெய்வங்களின் அழகு, ஆற்றல், அவதாரங்கள், திருவிளையாடல்கள், தெய்வத் திருத்தலங்கள், தீர்த்தங்கள் என்று மரபான – புராண வேத, உபநிடதச் சிந்தனைகளை விட்டு வெளியே வரவில்லை. இறைவனின் மீது முழு ஈடுபாடு, சரணாகதி, இவ்வுலக வாழ்விலிருந்து விடுபடுதல், இறைவன் திருவடி நிழல் சேர்தல்,பிறவாமை, மறுமை இன்பம் என்று மறுவுலக வாழ்விற்கான முக்திக்கான வழியாகப் பக்தியைக் கொண்டிருந்தனர். பாரதியார் அத்தகையவரல்ல. இராமலிங்கர் சமரச சமய வழியைப் பாடியவர் என்றாலும் மரபு வழி நின்றவர்தான். இவர்கள் சமயத்தை உலகியல் வாழ்வுடன் இணைத்தாலும் அதன் பயன் இறுதியில் மறுமை அல்லது வீடுபேறு – மோட்சம் என்பதையே உறுதிசெய்தனர்.

பாரதியாரை சமயக்கவிஞர் என்ற நோக்கில் பார்க்கும் போது அவரது சமயப்பார்வை ஒரு மாற்று மரபிற்கானக் கூறுகளைக் கொண்டிருப்பதைக் காணமுடிகின்றது. அவரை வேதாந்தக் கவி, அத்துவைக் கவிஞர், சக்திதாசன், என்று அவரவர் பார்வைக்கு ஏற்றபடி ஆய்வாளர்கள் இதுவரை கூறியுள்ளனர். இந்து சமய மறுமலர்ச்சிக்கு உறுதுணையாக அவரது பாடல்கள் பயன்படுத்தப்படுகின்றன. உண்மையில் பாரதியாரின் சமயப்பார்வை என்ன? கடவுள் குறித்தும் இவ்வுலகு குறித்தும், முக்திநிலை குறித்தும்,பாரதியாரின் படைப்புக்களை மட்டும் கொண்டு பார்க்குமிடத்து

1. சர்வ இறையில் வாதம் அல்லது அறிவே – உண்மையே தெய்வம்
2. தாய்நாட்டு விடுதலை மட்டுமன்றி ஒட்டுமொத்த மனிதகுலவிடுதலை
3. சமூக அநீதிகளை எதிர்த்துப் போராடவே சமயவாழ்வு
4. உலகியல் சார்ந்திருத்தல். (உலகம் மெய்யானது)
5. துறவு, பெண் வெறுப்பு ஆகியவற்றை ஒதுக்குதல்
6. வாழ்வு குறித்த பயங்களிலிருந்து விடுபடுதல்
7. உழைத்தல்
8. தன்னைக் கட்டுதல்
9. பிறர்நலம் பேணல்
10. பிறர் துயர் தீர்த்தல்

என்பதான கருத்தியல்களை பாரதியார் கொண்டிருப்பதைக் காணமுடிகின்றது. பாரதியார் வாழ்ந்தது இந்தியநாடு.இந்துசமய நெறிகளின் மீது அவர் நம்பிக்கை கொண்டிருந்தாலும் புதிய கருத்துக்களைப் பிற சமயங்களிலிருந்து ஏற்றுக்கொண்டு புதியநெறி படைக்கவே விரும்பியுள்ளார் என்ற கருத்துப் பெறப்படுகிறது.

# 50. வெற்றியின் வித்து

*முனைவர் மா. வண்ணமுத்து*
தமிழ்ப் பேராசிரியர்
தொலைநிலைக் கல்வி இயக்ககம், ம. கா. பல்கலைக்கழகம்

## முன்னுரை

மனித வாழ்க்கையில், வெற்றியைத் தேடித் தருபவைகள் பலவற்றுள், தன்முயற்சி தலையாய இடத்தைப் பெறுகின்றது. இடைவிடா முயற்சியுடன் செய்யப்படும் எச்செயலும் வெற்றிபெறும் என்பது உறுதியாகும். முயற்சியுடன் வினைநலமும், மனநலமும் உடன் சேர்ந்தால் வெற்றிக்கு மேல் வெற்றி கிட்டும். வெற்றியின் வித்துகளாக விளங்கும் இவைகளைப் பற்றி அறிவுறுத்துவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## ஔவையும், ஆண்டியும்

எம்பெருமான் முருகப் பெருமானிடம் ஔவையார் கொண்டிருந்த பக்தியை ஆன்மீக அன்பர்கள் அறிவர். ஔவைக்குக் காட்சி கொடுத்த முருகன், அவரிடம் அரியது எது? என்று வினவுகின்றார். அதற்கு ஔவையார்,

"அரியது கேட்கின் வரிவடி வேலோய்
அரிது அரிது மானிடர் ஆதல் அரிது
மானிடர் ஆயினும் கூன்குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்தல் அரிது
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமும் கல்வியும் நயத்தல் அரிது
ஞானமும் கல்வியும் நயந்த காலையும்
தானமும் தவமும் தான் செயல் அரிது
தானமும் தவமும் தான் செய்வராயின்
வானவர் நாடு வழி திறந்திடுமே"

என்று பதில் கூறுகின்றார். இப்பாடலின் நுட்பமான பொருள் என்னவென்றால், கூன், குருடு, செவிடு, பேடு நீங்கிப் பிறந்த மனிதர்உண்மையான அறிவைப் பெற வேண்டும், உழைக்க வேண்டும், தானும் உயர்ந்து மற்றவர்களையும் உயர்த்த வேண்டும் என்பதாகும். இறைவனால் படைக்கப்பட்ட மனிதப் பிறவியின் பெருமையை உணர்ந்து உடலையும் உள்ளத்தையும் தூய்மையாக்கிக்கொண்டு வாழும் மனிதனே நிறைவான வாழ்வைப் பெறுகின்றான். இவ்வாறு இல்லாமல் உடலையும், உள்ளத்தையும் சிதைத்து வாழும்மனிதன் தன்னைத்தானே அழித்துக் கொள்கிறான். இவ்வாறு அழிந்து படும் அறிவற்ற மனிதனை,

"நந்த வனத்திலோர் ஆண்டி–அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி
கொண்டு வந்தானொரு தோண்டி – மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிக் போட்டுடைத் தாண்டி"

என்று கடுவெளிச் சித்தர் சுட்டிக் காட்டுகின்றார். பத்து மாதம்தாயின் கருவில் தங்கிப் பூவுலகில் மனிதனாகப் பிறந்தவன், மனிதப் பிறவியின் பெருமையை உணர்ந்து வாழக் கற்றுக் கொள்ள வேண்டும என்பதே கடுவெளிச்சித்தரின் பாடற்கருத்தாகும்.

## மனத்தில் உறுதி வேண்டும் பாரதி

மனித வாழ்க்கை எவ்வாறு அமைய வேண்டும் என்பதைப் பற்றிப்புதுமைக் கவிஞர் பாரதியார், சில கருத்துக்களைப் புலப்படுத்தியுள்ளர். 'எமக்குத் தொழில் கவிதை இமைப்பொழுதும் சோராதிருத்தல்' என்று குறிப்பிடும் பாரதியார் தம்முடைய தோத்திரப் பாடலில்

"தேடிச் சோறு நிதம் தின்று – பல
சின்னஞ்சிறு கதைகள் பேசி – மனம்
வாடித் துன்பம் மிகவுழன்று – பிறர்
வாடப் பலசெயல்கள் செய்து – நரை
கூடிக்கிழப்பருவமெய்தி – கொடுங்
கூற்றுக்கு இரையெனப் பின்மாயும் – பல
வேடிக்கை மனிதரைப் போலே – நான்
வீழ்வேனென்று நினைத்தாயோ?"

என்று அறிவுறுத்துகின்றார். இப்பாடற் பகுதியில் இருந்து, பிறவி எடுத்ததன் பயனை அறியாமல் உண்பது, உறங்குவது, இன்பம் துய்ப்பது என்று இல்லாமல், செயற்கரிய செயல்களைச் செய்யவே பாரதியார் விரும்பினார் என்பதை உணரலாம். மனிதன் இவ்வாறுதான் வாழவேண்டும் என்று பாரதி சுட்டிக்காட்டும் வாழ்க்கை நெறிப்பாடல் ஒன்றும் இங்கு நினைவு கூரத்தக்கதாகும்.

"நல்லதோர் வீணை செய்தே – அதை
நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ?
சொல்லடி சிவசக்தி! – எனைச்
சுடர்மிகும் அறிவுடன் படைத்து விட்டாய்
வல்லமை தாராயோ – இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே
சொல்லடி சிவசக்தி – நிலச்
சுமையென வாழ்ந்திடப் புரிகுவையோ"

சிவசக்தியிடம், 'மாநிலம் பயனுற வழிகாட்டத் தமக்கு வல்லமை த ர வரம் கேட்கும் பாரதியாரின் உயர்ந்த உள்ளம் போற்றுதலுக்குரியதாகும்.

இசை மீட்டுவதற்கு என்றே உள்ள வீணையை, உலகில் யாரும்புழுதியில் எறிவது இல்லை. வீணை இசை மீட்வதற்குப் படைக்கப்பட்ட கருவி. அது போன்றே மானிடப் பிறவியும் மனத்தில் உறுதிகொண்டும், நினைவு நல்லது கொண்டும், வாக்கினில் இனிமை கொண்டும், காரியத்தில் உறுதிகொண்டும் சமுதாய நலத்திற்காக உழைக்கப் படைக்கப்பட்டதாகும். இதற்கு மாறாகச் செயலற்ற நிலையில், நிலச்சுமையாக மனிதன் வாழ்வதைப் பாரதியார் விரும்பவில்லை. பாரதியார் விரும்பும் செயல்திறன் கொண்ட மனிதனாக மனிதன் உருவாவதற்கு, அவரவர் உள்ளத்தில் வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற முயற்சியும் குறிக்கோளும் இடம் பெற வேண்டும்.

## குறிக்கோள் வேண்டும்

குறிக்கோள் இல்லாதவனுடைய வாழ்க்கை குறைபட்டவாழ்க்கையாகவே முடியும். வாழ்க்கையில் முன்னேற வேண்டும்என்று குறிக்கோள் இல்லாத மனிதன் கெட்டுச் சீரழிவான் என்னும் கருத்தைத் திருநாவுக்கரசு சுவாமிகளும் தம்முடைய தேவாரத்தில் சுட்டிக்காட்டுகின்றார்.

பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதைமார்தம்
மேலனாய்க் கழிந்தநாளும் மெலிவோடு மூப்புவந்து
கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோள் இலாது கெட்டேன்

பாலனாய் இருந்த பொழுதும், மங்கையர் மேல் காதல் கொண்டு பித்துப்பிடித்து அலைந்த பொழுதும், மூப்பு வந்து கையில்கம்பைப்பிடித்து நடக்கும் சூழலிலும் இறைவனை வணங்கும் குறிக்கோள் இல்லாது கெட்டேன் என்று திருநாவுக்கரசர் குறிப்பிடும் கூற்று, வாழ்க்கையில் குறிக்கோள் இல்லாது செயல்படும் அனைத்துத் தரப்பு மக்களுக்கும் பொருந்தும்எனலாம்.

## தன் கையே தனக்கு உதவி

ஒருமனிதனுடைய முன்னேற்றம் அவனுடைய கையில்தான் இருக்கிறது. ஒருவனுடைய பெருமைக்கும், சிறுமைக்கும் அவனுடைய செயல்களேகாரணம் என்பதைத் திருவள்ளுவரும்,

"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்"

என்று குறிப்பிடுவார். 'தன் கையே தனக்கு உதவி' என்ற கொள்கையைக் கடைப்பிடிக்கும் மனிதன் வாழ்க்கையில் வெற்றி பெறுவான்.ஒரு சிறிய கதையை இங்கே குறிப்பிடுவது நலம் பயக்கும். நன்றாக, விளைந்து கதிர் முற்றிய வயலில் ஒரு குருவி கூடு கட்டித் தன்னுடைய குஞ்சுகளை வளர்த்து வந்தது. கதிர் முற்றியதால், நெல் அறுவடையாகிவிடும் நாம் வேறு இடத்திற்குப் போய்விடலாம் என்று குஞ்சுகள் தாயிடம் கூறின. தாயோ, பதட்டப்படாமல் சற்றுப் பொறுத்திருக்கும்படி கூறியது. காலையில் வயலுக்குச் சொந்தக்காரனும்

அவனுடைய மகனும் வரப்பில் நின்ற பேசிக் கொண்டிருந்தனர். அடுத்த ஊர்க்காரர்கள் அறுவடைக்கு வருவதாகக் கூறியிருந்தார்களே! வரவில்லையே! என்று தந்தை மகனிடம் கூறி வருந்தினார். மாலையில் வயலுக்கு வந்த தாய்க்குருவி, குஞ்சுகளின் மூலம் நடந்த செய்தியை அறிந்தது.ஒன்றும் பயப்பட வேண்டாம் என்று குஞ்சுகளுக்கு ஆறுதல் கூறியதுமறுநாளும் தந்தையும் மகனும் முன்பு போலவே வரப்பில் நின்று பேசிக் கொண்டிந்தனர். இன்று உள்ளூர்க்காரர்கள் அறுவடைக்கு வருவதாகக் கூறினார்களே! வரவில்லையே! என்று தந்தை மகனிடம் கூறினார். மாலையில் வயலுக்கு வந்த குருவி, குஞ்சுகளின் மூலம் தந்தையும் மகனும் பேசிய பேச்சுப் பற்றி அறிந்தது.குஞ்சுகள் வேறு இடத்திற்குச் சென்று விடலாம் என்று தாயிடம் கூறின. தாயோ, பயப்படவேண்டாம் இங்கேயே இருப்போம் என்று அமைதியாகக் கூறியது. அடுத்தநாளும் தாய்க்குருவி இரைதேடச் சென்ற பொழுது, தந்தையும் மகனும் வயலுக்கு வந்தனர். உறவினர்கள் இன்று அறுவடைக்கு வருவதாகக் கூறினார்களே, வரவில்லையே! என்று தந்தை மகனிடம் வருந்திக் கூறினார். மாலை மயங்கும் நேரத்தில் வயலை வந்தடைந்த குருவி, குஞ்சுகளிடம் நடந்த செய்தியை அறிந்து, குழந்தைகளே பயப்பட வேண்டாம். இங்கேயே நாம் தங்கியிருப்போம் என்று கூறியது.அடுத்த நாள் வயலுக்கு வந்த தந்தையும் மகனும் வரப்பில் நின்றுபேசிக்கொண்டு இருந்தனர். தந்தை மகனைப் பார்த்து, "இனிமேல் நாம் யாரையும் நம்ப வேண்டாம். நாளைக்கு நீயும் நானும் வந்து அறுவடை செய்வோம்" என்று கூறினார். மாலையில் வயலுக்கு வந்த குருவி, இன்று என்ன பேசிக்கொண்டனர் என்று குஞ்சுகளிடம் வினவியது. நாளைக்குத் தந்தையும் மகனுமே வந்து அறுவடை செய்யப் போவதாகப் பேசிக்கொண்டனர் என்று குஞ்சுகள் கூறின. இதைக் கேட்டவுடன் தாய்க்குருவி, "உடனடியாக இந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டு, வேறு இடத்திற்குச் சென்றுவிடுவோம்" என்று குஞ்சுகளிடம் கூறியது. இத்தனை நாள்களும் பயப்படவேண்டாம், பயப்பட வேண்டாம் என்று கூறிய நீங்கள், இப்பொழுது உடனே வேறிடத்திற்குச் செல்ல வேண்டும் என்று கூறுவதன் காரணம் என்ன? என்று குஞ்சுகள் தாயிடம் வினவின. அதற்குத் தாய்க் குருவி, "இத்தனை நாளும் அவர்கள் மற்றவர்களை நம்பினார்கள், மோசம் போனார்கள். இப்பொழுது அவர்கள், தங்களை நம்பியுள்ளனர். செயலில் வெற்றி பெறுவார்கள்" என்றுகூறியது.

இக்கதை உணர்த்தும் உண்மை என்னவெனில், வாழ்க்கையில்முன்னேற விரும்பும் மனிதன், தன்னால் இயன்ற செயல்களைத் தானே செய்யவேண்டும் என்பதுவாகும்.

## தாழ்வு மனப்பான்மையைத் தகர்த்து எறிக

முன்னேற்றத்திற்குத் தடையாய் இருப்பது தாழ்வு மனப்பான்மையாகும். யாருக்கும் நாம் குறைந்தவர் இல்லை என்ற எண்ணம்எப்போதும் நம் உள்ளத்தில்

இருத்தல் வேண்டும். ஒருவர் செய்யும் தொழிலோ, ஒருவர் பிறந்த குலமோ, ஒருவரின் ஏழ்மையோ அவருக்கு இழிவை ஏற்படுத்தாது. ஒருவரின் முயற்சி இன்மையே அவருக்கு இழிவை ஏற்படுத்தும். வாழ்க்கையில் முன்னேறிய உலகப் பெரியோர்களின் சரித்திரங்களைப் புரட்டிப் பார்க்கும் பொழுது, அவர்களது வெற்றிக்குப் பின்னணியாக இருந்தவை,அவர்களது உழைப்பும் விடா முயற்சியுமே என்பதை அறியலாம்.

உழைப்பால் உயர்ந்த உத்தமர்களைப் பற்றி, மக்கள் கவிஞர் பட்டுக்கோட்டைக் கல்யாண சுந்தரம் குறிப்பிடும் பொழுது,

வீரத்தலைவன் நெப்போலியனும்

வீடுகட்டும் தொழிலாளி

ரஷ்யா தேசத் தலைவன் மார்சல் ஸ்டாலின்

செருப்புத் தைக்கும் தொழிலாளி

விஞ்ஞான மேதை ஜி.டி.நாயுடு

காரு ஓட்டும் தொழிலாளி

விண்ணொளிக் கதிர் விவரம் கண்ட

சர்.சி.வி. ராமனும் தொழிலாளி

என்று குறிப்பிடுகின்றார். செய்யும் தொழிலே தெய்வம் என்றும்,திறமைதான் நமது செல்வம் என்றும் கையும் காலுமே உதவி என்றும், கொண்ட கடமை தான் நமது பதவி என்றும் உழைப்பவர்கள் வாழ்க்கையில் வெற்றி பெறுவர் என்பதுவும் பட்டுக்கோட்டையார் கருத்தாகும்.

பொருள் இல்லையே என்று ஏங்குவதைவிட பொருள் வருவாய்க்குான்ன வழி? என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். டால்ஸ்டாயிடம்ஒருவன் வந்து, "ஐயா! என்னிடம் ஒருகாசு கூட இல்லை" என்று பிச்சை கேட்டானாம். அதற்கு, டால்ஸ்டாய், உண்மையாகவா? என்றார். "ஆமாம்" என்றான் அவன். உடனே, டால்ஸ்டாய், உன் கண்களை இருபதாயிரம் ரூபாய்க்குத் தருவாயா? என்றார். "மாட்டேன்" என்றான் அவன். "சரி உன் கைகளையாவது,பத்தாயிரம் ரூபாய்க்குத் தா" என்றார். அதற்கும் அவன் சம்மதிக்கவில்லை. "என் நண்பர் ஒருவர் மனிதனின் உடலைக் கொண்டு மருந்துப் பொருளைத் தயாரிக்கிறார் உனது உடலுக்கு ஒரு லட்சம் தருவார். உனக்கு இல்லாவிட்டாலும், உன் குடும்பத்திற்கு இந்தப் பணம் கிடைக்கும்" என்றார் டால்ஸ்டாய். அதற்கும்அவன் மறுத்தான்.

"பல லட்சம் பெறுமானமுள்ள உடலைத்தர மறுத்துக்கொண்டுஎன்னிடம் பணம் இல்லை என்கிறாயே; இந்தக் கண்கள், கைகள், கால்கள் என்றும் குறையாத பொக்கிசம். இதைக் கொண்டு உழை. தங்கம், வெள்ளி மட்டுமில்லை சூரியனும், சந்திரனும் கூட உன்னுடையதாகிவிடும்" என்று அறிவுரை கூறி அவனை அனுப்பினார் டால்ஸ்டாய்.

டால்ஸ்டாயின் வாழ்க்கை நிகழ்ச்சியிலிருந்து ஓர் உண்மையுலப்படுகிறது. "முயற்சியுடன் உழைத்தால் உள்ளதைக் கொண்டு உயர முடியும்" என்பதே அவ்வுண்மையாகும்.

## வள்ளுவர் வலியுறுத்தும் மனத்திட்டம்

ஆள்வினையுடைமை, ஊக்கம் உடைமை, மடியின்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினை செயல்வகை முதலிய அதிகாரங்களில் திருவள்ளுவர் மனித மனத்திற்கு இருக்க வேண்டிய உறுதியைப்புலப்படுத்துகின்றார். மனிதனின் வாழ்க்கை முன்னேற்றத்திற்கு எச்செயலையும் நம்மால் செய்யமுடியும் என்று நினைக்கும் அவனது மனஉறுதியே அடிப்படைக் காரணமாக அமைகின்றது. ஒரு செயலைக் செய்வதற்கு ஏற்ற உறுதி என்று சொல்லப்படுவது, அச்செயலைச் செய்பவனுக்கு உள்ள மனஉறுதியேயாகும். அதைத்தவிர, மற்றவையெல்லாம் அவ்வளவு சிறந்தன ஆகா என்னும் கருத்தைக் திருவள்ளுவர்,

"வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்

மற்றைய எல்லாம் பிற" என்று குறிப்பிடுவார்.

வகுப்பில் மிகவும் குறைந்த மதிப்பெண் பெறும் மாணவன், நல்ல மதிப்பெண் பெறவேண்டும் என்ற உறுதியை மனத்தில் ஏற்படுத்திக்கொண்டு ஒவ்வொரு நாளும் முயன்று படிப்பானேயானால், மாநில அளவில் அவன் முதல் மதிப்பெண் பெறுவதற்குரிய வாய்ப்பும் உருவாகலாம்.

திருவள்ளவரும், "ஒரு பொருளை அடைய எண்ணியவர், அதனை அடைவதற்கு உரிய செயலில் வலிமையுடையவராகப் பெற்றால். எண்ணப்பட்ட பொருளை எண்ணியபடியே அடைவர்" என்னும்கருத்தினை,

"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்

திண்ணிய ராகப்பெறின்" என்று குறிப்பிடுவார்.

ஏழைக்குடும்பத்தில் பிறந்து விட்டோமே என்று எப்படி ஒருவர்வருந்துதல் கூடாதோ, அதைப்போன்றே உறுப்புக்குறை உடையவராய், ஊனமாய் பிறந்து விட்டோமே என்றும் ஒருவர் வருத்தம் அடையக்கூடாது. உடல் ஊனமாய் இருக்கலாம், ஆனால் உள்ளம் ஊனமாய் இருத்தல் கூடாது. இரண்டு கண்களையும் இழந்த ஹெலன் கெல்லர் உலகப்புகழ் பெற்ற செய்தி இங்கு நினைவுகூரத் தக்கதாகும். எனவே ஒரு மனிதனுக்கு உடற்குறை என்பது குறைபாடு உடையது அன்று, அவன் முயன்று தொழில் செய்யாமல் இருப்பதே உண்மையான குறைபாடாகும். உடற்குறை உடையவர்களின் மன ஊக்கத்திற்காகவே எழுதியதைப் போன்று திருவள்ளுவரும்

"பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து

ஆள்வினை இன்மை பழி" என்று வலியுறுத்திக் கூறுவார்.

## வெற்றியின் நுழைவாயில்

ஒருவன் எண்ணுகின்ற நல்ல எண்ணமே வெற்றிக்கு நுழைவாயிலாக அமைகின்றது. எனவேதான் திருவள்ளுவரும் "மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம்' என்று சுட்டிக்காட்டுவார். "நினைவு நல்லது வேண்டும் நெருங்கின பொருள் கைப்பட வேண்டும்" என்பது பாரதியாரின் வாக்காகும்.

'நெருங்கின பொருள் கைப்பட வேண்டும்" என்று மனத்தில்உறுதியை ஏற்படுத்திக் கொண்டு, காட்டிலும். மேட்டிலும் இரவிலும் பகலிலும், வெய்யிலிலும், மழையிலும் அலைந்து தமிழ் இலக்கியத்தைச் சேகரித்தவர் தமிழ்த்தாத்தா உ.வே.சா. அவர்கள், உ.வே.சா.அவர்களின் மனநலத்திற்கும், மனஉறுதிக்கும், இடைவிடா முயற்சிக்கும் தமிழ் உலகம் என்றும் தலை வணங்கும்.

இம்மென்றால் சிறைவாசம், ஏனென்றால் வனவாசம் என்ற நிலையில் ஆங்கிலேயன் இந்தியாவை அடிமைப்படுத்தி ஆண்டு கொண்டிருந்தான். ஆங்கிலேயனுக்கு நிகராகத் தாமும் கப்பல்போக்குவரத்தை உருவாக்க வேண்டும் என்று நினைத்த செக்கிழுத்த செம்மல் வ.உ.சிதம்பரனார் அவருடைய நினைப்பை நிறைவேற்றிய பாங்கை நாடு நன்கு அறியும்.

'கணிதமேதை' என்று உலகோரால் போற்றப்படும்இராமாநுஜம் அவர்கள் ஏழ்மையில் பிறந்தாலும், அவரது உயர்வுக்கும் புகழுக்கும் காரணம் அவருடைய தூய்மையான உள்ளமும், மன உறுதியும். இடைவிடா உழைப்புமே என்பதை யாரும் மறுக்க முடியாது.

மனித மனம் தூய்மையானால், அவனுடைய வாழ்வும் தூய்மை உடையதாகி, வெற்றியையும் அடைகின்றது. மனம் செம்மையானால் எல்லாம் செம்மையாகும் என்பதை, அகத்தியர் தம்முடைய ஞானக்கோர்வையில்,

'மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டாம்
மனமது செம்மையானால் வாயுவை உயர்த்த வேண்டாம்
மனமது செம்மையானால் வாசியை நிறுத்த வேண்டாம்
மனமது செம்மையானால் மந்திரம் செம்மை யாமே"

என்று அறிவுறுத்துவார். எனவே மனத்துக்கண் மாசு இல்லாதிருப்பதை வெற்றிக்கு முதற்படி எனலாம்.

## முடிவுரை

மேற்குறிப்பிட்ட செய்திகளை ஒருசேர எண்ணிப்பார்க்கும்பொழுது, மனித வாழ்க்கையை; உண்மை, உறுதி, உழைப்பு,ஒழுக்கம், நம்பிக்கை என்னும் பஞ்சசீலக் கொள்கைகளே உயர்த்தும் என்னும் உண்மையை உணரலாம்.

# 51. கபிலரின் புலமைத் திறன்

முனைவர் நெல்லை. ந.சொக்கலிங்கம்,
தமிழ்ப் பேராசிரியர்
தொலைநிலைக் கல்வி இயக்கம், ம.சு.பல்கலைக்கழகம்

## முன்னுரை

"உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன்"

என்று நக்கீரர் கபிலரைப் புகழ்ந்து போற்றுவார், நப்பசலையாரோ, "பொய்யா நாவிற் கபிலர்" என்று விதந்து கூறுவார். இத்தகைய சிறப்புகளுக்கு உரிய கபிலரின் ஐங்குறுநூற்றுப் பாடல்களின்அடிப்படையில் அவர் புலமைத் திறத்தை நோக்கும் பாங்கில் இக்கட்டுரை அமைகின்றது.

## புலமையின் ஆழ, அகலம்

பத்துப்பாட்டிலும் எட்டுத் தொகையிலும் இவர் பாடியுள்ள (அகம், புறம்) பாடல்கள் 235 என்ப. இவற்றுள் ஐங்குறுநூற்றுள் வரும் நூறு பாடல்களும் அமையும். 'அன்னாய் வாழிப் பத்துத்' தொடங்கி 'மஞ்ஞைப் பத்து' ஈறாகப் பத்துப் பத்து விதம் நூறு பாடல்களை இவர் படைத்துள்ளார். "கபிலர் பாடிய பாட்டுக்கள் பலவற்றுள் குறிஞ்சித் திணைப் பாட்டுக்களே பெரும்பாலன. வேறு சிலவும் குறிஞ்சியைச் சார்ந்தனவாகவே இருந்தலால் இவரைக் குறிஞ்சிப்புலவர் என்பது தவறாகாது. குறிஞ்சிக் காட்சிகளில் இவர் பேரீடுபாடு உடையவராதலால், அவ்வப்போது கண்ட காட்சிகளைத் தாம் பாடும் பாட்டுக்களில் சொல்லோவியம் செய்து நம்மை இன்புறுத்துகின்றார்" (ஐங்குறுநூறு, ஔவை சு.துரைசாமிப் பிள்ளை வரை, ப.473) எனக் கூறுவது இவண் வேண்டத்தக்க குறிப்பாகும்.

கபிலர் குறிஞ்சித்திணைக்குரிய முதல், கரு, உரிப் பொருள்களையும், உள்ளுறை, கற்பனை, உவமை போன்ற இலக்கிய உத்திகளையும்அளவில் சிறிய ஐங்குறுநூற்றுப் பாக்களில் பயன்படுத்தியுள்ளார். இவை இவர்தம் புலமையின் ஆழத்தையும் அகலத்தையும் காட்டுகின்றன.

## குறிஞ்சிக் கருப்பொருள் கூறல்

'தெய்வே உணர்வே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகை இ
அவ்வகை பிறவும் கருவென மொழி" (தொல். அகத்.20)

என்னும் தொல்காப்பிய விளக்கத்திற்கு ஏற்பக் கபிலர் தம்முடைய குறிஞ்சித்திணைப் பாடல்களைப் பாடியுள்ளார்.

"குன்றக் குறவன் கடவுட்பேணி

இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்" (குன்றக்குரவன்.7)

என்ற அடிகள் வழி மலையுறை கடவுள் முருகன் கூறப்பட்டுள்ளான்.ஐவன நெல்தினை பற்றிய குறிப்புப் பலபாடல்களில் பயின்று வரக் காண்கின்றோம். "விளைந்த செறு" (ஐங்.269), "சாரற் புனந்த பெருங்குரல் சிறுதினை" (ஐங்.270), "சிறுதினை மேய்ந்த தறுகட் பன்றி" (ஐங்.262) போன்ற சான்றுகள் வழி உணவுப் பொருள்களை அறிய "வார்கோட்டு வயத்தகர்" (238), "புன்றலை மந்தி" (273), "பூவரிக் குருளை" (265), "மைப்புறச் சிறுகிளி" (283) "பூவரிக் குருளை" (265) "மைப்புறச் சிறுகிளி" (283) "பொறிவரிச் சிறைய வண்டின மொய்ப்ப" (240) என்பரும் தொடர்களின்•வழி மா, மரம், புள் போன்ற கருப்பொருள்கள் மொழியப்பட்டன;

"யாங்கெனப் படுவது நும்மூர்" (237)

"அன்னாய் வாழிவேண் டன்னைநும் படப்பை" (210)

"அகங்கண் கருவி" (220), "ஒவ்வென இழிதரும் கருவி" (233)

எனவும் வருவன ஊர், சுனை என்னும் கருப்பொருள்களின் பதிவைச் சுட்டுவன, வெறியாடல், தினைப்புனங்காத்தல், கிழங்கு அகழ்தல் இனைய குறிஞ்சித்திணை மக்கள் தம் தொழில்கள் கபிலர்தம் பாடல்களில் கூறப்பட்டுள்ளன.

## உவமைச் சிறப்பு

புலி ஒன்று யானையை நழுவ விட்டுவிட்டது. அதனால் ஏற்பட்ட சினத்தைக் கபிலர் முழங்கிய மேகம் போன்று விளங்கிற்று என்றுஉவமை வழியே சுட்டுவார்.

"களிறுகோட் பிழைத்த கதஞ்சிறந் தெழுபுலி

எழுதரு மழையிற் குழுமும்" (218)

என்பதே அவ்வுவமை. தினை விளைந்து முற்றியுள்ளது. பொன்னிறமாகத் தோன்றும் தினையைக் காட்டுப்பன்றி தின்றது. தினையைப் பொன்னாகவும் பொன்னின் உரைகல்லாகக் கருநிறக்கேழலும் தோன்றுகின்றன புலவருக்கு.

"நன்பொன் அன்ன புனிறுதீர் ஏனல்

கட்டளை அன்ன கேழல் மாந்தும்" (263)

என்பது கபிலரின் உவமை. மந்தி ஒன்று அவரையை நிறையஅருந்திற்று; அதனால் அதன் வயிறு மிகவும் பருத்தது. இதனைக்கூறவந்த கபிலர் வணிகர்கள் கையில் வைத்துள்ள பை போலத் தோன்றும் என்கின்றார்.

"அவரை யருந்த மந்தி பகர்வர்

பக்கிற் றோன்றும்" (271)

இவ்வாறு நன்கு புலப்படும் உவமைகளையும் அன்றாட வாழ்வியல் நிலைகளில் அமையும் உவமைகளையும் கபிலர் வழங்கும் நுட்பம்புலனாகிறது.

## உள்ளுறை கூறிய பாங்கு

கருப்பொருள் அடிப்படையில் இணையான பொருள் தோன்றும்வண்ணம் புலவர்கள் படைப்பனவே உள்ளுறை. கபிலர் கூறும் உள்ளுறை ஒன்றை இங்கே காண்போம்.

"கருவிரல் மந்திக்கல்லா வன்பறழ்

அருவரைத் தீந்தேன் எடுப்பிஅயலது

உருகெழு நெருஞ்சினை பாயும் நாடன் ..." (272)

இது தலைவி கூற்றாக வரும் பாடல். " அவர் நாட்டில் தேன் இறாலைக் குரங்கின் குட்டி தேன் உண்ணும் விருப்பத்துடன் கிளர்ந்தது; உடனே தேனீக்கள் வெளிக்கிளம்பின. இதனால்வெருவிய குட்டி, பயந்து பக்கத்து மலைக்குப் பாய்ந்து ஓடியதாம்" என்பது பொருள். இது வருணனை ஆனால் இதன்கண் வரும் வருணனை வருமாறு: குரங்குக்குட்டி தேன் உண்ண இறாலை கிளர்ந்தது போன்று, தலைவி மாட்டு இன்பம் நுகரக் கருதி வந்ததலைவன், காதல் உணர்வை அவள் மாட்டு எழுப்பினான். தேனீக்களுக்கு அஞ்சிய குரங்கின் பார்ப்பு ஒதுங்கியது போல நம் சுற்றத்தார் பலரும் உணர்ந்தற்குத் தலைவன் அஞ்சினான் என்பது உள்ளுறை. முடிவான இலக்கிய இன்பத்தை ஊட்டும் உயர்நோக்கில் கபிலர் உள்ளுறை அமைந்துள்ள பெற்றிக்கு இஃது ஒரு சான்று.

## கவிதை நயம்

கற்பனை, வருணனை, காட்சி அமைப்பு இவற்றின் வழியே புலவர்கள் கவிதைச் சுவையை மிகுவிப்பர். அவ்வகையில் கபிலர் தினைப் புனக் காட்சியைச் சொல்லோவியமாக்கித் தம் கவிதையை நயம் உடையதாக்குகின்றார். தோழி தலைவனை நோக்கி உரைப்பதாக வரும் பாடல்.

"கொடிச்சி இன்குரல் கிளிசெத்து அடுக்கத்துப்

பைங்குரல் ஏனல் படர்தரும் கிளியெனக்

காவலும் கடியுநர் போல்வர்

மால்வரை நாட! வரைந்தனை கொள்மோ" (289)

தினைப்புனம் காக்கச் சென்றதனால் தலைவனுடன் சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. ஆனால் இப்போது தலைவியின் பெற்றோர் தினைப்புனக் காவலுக்கு அவளை அனுப்பவில்லை; எனவே தலைவா!விரைந்து நீ திருமணம் செய்து கொள்

என்று தோழி கூறினாள். ஏன் தினைப்புனக்காவலைத் தலைவியின் பெற்றோர் நிறுத்திவிட்டனர் என்பதற்குக் கபிலர் தோழி மூலம் கூறும் காரணம் நயம்பட அமைந்துள்ளது. அது வருமாறு, பரணில் இருந்து தலைவி கிளியைவிரட்டினாள். அவள்தன் கிளி மொழி கேட்ட கிளிகள் இவளுடைய குரலையும் கிளியோசை என்று கருதி முற்றிய தினைப் புனத்திற்கு பாய்ந்தன. கிளிகள் தினையை வீணாக்கியமையைக் கருதிய தலைவியின் பெற்றோர் தினைப்புனம் காவல் செய்யவேண்டாம் என்று கூறி விட்டனர், “என்றாள் தோழி இவ்வாறு கவிதை நயம் தோன்றுமாறு இப்பாடலைக் கபிலர் அமைத்துள்ள திறம் வியந்து போற்றுமாறுள்ளது.

மலையில் வாழ்கின்ற பெண் பன்றியைப் புலி ஒன்று கொன்றுவிட்டது. அப்பன்றி ஈன்ற பன்றிக் குட்டிகளை ஆண் பன்றி பாதுகாக்கின்றது.அப்படிப்பட்ட குன்றினைச் சார்ந்த நாடன் எம்மை மறந்து மைந்தனுடன் என்னையும் நீத்து ஒழிந்தான்; அவன் பொருட்டு நீவிர் வாயில் வேண்டுவது என்ன நியாயமோ? என்று பரத்தையிடத்தானாகத் தலைமகன் விடுத்த வாயில் மாக்களுக்குத் தலைமகள் சொல்லியதாக வரும் பாடல் இது.

“புலிகொல் பெண்பாற் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பிற் கேழல் புரக்கும்
குன்றுகெழு நாடன் மறந்தனன்
பொன்பேற் புதல்வனோடு தோனே” (265)

இப்பாடலின் ஈற்றடியின் மூலம் அவளுக்குக் குழந்தையின் பால்ஏற்பட்ட அன்பும், தலைவனுக்கு அஃது நீங்கியமையும் பெறப்படும்.இல்வாழ்வின் பிடிப்பே மகப்பேறு தான்.

“தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்” (புறம்.9)

என்னும் சிறந்த தொடர் இங்கே ஒப்பு நோக்கத்தகும். மறந்திலன் ஆனால் நீத்துச் சென்றுள்ள குறிப்பு இவண் நினையத்தகும்.பிரிவால் தலைவிக்கு ஏற்பட்ட வருத்தத்தையும் அவன் பொருட்படுத்தவில்லை என்பது குறிப்பால் சுட்டப்பட்டது.

## முடிவுரை

கபிலர் குறிஞ்சித்திணை பாடுவதில் வல்லவர் என்பதை உறுதிப்படுத்தும் வகையில் இவருடைய ஐங்குறு நூற்றுப் பாடல்கள் விளங்குகின்றன. இலக்கிய நயம் தோன்றவும் நடைமுறை வாழ்வியல் கூறுகள் பொருத்தவும் பாடல்கள் புனைவதில் கபிலர் வல்லவர் என்பதும் பெறப்படும்.

# 52. தொனிக்கோட்பாடும் இந்தியக்கலையில் அதன் தாக்கமும்

*முனைவர் கு.சேதுராமன்*

*சு.கண்ணன்*

கலைவரலாற்றுத்துறை, ம. கா. பல்கலைக்கழகம்

## முன்னுரை

தொனி என்பது குறிப்பால் உணர்த்துதல் (suggestion) என்று பொருள்படும். இது முருகியல் கோட்பாடுகளில், இரசக்கோட்பாட்டுக்கு அடுத்தப்படியான முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளது.இந்தியக் கவிதைகளில் தொனியானது ஒரு சிறந்த அணியாகக் கருதப்படுகின்றது. தொனிகாரர், ஆனந்தவர்த்தனர் மற்றும் அபிநவகுப்தர் போன்ற தொனிக் கோட்பாட்டாளர்கள் கவிதைகளில் தொனி அல்லது குறிப்பால் உணர்த்தும் பாங்கு எத்தகைய சிறப்பிடத்தைப் பெறுகின்றது என்பதை விளக்கியுள்ளனர். ஆனந்தவர்த்தனர் தொனியலோகம் என்னும் தனது நூலில் ஒவ்வொரு சொல்லும் நேரடியான பொருளைத் தரவேண்டியது அவசியம் எனினும் தேவைப்படும் நேரத்தில், தேவைப்படும் இடத்தில் கவிஞனானவன் தனது கருத்தை குறிப்பால் உணர்த்துகின்றான்; அதுவே தொனியாகும் என்கின்றார். நேரடியாகக்கூறப்படும் பொருளைவிட குறிப்பால் உணர்த்துதலே சிறந்ததூன்றும் அவர் கருதுகின்றார்[1]. குறிப்பால் ஒரு பொருளை உணர்த்துதலே கவிதையின் அல்லது நுண்கலைகளின் உயிராகும் என்று அபிநவகுப்தா குறிப்பிட்டுள்ளார். தொனியோடுஒப்பிடும்போது, ஆபரணங்களும் அலங்காரங்களும், கவிதைக்கோ அல்லது கலைக்கோ, இரண்டாந்தர அலங்கார வேலைப்பாடுகளாகவே கருதப்பெறுகின்றன என்ற கருத்தும் பரவலாகக் காணப்படுகின்றது. காவ்யப் பிரகாசம் என்ற நூலைஎழுதிய மம்மதா தொனிக்கோட்பாட்டை விரிவாக விளக்கியுள்ளார். அவர்தம் கருத்துப்படி ஒவ்வொரு சொல்லும் மூன்று இயல்புகளைக் கொண்டுள்ளன. அதாவது, விளக்கும் தன்மை (expressive) சுட்டிக்காட்டும் தன்மை (indicative) மற்றும் குறிப்புணர்த்தும்தன்மை (suggestive) ஆகியவையாகும்[2]. ஒரு கவிதையில் நேரடிப் பொருளைவிட குறிப்புணர்தல் காணப்படின் அக்கவிதையின் தரமேஉயர்ந்து விடுகின்றது என்று தொனிக்கோட்பாடுக்குழுவினர் கருதுகின்றனர்[3].

இவ்வகைச் சிறப்புடைய தொனிக்கோட்பாடு கட்புலக்கலையிலும் (visual arts) பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. இங்கு குறிப்புணர்த்துதல் தான், விளக்கும் தன்மை மற்றும் சுட்டிக்காட்டும் தன்மை ஆகியவற்றை விட, சிறப்பான இடத்தினைப் பெறுகின்றது. ஏனெனில் இதுவே (தொனி) கலைஞனின் உள்ளுணர்வை வெளிப்படுத்துகின்றது. ஒரு கட்புலக்கலைச் சின்னத்தின்

நேர்த்தியானது அதனில் காட்டப்படும் குறிப்புணர் பொருளில் தான் அமையமுடியும் என்று தொனிக் கோட்பாட்டாளர்கள் நம்புகின்றனர். கட்புலக்கலையின் மூலம் தெரியப்படுத்தப்படுகின்ற செய்தித் தொடர்பு குறிப்புணர்த்துதல் மூலம் கிடைக்குமேயாயின் அதனை முருகியல் (aesthetics) கூறு என்கின்றோம். நேரடியாகச் சுட்டப்படும் பொருளில் முருகியல் தன்மையைக் காணமுடியாது. கவிதைகளில் சொல்லப்படும் செய்திகளுக்கு வடிவம் கொடுப்பவை கட்புலக்கலைகளாகும். இந்தியச் சிற்பங்களும் ஓவியங்களும் காண்போருக்கும் விமர்சகர்களுக்கும் குறிப்புணர் செய்திகளைத்தரவல்லனவாக இருப்பதைக் காணமுடிகின்றது. கலையின் உன்னதநிலைக்கு இன்றியமையாக் கூறுகளில் ஒன்று தொனி அல்லது குறிப்புணர்த்துதல் என்ற கருத்தினை விஷ்ணுதர்மோத்திரபுராணம் வலியுறுத்துகின்றது. இந்நூல் குறிப்பிடுவதாவது, மலர்ந்த தாமரையைக் காட்டுதல், ரிஷிகள் குளிப்பதற்காகச் செல்வதைக் காட்டுதல் போன்றவை கதிரவன் உதயத்தைக் குறிப்பதும்,திருடர்கள் ஓடுவது, நாட்டியப் பெண்கள் அரங்கத்திற்குச் செல்வது போன்றவற்றைக் காட்டுதல் இரவினைக் குறிப்பதும், மேகக் கூட்டங்களையும், நாரைகள் வானத்தில் பறப்பதையும் காட்டுவது மழைக்காலத்தையும் குறிப்பதெனவும் ஆகும்[4].

## சிற்பங்கள்

துவக்ககால இந்தியச் சிற்பங்களில் குறிப்புணர் பொருள் தருபவை பௌத்த சிற்பங்களாகும். இவற்றில் மௌரியக் கால நகரங்களும், வீடுகளில் மாடி முகப்புக்களும், ஜன்னல்களும் கொண்ட தெருக்களும் காட்டப்பட்டுள்ளன. இங்கு தெருக்களில் மக்கள் நடப்பது, குதிரையோட்டுவது, வீட்டு ஜன்னல்கள் வழியாகவும், மாடி முகப்புக்கள் வழியாகவும் வெளியில் எட்டிப் பார்ப்பதுபோன்றவை உணர்த்தப்படுகின்றன[5]. பார்ஹுத்தில் உள்ள மற்றொரு சிற்பத்தொகுதியில் சபைக்கூட்டம் ஒன்று நடைபெறும் காட்சியும், வீட்டு முற்றம் மற்றும் ஜன்னல்களிலிருந்து இக்கூட்டத்தை மக்கள் பார்வையிட்டுக் கொண்டிருக்கும் காட்சி யும் சிறந்த குறிப்புணர்கலைப் பொருளாகக் காட்டப்பட்டுள்ளது[6] இதே இடத்தில் உள்ள மற்றொரு காட்சியில் போதிமரமே புத்தரென குறிப்புணர்த்தப்பட்டுள்ளது. இங்கு மரத்தின் இருமருங்கிலும் விண்ணுலக அணங்குகள் காட்டப்பட்டுள்ளனர். இவர்கள் பொதுவாக இறையுருவங்களின் இருமருங்கிலுமே காட்டப்படுவர். அமராவதி (ஆந்திரா) ஸ்தூபத்தில் (கி.பி.2ஆம் நூற்றாண்டு) உள்ள பலகை ஒன்றில் ஒரு ஸ்தூபமே புத்தரெனச் சித்தரிக்கப்பட்டுள்ளது. இங்கும் ஸ்தூபத்தின் இருமருங்கிலும், உச்சியில் இரு விண்ணுலக அணங்குகள் உள்ளன[7] மதுராவுக்கருகில் புதேசர் என்ற இடத்தில் கிடைத்துள்ள, குஷாணர் காலத்து (கி.பி.2 ஆம் நூற்றாண்டு) இயக்கிஉருவம் ஒன்றில், அப்பெண் பச்சை மாங்கனிக் கொத்தொன்றினைக் கையில் வைத்திருப்பது காட்டப்பட்டிருக்கின்றது. இங்கு இதுமணமையைக் குறிக்கின்றது. இது முற்றிலும் கவிதைப் பண்பாகும். இதே இடத்தில் உள்ள மற்றொரு இயக்கி

தன் அன்பிற்கினிய கிளியுடன் பேசுவது போல் காட்டப்பட்டுள்ளதால், அவளது முகத்தில் புன்னகை பூத்துக் குலுங்குகின்றது. அப்பெண் தனதுகாதலரைப் பற்றி கிளியுடன் பேசுகின்றாளோ என்று எண்ணத் தோன்றுகின்றது. கிருத்துவ சகாப்தத்திற்கு முந்திய காலத்தில்தோன்றிய இம்மரபு 9 – 10 ஆம் நூற்றாண்டுகள் வரை தொடர்ந்து வழக்கிலி ருந்திருக்கக்கூடும். ஆண்டாளும், மீனாட்சியும் தங்கள் கரங்களில் கிளி வைத்துள்ளது போல் சிற்பங்கள் காட்டப்பட்டுள்ளன. இரண்டு தெய்வீகக் காதலர்களுக்கிடையிலான தூதுவனாக கிளிகாட்டப்படுவது வழக்கமாயிருந்திருக்கின்றது. குப்தர் காலத்தில்கட்டப்பட்ட தியோகாரில் உள்ள தசாவதாரக் கோயில் சிற்பங்களில், குறிப்பாக அனந்தசாயி சிற்பத்தொகுதியில், இறைவனின் ஆயுதங்கள் மனித உருவில் காட்டப்பட்டுள்ளன.

மத்திய கால இந்திய சிற்பங்கள் பல குறிப்புணர் இயல்பினைக் கொண்டுள்ளன. மாமல்லபுரத்தில் உள்ள மிகப்பெரிய சிற்பத்தொகுதி 'கிர்தார்ஜீனியம்' என அழைக்கப்படுகின்றது. உலகிலேயே மிகப்பெரும் சிற்பத்தொகுதியான இதனில் இருபாறைகளுக்கும் நடுவில் காட்டப்பட்டுள்ள பிளவானது கங்கை கீழிறங்கி வருவதைக் குறிப்பது போல் உள்ளது. இங்கு நீரினைக் குறிக்க பாதாள லோகத்து நாக கன்னிகள் காட்டப்பட்டுள்ளனர்.இந்த மொத்த சிற்பத் தொகுதியுமே மூவுலகையும் குறிப்பால் உணர்த்தவதாக அமைந்துள்ளது. மேற்பரப்பில் விண்ணுலகத்தினரும், நடுப்பரப்பில் மண்ணுலக நிகழ்ச்சிகளும், கீழ்ப்பரப்பில் நீர்நிலையும் (nether world) காண முடிகின்றது. மாமல்லபுரத்து மகிஷமர்த்தினி சிற்பத் தொகுதியில் இயக்கநிலையும் (dynamism) அச்சிற்பத்தொகுதிக்கு நேர் எதிரில் இயக்கமற்ற (static)சயன நிலை விஷ்ணுவும் காண்போரைக் கவர்கின்றன. நாமக்கல்லிலும், மதுரைக்கருகே உள்ள யானைக்கல்லிலும் விஷ்ணு யோக நரசிம்மராக வீற்றிருப்பது புயலுக்குப் பின்னே அமைதி என்னும் கருத்தைச் சுட்டுவதாக இருக்கலாம். உக்ரநிலையில் ஹிரன்யனை வதைத்த நரசிம்மர் தம்பணி முடிந்ததும் இளைப்பாறுதல் பொருட்டு யோகநிலைக்கு சென்று விடுகின்றார். நாமக்கல் திருவிக்கிரமர்சிற்பத் தொகுதியில் குதிரை காட்டப்பட்டிருப்பது, மாபலி மன்னன் அஸ்வமேத யாகம் செய்து மன்னர் பலரைத் தன் கட்டுப்பாட்டில் கொண்டு வந்ததை உணர்த்துவதாக உள்ளது. கடினமான பாறையிலும் நீரியற்திறனை காட்டமுடியும் என்பதை உணர்த்தும் வகையில், பூவராஹர் நீரிலிருந்து வெளி வருவது போன்று புள்ளமங்கை சிறு சிற்பங்களிலும், நாமக்கல் சிற்பத் தொகுதியிலும், மற்றும் கழுகுமலை வெட்டுவான் கோயிலில் பெண் குளிப்பதை ஒருவன்எட்டிப் பார்ப்பது போன்றும் சித்தரிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். கழுகுமலையில் பெண் குளிப்பதை நேரடியாகக் காட்டாது அவளது கால்கள் நீரில் மூழ்கியிருப்பதன் மூலமும், அவள் தனது உடைகளைக் களைவதன் மூலமும் உணர்த்தியுள்ளமை குறிப்பிடத்தக்கன.

சில சிற்பத்தொகுதிகளில் கருத்தியல் (abstract) பண்புகள் உருவகப்படுத்துதல் மூலமாக குறிப்புணர் பொருள் காட்டப்பட்டிருப்பதைக் காணலாம்.

உதாரணமாக, சிவபெருமானின் கஜசம்ஹார சிற்பத்தொகுதிகளில், ஆணவம் (ego) யானையாக உருவகப்படுத்தப்பட்டுள்ளதைக் காணலாம். புள்ளமங்கை பிரம்மபுரீஸ்வரர் கோயிலில் உள்ள கண்டச் சிற்பமொன்றில் கஜசம்ஹாரராகக் காட்டப்பட்டுள்ள சிவபெருமானின் கோபாவேசம் அவரது கலைந்த கேசத்தின் மூலம் காட்டப்பட்டுள்ளது. பயத்தினால் பூதகணம்ஒன்று ஓடுவதும், அதே பயத்தால் பார்வதியின் இடுப்பிலிருந்துகுழந்தை சுப்பிரமணியர் தாதியின் கைக்குத் தாவுவதும்,அப்போதைய கொடூர நிலையை உணர்த்துவதாக உள்ளது[8] வாதாபியிலுள்ள குகையில் சாளுக்கிய மன்னர்தம் இலட்சினையாக பூமியை இலகுவாகத் தாங்கி நிற்கும் பூவராஹர் காட்டப்பட்டிருப்பது அம்மன்னன் தான் இவ்வுலகை ஆளும் திறன் படைத்துள்ளதை நமக்குத் தெளிவுபடுத்துவது போல் உணரமுடிகின்றது.

பிந்திய மத்தியகாலச் சிற்பங்களில் கைகூப்பிய நிலையில் உள்ள ஹனுமன் சிற்பங்களை இங்கு உதாரணத்திற்கு எடுத்துக்கொள்ளலாம். மதுரைக்கருகே அழகர் கோயிலில் உள்ள கல்யாண மண்டபத்தில், ஒரு தூணில், ஹனுமன் கைகூப்பி நின்றுள்ளார். அவருக்கு நேர் எதிரே பூவராஹர் இயக்கநிலையில், பூதேவியை பாதாள உலகிலிருந்து மேலே கொண்டு வருதாகக் காட்டப்பட்டுள்ளனர். எப்போதும் ஒரு சிற்பம் வடிக்கும் போது,அதனோடு தொடர்பு கொண்ட சிற்பங்களை அருகிலோ, அல்லதுஇரு மருங்கிலோ அல்லது எதிரிலோ வடிப்பதுமரபாகும். இங்குபூவராஹருக்கும் அவருக்கு எதிரில் அமைக்கப்பட்டுள்ள ஹமனுக்கும் என்ன தொடர்பு? என்று யோசித்தால் நமக்கு ஒருவிடை கிடைக்கின்றது. அதாவது பூமாதேவியை, இறைவா நீ காத்து வந்துவிட்டாய். அடுத்த அவதாரத்திலேனும் அந்த அன்னைக்கும்உனக்கும் சேவை செய்யும் பாக்கியத்தை எனக்குக் கொடு என்றுவணங்கிக் கேட்பதாக அமைந்துள்ளது. இதற்கு விடைதான் இராமாவதாரத்தில் பூதேவி, சீதாப்பிராட்டியாகத் தோன்றியதோ! இங்கு வராஹரை இராமனாகக் காண்கின்றார் ஹனுமன். இங்கு இவ்விரு சிற்பங்களைக் கண்டதும், நமக்கு மூன்று செய்திகள் கண்முன் வருகின்றன. அவையாவன (i) ஹனுமன் சீதையை அசோகவனத்தில்சந்தித்தது (ii) இலங்கையிலிருந்து திரும்ப வந்து இராமனைச் சந்தித்து உடனே (வராஹ அவதாரத்தில் பூதேவியைக் காத்தது போன்று) சீதையை மீட்க ஆவண செய்யுமாறு கேட்டல் (iii) போருக்குப் பின் இராமனும் சீதையும் இணைவது ஆகியவையாகும். இங்கு கூட பூவராஹரின் காலடியில் நீரைக் குறிக்கும் பொருட்டு நாகம் காட்டப்பட்டுள்ளது. மதுரை மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயிலுக்கு முன்புள்ள புது மண்டபத்தின் தூண் ஒன்றில் ஒரு கன்றுக்குட்டி தன் தலையை உயர்த்திக் கொண்டு கிருஷ்ணரின் புல்லாங்குழல் இசையில் இலயித்துக் கொண்டிருப்பதைக் காணலாம். கட்புலக் கலைமூலம் உணர்த்தப்படும் ஓர் உன்னதமான குறிப்புரையென இதனைக் கூறலாம். சேரமாதேவியில் உள்ள இராமசாமி கோயில் மண்டபத்தூண் ஒன்றில் இராமனின் பாதத்தில் ஹனுமன்

முத்தமிடும் காட்சி காண்போரை மெய்சிலிர்க்க வைக்கும்.

## ஓவியங்கள்

சிற்பங்களை விட இந்திய ஓவியங்களில் தொனியின் செல்வாக்கு அதிகமாயிருப்பதைக் காணலாம். ஏனெனில், ஓவியங்களில் வண்ணங்கள் மூலமும், மற்ற இயல்புகள் மூலமும் எளிதாகதொனியுணர்வுகளை விளக்க முடியும். போரில் தோல்வியுற்ற அரசன் ஒருவனது மாளிகைச் சுவரில் வரையப்பட்டுள்ள உருவங்களை உண்மை உருவங்கள் எனக் கருதி, அரசியாரும், அவரது தோழிகளும், அவ்வுருவங்களிடம் மன்னனுக்கு ஆறுதல் சொல்லும்படியும் உணவூட்டும்படியும் கேட்டனர் என்று காவ்யப்பிரகாசம் கூறுகின்றது. இது அவ்வுருவங்களை வரைந்த கலைஞனின் திறனை உணர்த்துகின்றது. பாலவஸ்தேயிலுள்ள, கி.பி.3 – 4 ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த,குஷானர் ஓவியம் ஒன்று புத்தரது விஸ்வரூபத்தை, அதாவது மகாபுருஷர் உருவத்தைக் காட்டுகின்றது. இவ்வுருவத்தில் மேரு மலையும் உடலில் காயங்களோடு வாசுகி பாம்பு நீரில் இருப்பது போன்றும் காட்டப்பட்டுள்ளது. இது தேவர்களும், அசுரர்களும் அமிர்தம் வேண்டி பாற்கடலைக் கடைந்த செய்தியைச் சுட்டுகின்றது. புத்தரின் உடலில் உள்ள தீப்பிழம்புடன் உள்ள தூணின் உச்சியிலும் அடியிலும் உள்ள பாதங்கள் முறையே விஷ்ணுவையும், சூரியனையும் குறிக்கின்றன[10] டுப்ளின் நகரில் செஸ்டர் பீட்டி நூலகத்தில் பாதுகாக்கப்பட்டுவரும் பீஜப்பூரைச் சேர்ந்த முகலாய ஓவியம் (கி.பி.1570) 'வளமை அரியணை' யைக்குறிக்கின்றது. இங்கு வளமை பல அடுக்குகளிலும் காட்டப்பட்டுள்ளது. தென்னை மரங்களும், வாழை மரங்களும், பூச்செடிகளும்,வாணிகத்தைக் குறிக்கும், குதிரை ஓட்டுவதும், யானை சவ்வாரியும் இன்னபிறவும் இங்குள்ள வளமைச் சின்னங்களாகும். இங்கு, மேலடிக்கில் அரசன் ஒருவன் ஒரு குடையின் கீழ் அமர்ந்துள்ளான்.

1830ஆம் ஆண்டு வரையப்பட்ட, சிர்மூரிலுள்ள, இராதா மற்றும் கிருஷ்ணர் ஓவியத்தில் அவர்கள் படுக்கையில் அமர்ந்திருப்பது போல் காட்டப்பட்டுள்ளது. இங்கு, அவர்கள் இரவில் படுக்கையில் அமந்துள்ளனர். என்பதைக் குறிக்க எண்ண விளக்கும் அதன் நிழலும்காட்டப்பட்டிருக்கின்றது. கார்வாலில் உள்ள மற்றொரு ஓவியத்தில் (கி.பி.1800 – 1820) இராதையும் கிருஷ்ணரும் விடியலுக்குப்பின்னும் படுக்கையி லிருந்ததைக் குறிக்கும் பொருட்டு இரவில் விளக்கொன்று அமைத்திருப்பதும், இரவும் முடிந்து அதிகாலை வந்து விட்டது என்பதாக பெண்கள் தோட்டத்தில் பூப்பறிப்பதும் ஆகிய அனைத்தும் குறிப்பால் உணர்த்தப்பட்டுள்ளன.

## முடிவுரை

இவ்வாறு இந்தியச் சிற்பங்களிலும், ஓவியங்களிலும் தொனியின் செல்வாக்கு விச்சியிருப்பதைக் காணலாம். முருகியல் கோட்பாடுகளில் இரசக்கோட்பாட் டைப் போலவே தொனிக் கோட்பாடும் சிறப்பிடம் பெற்றள்ளது.

இது போன்றே மற்ற முருகியல் கோட்பாடுகள் எவ்வகையில் கட்புலக்கலைகளில் தாக்கம் பெற்றுள்ளன என்பதைப் பற்றி விரிவான ஆய்வு செய்வதுஅவசியமாகும்.

1. S.K.De, History of Sanskrit Poetics, pp. 141-3. and Rekha Jhanji, Aesthetic Communicationï 1985, p.15.
2. R.C.Dwivedi, tr. Kavyaprakasa (of Mammata), p.17.
3. A.Sankara, Some Aspects of Literary Criticism in Sanskritï p.66.
4. C.Sivaramamurṭi, Indian Paintings, 1976, p. 3.
5. Satish Grover, The Architecture of India, 1980, Fig.18.
6. Ananda K.Coomarasamy, History of Indian and Indone sian Art, 1972, pl. XII, Figs. 41-43.
7. Ibid, pl. XXXII, Fig. 136.
8. G.Sethuraman, Facets of Indian Art and Culture, 1995, pp.12-18
9. C.Sivaramamurti, op.cit; p.3.
10. Ibid; p.29

# 53. ஈழத்துத் தமிழ் சிறுகதைகளும் விடுதலைப் போராட்டமும்

*மா. கருணாகரன்*

ம.கா.ப.கல்லூரி, மதுரை

ஈழத்துத்தமிழ்ச் சிறுகதைகளில் ஈழத் தமிழர்களின் இன விடுதலைப் போராட்டத்தை மையமாகக்கொண்ட சிறுகதைகள் ஒரு சிலவே எண்பதுகளுக்கு முன்பு வெளிவந்தன. அவையும் தமிழின உணர்வைத் தூண்டும் விதத்தில் அமையாது மனிதநேய உணர்வைத் தூண்டும் நிலையிலேயே எழுதப்பட்டன. அதாவது தேசிய ரீதியிலான சமுதாய அரசியல் இயக்கத்தின் (பிரிவினையற்ற இலங்கை) வெளிப்பாடாகவே இக்கதைகள் இருந்தன. சிங்கள பெரும்பான்மை இன அரசின் இராணுவ நடவடிக்கையானது ஈழத் தமிழர்களை ஆயுதமேந்திப் போராடவேண்டிய சூழலுக்குத் தள்ளப்பட்டதன் விளைவாக எண்பதுகளுக்குப் பின் வெளிவந்த சிறுகதைகள் ஈழத்தமிழர்களின் போராட்டத்தை எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளன. இது ஈழத்தமிழ்ச் சிறுகதைகளில்உருவான புதிய போக்கு என்பதாகும்.

ஈழத்தமிழ் விடுதலைப் போராட்டத்தைக் குறிக்கும் சிறுகதைகள் சிறுகதைத் தொகுதியாகவும், சிற்றிதழ்களின் மூலமாகவும் இரு விதத்தில் வெளிவந்தன. சிறுகதைத் தொகுதிகள் மூலம் ஈழத்தமிழின விடுதலைப் போராட்டம் பற்றி படைக்கப்பட்டதைவிட சிற்றிதழ்களிலே அதிக அளவில் சிறுகதைகள் வெளிவந்தன. அதிலும் புலம்பெயர்ந்த தமிழர்களால் வெளிநாடுகளில் தங்களது அடையாளத்தை நிலை நிறுத்துவதற்காக நடத்தப்பெற்ற சிற்றிதழ்களில் இனவிடுதலைப் போராட்டத்தினைக் கருவாகக் கொண்ட கதைகள் அதிகமாக வெளிவந்தன. சிறுகதைத் தொகுதிகளாக வெளியானவற்றில் சில தொகுதிகளே இனவிடுதலைப் போராட்டத்திற்கு முக்கியத்துவம் தந்துள்ளன. ஈழத்தமிழின விடுதலைப் போராட்டம் காரணமாக ஈழத்தில் முன்னர் மக்கள் இறுக்கமாகக் கடைப்பிடித்து வந்த கட்டுப்பாடுகளும் நெறிகளும் தளர்ந்து தமக்குள் பேதமற்ற நிலையில் நிச்சயமற்ற வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருந்தனர். சிங்கள இராணுவ விமானத்தின் குண்டுவீச்சுக்கு இலக்காகும் ஊர்களில் வாழும் மக்கள் தமது வீடுகளை விட்டு வெளியேறும் தங்களைக் காத்துக் கொள்ளுவதற்காகப் பதுங்குகுழிகளுக்குள் ஓடிஒளியும் வாழ்க்கையே தினமும் நடைமுறையானது. பலதலைமுறைகளாக வாழ்ந்து வரும் வீடுகளை விமானக் குண்டு வீச்சின் காரணமாக இழந்த மக்களின் கண்ணீர், வேதனை விவரிக்கப்பட்டுள்ளது. மேலும் சொந்த வீட்டினை விட்டுப் போக முடியாமலும் உயிரைக் காப்பாற்ற வேண்டியும் அவர்கள் படுகின்றதுயரங்கள், மன உளைச்சல்கள் சிறுகதைகளில் நுணுக்கமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு குடும்பத்திலும் யாராது ஒருவர் இராணுவத்தால் கைது

செய்யப்பபட்டோ, விடுதலை இயக்கத்தில் சேர்ந்தோ, அல்லது இராணுவத்தினரால் சொல்லப்பட்ட சம்பவங்களே தினசரி வாழ்க்கையாகிவிட்ட சூழலில் தினசரி கொலைகள் ஈழத்தமிழ் மக்கள் வாழ்க்கையில்தவிர்க்க வியலாத அம்சமாகி விட்டதால் அவர்களது மனதும் அத்தகைய வாழ்விற்கு ஏற்றபடி மாறிவிட்டதாகவும் படைப்பாளர்கள் சிறுகதைகளில் வெளிப்படுத்தினர்.

தெருவில் சிந்திக்கிடக்கும் இரத்தம், வெடித்த ஷெல் (குண்டு) லின் துண்டுகள், அரைகுறையாக எரிக்கப்பட்ட பிணங்கள், சிங்களஇராணுவத்தின் வான்வெளித் தாக்குதல் முதலியன நடைமுறை வாழ்க்கையாகிப் போன ஈழத்தமிழன விடுதலைப் போராட்டத்தின் சூழலைப் படைப்பாளர்கள் படைத்துள்ளது மக்களுக்கும் படைப்பிற்குமிடைமிலான உறவைப் புலப்ப டுத்துவதாக உள்ளது.

சிங்கன இராணுவ விமானக்குண்டு வீச்சினால் தரைமட்டமாக்கப்பட்ட வீடுகளின் அவலநிலையைப் பல படைப்பாளர்கள் தம்கதைகளில் காட்டியுள்ளனர். பல பரம்பரைகளை உருவாக்கிய தமிழரின் வீடுகள் அழிக்கப்படுவது ஈழத் தமிழர்களை உளவியல் அடிப்படையில் மிகப் பாதிப்புக்குள்ளாக்கும் நிகழ்ச்சியாக அமைகிறது. கதைகளில் சுட்டப்படும் மாந்தர்கள் சொந்த வீடுகளை விட்டு வெளியேற மனமின்றி, குண்டு வீச்சின் போது அருகிலுள்ள பதுங்குகுழி (பங்கர்) களையே நாடுகிறார்கள். இன்னும் சிலர் இறந்தாலும் அவர்கள் வாழ்ந்த வீட்டிற்குள்ளேயே இறப்போம் என்ற உறுதியுடன் வீட்டைவிட்டு வெளியேற மனமின்றி இருக்கின்றனர். இராணுவ விமானத்தின் சப்தம் கேட்டவுடனும்,ஷெல் குண்டுவீச்சின் சப்தத்தைக் கேட்டவுடனும் பகுங்கு குழிகளுக்குள் சென்று அந்த சப்தம் தங்கள் இருப்பிடத்தை நோக்கிவருகிறதா அல்லது எங்கு செல்கிறது என்ற கவனத்துடனும் கவலையுடனும் அவர்கள் நடத்துகின்ற நிலையற்ற வாழ்க்கையைப் படைப்பாளர்கள் அற்புதமாகப் படைத்துள்ளனர். அந்தகொடூரமான வாழ்வை தணிகாசலத்தின் சிறுகதை வரிகள் மூலம் அறியலாம்.

"சிவஞானம் — பொம்மர் வருகுது போல கிடக்குது —கெதியா பங்கருக்கு வாங்கோ" ——

பங்கருக்குள் எரியும் மெழுகுவர்த்தியின் ஒளியிலும் அவர்களது முகங்களிலும் பயத்தின் ரேகைகள் படர்வது தெரிந்தது.

'சிவஞானம் நாங்கள் இப்படி பயந்து பயந்து சாகிறதில்லையடா இதை அநியாயம் என்டு சொல்ல ஒருத்தரும் இல்லாதது தான்ரா ஆகப் பெரிய அநியாயம்'

இவ்வாறு மரணத்தை நிமிடந்தோறும் எதிர்பார்த்து கிடந்து வாழும் வாழ்க்கை ஈழத்தமிழர்களின் வாழ்க்கையைதுன்பமானதாக உணர்த்தியது. மேலும் உடல்நலமில்லாமல் படுத்தபடுக்கையில் கிடக்கும் வயதானவர்களின் நிலை மிகவும் துன்பம் தரக்கூடியதாகவும் அவர்களால் குண்டு வீச்சிலிருந்துதங்கள் உயிரைக் காத்துக் கொள்ள முடியாத நிலையையும்,அவர்களைத் தனியே விட்டு விட்டுச் செல்லமுடியாத உறவினர்களின் உறுத்தல் மனநிலையையும்

தணிகாசலத்தின் சிறுகதையில் மையக் கருத்தாக வெளிப்பட்டுள்ளது. "மூடிய பதுங்கு குழிக்குள் தனது மூட்டு நோயின் காரணமாக செல்ல மறுக்கும் சிவஞானத்தின் வயதான மாமியார் கொட்டிலுக்கருகே அவளுக்கென வெட்டப்பட்ட திறந்த பதுங்கு குழிக்குள்" என்று விவரிக்கப்பட்டுள்ளது. இத்தகைய சூழலில் தங்களது வீடுகளின் மீது விமானங்கள் குண்டுவீசி சிதைத்தநிலையைக் கூறுவது மிகுந்த அவலத்தை ஏற்படுத்தவதாக உள்ளது.சான்றாக.

"ஐயோ பரமானந்தண்ணை உங்கடை வீட்டுக்கே போட்டவங்கள்"

சிவஞானமும் மனைவியும் கத்துகின்றனர்.

பரமானந்தம் அந்த இடத்தில் நின்றே ரோச்லையிற்றை அழுத்துகிறார். வளமையாக முன்வீட்டுச் சுவருடன் நின்றுவிடும் ஒளிப்பொட்டு உடைந்து கிடக்கும் பின்புற மதில்வரை சென்றுபடுகிறது. ஒரு மலை போல உறுதியுடன் நிமிர்ந்து நின்ற அவரது வீடு இருந்த இடம் தெரியாமல் கற்குவியலாகக் காட்சி தருகிறது. பக்கத்து வீடுகளிலும் அழுகையும் ஆரவாரங்களும்கேட்கின்றன. ரோச்லையிற்றை கொட்டில் பக்கம் திருப்புகின்றார். சிவஞானத்தின் ஓலைக்குடிசையும் பிரிந்து அதன் கீற்றுகள் தெருவில் சரிந்து கிடக்கும் மின் கம்பத்தில் தொங்குகின்றது.

'சிவஞானம், உன்றை கொட்டிலையும் காணேல்லை. உன்னர மாமிக்கு என்ன நடந்ததோ?' சிங்கள இராணுவம் தமிழர்கள் பரம்பரையாக வாழ்ந்த வீடுள்ள வியானக்குண்டு வீச்சினால் சிதைத்து ஈழத்தமிழர்களை வீடற்றவர்களாக நிறுத்தியதுடன் மட்டுமல்லாது அவர்களது உயிரோடும் விளையாடத் தொடங்கின. சிங்கள இராணுவத்தைத் தாக்கிய தமிழ்ப் போராளிகளை நேராக நின்று எதிர்க்க முடியாத சிங்கள இராணுவம் சாதாரண பொதுமக்களை ஈவிரக்கமின்றி சுட்டுத்தள்ளும் நிலையும் சிறுகதைகளில் விவரிக்கப்பட்டுள்ளன 'எரிமலை' இதழில் வந்த சாந்தனின் 'சனம்' என்ற சிறுகதையில் இந்நிலை விவரிக்கப்பட்டுள்ளது. சான்றாக இவ்வரிகளைக் கூறலாம்.

"நேற்றிரவு தின்னவேலியிலை நடந்ததுக்குப் பழிவாங்கலாம், இது .... காற்றோடு கதைகள்

சந்தடியில் சிறு கும்பல் நின்றது. நின்றவர்கள், காதுகளையும் கால்களையும் தயாராய் வைத்தபடி நின்றார்கள்.

எப்போது எங்கிருந்து வருவான்களென்று தெரியாத பதகளிப்பு பூட்டியிருந்த கடைகளில் வளர்ந்திருந்த சடலங்கள் — எல்லாம்இளந்தாரிகள் — பள்ளிக்குப் போன பொடியன்களும் — கடவுளே!

இடது கன்னமேட்டில் துவாரம் தெளிவாய்த் தெரிய மல்லாந்து கிடந்த முகமொன்று —

சிங்கள இராணுவத்தினரின் தாக்குதலால் கொலையுண்டு கிடக்கும் தமிழர்களில் அவல வாழ்க்கையைச் சித்தரிப்பதற்கு சிறுகதைவடிவம் சிறந்த முறையில் பயன்பட்டுள்ளது.

சிங்கள இராணுவத்தால் நடத்தப்படுகின்ற கொடூரமான தாக்குதலால் ஏற்படும் உயிர்ப்பலிகளும் பயங்கரமான சொத்து இழப்புக்களும் அன்றாட நிகழ்ச்சிகளாக மக்கள் உணரத் தொடங்கியதையும் இது தவிர்க்க முடியாதது என்ற மனவுறுதியையும் தெரிவிக்கும் வகையில் படைப்புக்கள் வெளிவரத் தொடங்கியது கருத்தியல் ரீதியில் ஏற்பட்ட குறிப்பிடத்தக்க மாற்றமாகும்.

தெருவோரங்களில் சிந்தப்படும் இரத்தமும், தெருக்களிலும்வீடுகளிலும் கடைகளிலும் விழுகின்ற பிணங்களும் கூட பெரிய அளவில்மக்கள் மனதைப் பாதிக்கவில்லை. இவையெல்லாம் தவிர்க்க முடியாதவையாக வாழ்வோடு இணைந்து விட்டதாகக் கருதி அந்தஇரத்தச் சுவடுகளையே மிதித்துக்கொண்டு எந்த உணர்வும் இல்லாமல் தமது வாழ்க்கைத் தேவைகளுக்காக ஓடும் மனப்பக்குவம் எல்லோருக்கும் வந்துவிட்டதாக படைப்புக்களில் சுட்டிக் காட்டினார். சான்றாக தணிகாசலத்தின் சிறுகதையில் இடம்பெறும் இந்நிகழ்ச்சியைக் கூறலாம்.

"அன்று காலையிலும் குண்டு வீச்சு விமானங்கள் வந்து வட்டமிட்டுக் குண்டுகளை வீசிவிட்டுச் சென்றன. பங்கருக்குள் பாதுகாப்புக்காகச் சென்றுவிட்டு வந்த அவர் எங்கே குண்டு விழ்ந்தது என்பதைவிசாரிப்பதற்காக கேற்றடிப்பக்கம் சென்றார். சயிக்களில்வந்த அவரது கவனத்தை ஊதுவத்தியை கட்டாகக் கொழுத்தி கையிற் பிடித்தபடி தெருவால் வந்த ஒருவனின் தோற்றம் திசை திருப்பியது. அவனுக்குப் பின்னால் சயிக்களின் பின்புறத்தில்எதையோ சாக்கினுள் வைத்துக் கட்டியபடி துக்கம் தோய்ந்தமுகத்துடன் உருட்டிக் கொண்டு சென்று கொண்டிருந்தான்.

எதிரே வந்த போராளிகளின் வாகனம் திடீரென நின்றது.

'என்ன உது'

'பொம்மர் அடிச்சது ... என்றை தம்பிதான்'

சொல்ல முடியாமல் அவனது நாக்குழறுகிறது. கண்களில் நீர் வடிய அழுதப க் கூறுகிறான் அவன்.

அப்பொழுதுதான் இரத்தம் ஊறிக் கசிந்து கொண்டிருந்த அந்தச் சாக்குமூட்டையை அவர் உற்றுப் பார்த்தார். ஆறடி நிலத்தில் அடக்கும் என்று நினைத்திருந்த மனித உடல் அரைச் சாக்கினுள் எப்படி அடங்கியது என்று நினைத்தபோது அவர் அதிர்ச்சி அடைந்தார். குண்டு வீச்சினால் கொல்லப்பட்ட தனது தம்பியை சாக்கு மூட்டையில் வைத்துக் கட்சிச் சைக்கிளில் வைத்து உருட்டிச் செல்லுமளவு வாழ்க்கைச் சுழலில் ஏற்பட்ட மாற்றம் மிகக் கொடுமையானது. மனித உயிரிழப்பு என்பது அஃறிணைகள்உயிரிழப்புப் போல அர்த்தமிழப்பது வாழ்க்கையின் அவலத்தைச் சுட்டிக் காட்டுவதாக உள்ளது. சக மனித இழப்பு குறித்து வருத்தப்படுவதை விட அதை நடைமுறை வாழ்க்கையின் அம்சமாகக் கருதுவது, இராணுவ அடக்குமுறையில் மனித மதிப்பீடு குறித்து மறு ஆய்வு செய்யத் தூண்டுகிறது. இதுவே படைப்பு மூலம்படைப்பாளி சமூகத்தில் ஏற்படுத்தும் அதிர்வுகளின் விளைவாகும்.

# 54. திருக்குறளில் மனிதநேயக் கூறுகள்

சு.மாதவன்

ஆய்வாளர், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சை

மனிதனின் உணர்வு, சிந்தனை, கருத்து, செயல்பாடுகளோடு பின்னிப்பிணைந்த நற்பண்புகளை பத்து உடைமைகளாகத் திருவள்ளுவர் பகுத்துள்ளார். இந்தப் பத்து உடைக்கூறுகளும் வாழ்க்கையின் இயக்கத்தோடு, ஒருங்கிணையும்போது அவை எவ்வாறு மனிதநேயத்தின் படிநிலைகளாகும் என்பதை திருக்குறளின் வழிநின்று ஆராய்கிறது இக்கட்டுரை.

## உடைமை

'உடைமை' எனப்படுவது இன்று பெரும்பாலும் பொருள் அதாவதுசெல்வ உடைமையைக் குறிப்பதாகவே அறியப்படுகிறது. உடைமைஎன்பதற்கு, "செல்வம்; உடையபொருள்; உடையனாந்தன்மை; அணிகலன்; உரிமை; உரியவை" ஆகிய சொற்பொருள் விளக்கங்கள்குறிப்பிடப்படுகின்றன. (கழகத் தமிழ் அகராதி; 1965, ப.151) இவ்வுடையனாந்தன்மை" என்பது சிந்தனைக்குரியது. எனவே, ஒரு மனிதனின் புறத்தேவைகளுக்கும், அகத்தேவைகளுக்கும் உரியனவாய் விளங்கும் எந்தவொன்றையும் உடைமையாகக் கொள்ளமுடியும்.

சமூக வரலாற்றில் முதலில் உடைமையாகக் கருதப்பட்டவள் பெண். (பிறன்பொருளாள் – குறள் 15:1) பெண்ணின்று உருவாகிய அடுத்த தலைமுறையினருக்கென சேர்க்கப்பட்ட நிலம், விளைபொருள் போன்றவை. இதைத் தொடர்ந்து உடைமைகளாகக் கொள்ளப்பட்டன. இவை சொத்துடைமைச் சமூகம் உருவாகிய காலத்தில் எழுந்த கருத்தாக்கங்களாகும். இவற்றிலிருந்து மனிதனுக்குரிய உடைமைகளை இருவகையாகப்பகுக்கலாம்:

1. மனிதன் உயிர்வாழத் தேவையான புறஉடைமைகள் இவற்றை மனிதனிடமிருந்து பிரித்துவிட முடியும்.

2. மனிதனின் உயர்வுத் தேவைக்கான; இயல்புகளை நெறிப் படுத்தி, வாழ்வியலைச் செம்மையாக்கும் அக உடைமைகள் (நுண்பொருளுடைமை) இவற்றை மனிதனிடமிருந்து பிரிக்க இயலாது.

## மனிதநேயம்

மனிதநேயம், அறிவியல் ஒழுகலாறுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இதன் செயல்முறைகளால் சமூகத்தில் ஓர் சமனியத் தன்மையைக் காணமுடிகிறது. எனவே, "மனிதநேயமும் ஒரு தத்துவம் தான். ஏனென்றால் அது மனிதனின் மதிப்பீடுகள் அல்லது உணர்வுகளை

அங்கீகரிக்கிறது. எல்லாப் பொருள்களையும் பற்றிய அளவீடுகளை அவனிடம் உருவாக்குகிறது. மனிதனின் இயற்கையான குணங்களை; அவற்றின் எல்லைகளை அல்லது விருப்பங்களையும், கருத்துக்களையும் வெளிப்படுத்துகிறது". (The Encyclopedia of Philosophy. vol.3 & 4., 1972, Rs.69.70) இதனால் இது ஒரு பயன்பாட்டுத் தத்துவமாகவும் பண்பாட்டுத் தத்துவமாகவும் விளங்குகிறது.

பொதுவாக, மனிதர்களில் அடிப்படைத் தேவைகள் ஒரே திறத்தன. இத்தேவைகளின் நுகர்வு நிலைகளில் முரண்பாடுகள் ஏற்படும்பொழுது அவர்களுக்கிடையே மனமுறிவுகள் ஏற்படுகின்றன. காலப்போக்கில், இம்மனமுறிவுகள் பரிணாம வளர்ச்சி பெற்ற மோதல்களில் முடிகின்றன. இதன் விளைவாய் மனித உயிர்ப்பலிகளும் நிகழ்கின்றன. இவை தனி மனிதர்களுக்கிடையிலோ, ஒரே குழுவுக்குள்ளோ, இரு குழுக்களுக்கிடையிலோ அல்லது ஒட்டுமொத்த சமூகத்திற்குள்ளோ நிகழலாம். இவற்றைத் தடுக்கவும், சமநிலைப்படுத்தவும் சமூக வளர்ச்சியின் படிநிலைகளில் ஒவ்வொரு சமூக அமைப்பும் தனக்கென பல்வேறு மதிப்பீடுகளை உருவாக்கி, செயல் வடிவங்களையும் தீர்மானித்துக் கொண்டன. இச்செயல் வடிவங்களை 'அறநெறி' என்று அழைக்கிறோம்.

மதிப்பீடுகள் மனிதர்களின் நல்ல இயல்புகளையும் சமூகத்தின் தேவையையும் உள்ளடக்கியனவாகவும், உருவாக்கித் தருவனவாகவும் அமைகின்றன. நல்ல இயல்புகள் என்பவை புரைதீர்ந்த நன்மைபயப்பனவாக அமைதல் வேண்டும். எந்தவொரு பயன்மிக்க விளைவுகளை ஏற்படுத்தும் சிறந்த இயல்புகளின் பல்வேறு கூறுகளையும் வெளிப்படுத்துவதாக மனிதநேயக் கோட்பாடு விளங்குகிறது. சிறந்த இயல்புகளின் பல்வேறு கூறுகளாக மனிதனின் உள்ளார்ந்த நற்பண்புகள் குறிப்பிடப்படுகின்றன. எனவே, மனிதனின் நற்பண்புகளின் கட்டுத் தொகுதியாகவும், செயல்பாட்டு வெளிப்பாடாகவும் மனிதநேயம் விளங்குகிறது எனலாம்.

மனிதனின் அறச்செயல் வளர்ச்சிக்கான மூன்று நிலைகள் முறையே

(அ) இயல்பூக்க நிலை (ஆ) மரபொழுக்க நிலை (இ) மனச்சான்றுநிலை ஆகியன. (அறிவியல் – ஓர் அறிமுகம், 1984, ப.78) இவற்றுள், இயல்பூக்கநிலையைத் தன் அடிப்படையாகக் கொண்டுள்ளது மனிதநேயம்.

## திருக்குறள் சுட்டும் மனித உடைமைகள்

அறநெறியின்றி செல்வம் திரட்டப்பட்ட காலகட்டத்தில் எழுந்தது திருக்குறள். இவ்வாறு ஒருபுறத்தில் சிலரால் செல்வம் குவிக்கப்படுவதால் இன்னொருபுறத்தில் மிகப்பலரும், இன்னலுறுவதைக் கண்ட திருவள்ளுவர், பொருள் வேட்கையின் பொருட்டு நிகழ்ந்த நெறிபிறழ் நடவடிக்கைகளைக் கண்டிக்கிறார். இதற்கெனவே கள்ளாமை, வெஃகாமை, நன்றியில் செல்வம்

போன்ற அதிகாரங்களைப் படைத்துள்ளார். (அமுதம் – கட்டுரைத்தொகுப்பு, 1996 ப.53) தீயோரிடம் செல்வம் சேர்வதும், நல்லோரெல்லாம் வறுமையில் துன்புறுவதுமான நிலை மாற வேண்டுமெனில் 'உடைமை' பற்றிய சமூகத்தின் கண்ணோட்டத்தில் ஒரு புரட்சிகர மாற்றம் வேண்டும் என்று எண்ணுகிறார். பொருளுடைமையின் பொருட்டு ஆசை அதிகரிக்க அதிகரிக்க சமூகத்தில் குளறுபடிகளும் அதிகரிக்கும். மனிதனுக்குத் தேவையான நல்லியல்புகளை, மதிப்பீடுகளை உடைமைகளாகக் கொண்டால் பொருளுடைமையின்பாற்பட்ட சச்சரவுகளும், மோதல்களும் முடிவுக்குவரத் தொடங்கும். எனவே, 'உடைமை' என்பது பொருளுடைமை அன்று. அது நில்லாத நீங்கிவிடும் தன்மையதுான்றும், "உள்ளம் உடைமை உடைமை" என்றும் அறிவிக்கிறார் வள்ளுவர் (குறள்.60:2)

"உள்ளம் உடைமை உடைமை" என்ற குறள் ஊக்கமுடைமை என்ற அதிகாரத்துள்ள அடக்கப்பட்டு இருந்தாலும், மிகப்பரந்த பொருண்மைகளை உள்ளடக்கியதாக விளங்குகிறது. உள்ளம் மனித உணர்வுகளின்; இயல்புகளின்; பண்புகளின் நிலைக்களம். ஆகையால், அதைப் பற்றியிருக்கும் உடைமைகள் மட்டுமே உடைமைகளாகக்கொள்ளத்தக்கன. ஏனெனில், அவை எளிதில் நீங்காத தன்மையன. மனிதனை விட்டு நீங்கிச் செல்லும் பொருளை உடைமை என்று வள்ளுவர் ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே தான், "உடைமை" என்ற பொருளில் பொருளுடைமையை எந்த இடத்திலும் அவர் சுட்டவில்லை. மாறாக, மனிதனது வாழ்க்கை ஒழுகலாறுகளுக்குத் தேவையான நல்லியல்புப் பண்புகளையே 'உடைமை' என்று சுட்டுகிறார். இவ்வாறு குறிப்பிடப்படுவனவற்றை பத்து உடைமைகளாகப் பகுத்துள்ளார். அவைமுறையே (1) அன்புடைமை (2) அடக்கமுடைமை (3) ஒழுக்கமுடைமை (4) பொறையுடைமை (5) அருளுடைமை (6) அறிவுடைமை (7) ஊக்கமுடைமை (8)ஆள்வினையுடைமை (9) பண்புடைமை (10) நாணுடைமை ஆகியன. இவை மனிதனின்று பிரிக்க இயலாத உடைமைகள். இங்கு பிரிக்கவியலாத உடைமைகள். என்பவை முற்றிலுமாக நீக்க முடியாதவை; நீங்காதவை என்னும் பொருளில் குறிப்பிடப்படுகின்றன. காலம், இடம், சூழல், தேவை இவைகளில் அடிப்படையில் மேற்கண்ட இயல்பு உடைமைகளின் உணர்வு மட்டங்களில் ஏற்ற இறக்கங்கள் நிகழலாம். எனினும், முற்றிலும் நீங்காதவை.

மனிதனின் உடைமைகளான பத்தும் (அதிகாரங்கள்) மனிதனின் உள்ளார்ந்த நற்பண்பியல் கருத்தாக்கங்களாகவும், இதர அதிகாரங்களில் பெரும்பான்மையானவை இவற்றின் செயல்பாட்டு வெளிப்பாடுகளாகவும் அமைகின்றன. இவை இரண்டுக்கும் இடையே உயிர் நீரோட்டமாக நின்று இயங்குவதும், இயக்குவதும் மனிதநேயக் கோட்பாடாகும்.

## அன்புடைமை

மனித நேய வெளிப்பாட்டிற்கான நற்பண்பியல் கூறுகளுள் முதன்மையானது அன்பு. சக மனிதனைத் தன்னோடு ஐக்கியப்படுத்திக் கொள்வதற்கு முதலில் அவர்பால் அன்பு செலுத்த வேண்டும். முன்னைத் தொடர்புகள் ஏதுமற்ற ஒருவரோடும் உறவைச் செழுமைப்படுத்திக் கொள்ள அன்பு என்னும் ஊற்று இன்றியமையாததாகிறது. உறவைச் செழுமைப்படுத்திக் கொண்டவர்களிடையே உள்ள அன்பு உண்மை உடைத்தாயின் அவர்கள் தங்கள் உணர்வுகளின் கருத்துக்களை மாத்திரமல்லாது, அவர்களிடம் உள்ள எதையும் பகிர்ந்து கொள்ளும் தன்மையராய் விளங்குவர், (குறள். 8:2) "அன்பின் வழியது உயிர்நிலை" அவ்வுயிர் நிலை இல்லாத மனித யாக்கையின், "புறத்து உறுப்பு எல்லாம் எவன் செய்யும்?" அவை உயிர்நிலையற்ற "என்புத்தோல் போர்த்த உடம்பாக"; பிணமாகவே கொள்ளப்படும். எனவே, "அகத்து உறுப்பாக" அன்பு என்னும் உயிர்நிலை செயல்படவேண்டும் என்கிறார் வள்ளுவர். (குறள் 8:10, 8:9) அன்பைப் போற்றினால்தான் வாழ்க்கை இனிமையானதாக அமையும். மனிதன் பால் செலுத்தப்படும் நேயம் அன்பிலிருந்து தொடங்கி வளர்கிறது என்பதால் அன்புடைமையை முதல் உடைமையாக முன் வைக்கிறது திருக்குறள்.

## அடக்கமுடைமை

அடக்கம் என்பது மன அடக்கம், புலனடக்கம், சொல்லடக்கம் ஆகியவற்றை உள்ளடக்கியது. புற உலகத்திலிருந்து புலன்களின் வழிப்பெறப்படும் கருத்துக்களின் மீது மனம் அவா, சினம் முதலிய குணங்களைப் பெறுகிறது. இவற்றினைச் சொற்கள் வெளிப்படுத்துகின்றன. எனவே, மனம், மெய், மொழிகளை நன்னெறியில் கட்டுவிக்க இவற்றை அடக்கியாளும் பண்பை உடைமையாகக் கொள்ளுதல் இன்றியமையாததாகிறது. இவை அடக்கம் பெற்றால் வெகுளாமை, வெஃகாமை, வினைத்தூய்மை, இனியவை கூறல் போன்ற நற்குணங்களை மனிதன் பெறுவான். இவற்றின் விளைவாய் அவனிடம் மனிதநேயம் மிளிரும். இதனாலேயே உயிருக்கே ஆக்கமாக விளங்குவது அடக்கமுடைமை என்கிறது வள்ளுவம். (குறள்.13:2)

## ஒழுக்கமுடைமை

இங்கு பேசப்படும் மனிதநேயப் பண்புகளான இதர ஒன்பது உடைமைகளையும், அதன் செயல் வெளிபாடுகளையும் தனக்குள் உட்கொண்டுள்ள பொதுமையும் புரிதல் பரப்பும் கொண்டது ஒழுக்கமுடைமை. ஒழுக்கம் இருவகைத்து. ஒன்று நல்லொழுக்கம், பிறிதொன்று தீயொழுக்கம், வள்ளுவம் உடைமை என்று குறிப்பிடுவது நல்லொழுக்கத்தையேயாம். தீயொழுக்கம் மண்டிக் கிடக்கும் சமூகத்தில் நல்லொழுக்கமும், அதன் தொடர்ச்சியாக அறச் சிந்தனையும் தழைக்கவேண்டும் என்பதே வள்ளுவத்தின்

குறிக்கோள். எனவே, சமூகத்தின் வளர்ச்சியையும், தனிமனிதனின் ஒழுகலாறுகளையும், சீர்மைப்படுத்தும் ஒழுக்கமுடைமை மனிதநேயத்தின் பாற்படுகிறது.

### பொறையுடைமை

பொறுமையும், இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும் சால்பும் உடையது பொறையுடைமை. ஒருவன் தன்பால் செய்யும் செயல்களின் விளைவுகளையும் அவ்விளைவுகளை உள்வாங்கிக்கொண்டு தான் அவன்பால் செய்யப்புகும் செயல்களின் விளைவுகளையும் ஆராய்ந்து பொறுமையுடன் செயல்படுவதால் இருவருக்கும் நன்மை பயக்கும் வழிகளைக் கண்டுணரலாம். இவ்வாறு நன்மைதரும் வழிகளை உருவாக்கித் தருவதால் மனிதநேய அறுகுமுறையைச் சார்ந்ததாக பொறையுடைமை விளங்குகிறது.

### அருளுடைமை

அன்பின் கனிந்த; முதிர்ந்த நிலை அருள். இப்பண்பால் மன்உயிரையும் தன் உயிர்போல் என்னும் பாங்கும் (குறள்.25:4) வாடி பயிரைக் கண்ட போதெல்லாம் வாடும் மன இயல்பும் கைவரப்பெறும். இவ்வுணர்வை ஒருவன் பெற்று மனிதநேயப் பண்புடன் விளங்கினால் வெகுளாமை, இன்னா செய்யாமை, கொல்லாமை, இனியவை கூறல், ஈகை ஆகிய செயல் வெளிப்பாடுடையதாக அவனது வாழ்க்கை அமையும். இவ்வாறு, மனிதநேயத்தின் விளைநிலமாக அருளுடைமை விளங்குகிறது.

### அறிவுடைமை

அறிவு என்பது மெய்ப்பொருள் காணும் தன்மையது (குறள்.43:3)நன்மை எது தீமை எது என்பதைப் பகுத்தாராய்ந்து நன்மைபயக்கும் செயல்களின்பால் மனிதனை ஊக்கிச் செலுத்துவது அறிவு (குறள்.43:2) மனிதநேயமும் நன்மை பயப்பதையே தனது உயிர்நாடியாகக் கொண்டிருப்பதால் நல்ல செயல்களுக்கான வினையூக்கியாக உள்ள அறிவுடைமையும் மனிதநேயப் பண்புகளுக்குள் அடங்குகிறது. அறிவுடைமைத் தனது உடைமையாகக் கொண்டவனிடம் சான்றாண்மை, சொல்வன்மை, சிற்றினஞ் சேராமை, தீவினையச்சம், வினைத்தூய்மை, வெஃகாமை ஆகிய பண்புநலன்கள் அணிசேர்ந்து நிற்கும்.

### ஊக்கமுடைமை

மனஊக்கம் இன்றேல் செயல் ஊக்கம் பெறாது. நற்செயல்களை வளர்க்கும் மன வேகத்தின் தன்மைக்கேற்பவே மனிதன் உயர்வடைகிறான் (குறள்.60:5) "உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்" (குறள் 60:6) ஆயின் அவை செயல்வடிவம் பெற்ற மானுடத்திற்கும், தனிமனிதனுக்கும் நலம் பயப்பதாய் அமையும். எனவே, நலம்பயக்கும் ஊக்கமுடைமை மனிதநேயத்திற்குட்படுகிறது.

## ஆள்வினையுடைமை

மனஊக்கமும், செயலூக்கமும், ஒன்றிணையும்போது இடைவிடாதமெய் முயற்சியான ஆள்வினையுடைமையானது கிட்டுகிறது. இடைவிடாத மெய் முயற்சியால் கிடைக்கும் பலனையும், அதன்பொருட்டு உண்டாகும் இன்பத்தையும் பெரிதும் விரும்பாத ஒருவனால் அவனது சுற்றத்தார்க்கு மிகுந்த பலனும், இன்பமும் சென்றடைகிறது. (குறள்.62:5). எனவே, நற்செயலைச் செய்துமுடித்து, பிறர்நலம் பேணும் தன்மையான ஆள்வினையுடைமையும் மனிதநேயத்தோடு ஒன்றுகிறது. ஆள்வினையை உடைமையாகக் கொண்டவனிடம் மடியின்மை, இடுக்கண் அழியாமை, வினைத்திட்பம், வினை செயல்வகை போன்ற பண்புகளும் வளர்கின்றன.

## பண்புடைமை

'பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகுதல்” என்கிறது சங்க இலக்கியம் (கலி.80) எனவே தான், வள்ளுவம், “பண்புடையார்ப்பட்டு, உண்டு உலகம்” (குறள். 100:6) என்றும், “உலகத்தோடு ஒட்ட ஒழுகல்” (குறள் 14:10) என்றும் குறிப்பிடுகிறது. “உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே” எனவே, உயர்ந்த சான்றோர்களின் வாழ்க்கைப் பண்புகளை உடைமைகளாகக் கொள்ளவேண்டும் என்பது பெறப்படும். உயர்ந்த பண்பியல் கூறுகளான சான்றாண்மை, ஒழுக்கமுடைமை, பண்புடைமை ஆகியவை ஒன்றோடொன்று நெருங்கிய் கருத்தியல் பிணைப்பைக் கொண்டுள்ளன. சிறந்த வாழ்வியல் பண்புகளைக் கொண்டவன் மனிதநேயத்தின் கொள்கலனாக விளங்குவான். ஆகையால், பண்புடைமையும் மனித நேயத்தின் முக்கியக் கூறுகளுள் ஒன்றாகத்திகழ்கிறது.

## நாணுடைமை

நாணுடைமை என்பது அறம் அல்லாத செய்கையினால் நிகழும் தீமைகளைக் கண்டு அஞ்சி அவற்றைச் செய்ய நாணுதலாகும். (குறள்.102:5) மனித நேயச் சிதைவை உண்டாக்கும் செயல்களுக்காக நாணுதல், அறிவுடைமை, பண்புடைமை, சான்றாண்மை ஆகிய பண்புகளோடு ஒப்புநோக்கத்தக்கது. இவ்வுடைமையைத் தன்னகத்தே கொண்டவன் 'நன்றியில் செல்வம்' சேர்க்கத் துணியமாட்டான். இதனால் சமூக வாழ்க்கையைக் குலைக்கும் முயற்சிகள் நடைபெறமாட்டா.

## திருக்குறள்: மனிதநேய வினையூக்கி

திருக்குறளில் மனித உடைமைகளாகக் குறிப்பிடப்படுவனவற்றுள்முதல் ஐந்து அறத்துப்பாலுக்கும், அடுத்த ஐந்து பொருட்பாலுக்கும்உரியனவாய் உள்ளது.

பொருளீட்டுவதும் அதனைக் கொண்டு வாழ்க்கை நடத்துவதும்மானுட இயற்கை. இவை இரண்டையும் நெறி பிறழாது உயர்ந்த பண்புகள்

அவசியப்படுகின்றன. இவற்றைப் பின்பற்றி வாழ்ந்தால் எந்தவிதச் சிதைவுமற்ற மனிதநேயப் பெருவாழ்வு கிட்டும் என்பது வள்ளுவம். இவ்வாறு தேவைப்படும் உயர்ந்த பண்புக் கூறுகளையேதிருவள்ளுவர், அறம், பொருள், என்னும் இரண்டு பெரும் பிரிவுகளுக்கு இடையிடையே உயிரோட்டமாக இணைத்துள்ளார். இவற்றுக்கிடையிலான பொருண்மைத் தொடர்புகளை இதர அதிகாரங்களோடு பொருத்தி மேலாய்வுகள் நிகழ்த்தினால் இவற்றை மட்டும் 'உடைமை' என்று குறிப்பிட்டுச் சொன்னதன் காரணங்கள் புலப்படக்கூடும்.

திருக்குறள் கூறும் பத்து அக உடைமைகளான உள்ளார்ந்த வினையூக்கிகளும், மனிதனுக்குள்ளே இயங்கி, புறஉடைமைகளுக்கான தேடுதல்களில் நெறிமுறைகளைக் கடைப்பிடிப்பதால், மனிதநேயமிக்க வாழ்வியலை வளர்த்து, ஓர் சமனியச் சமூகத்தை நோக்கி அழைத்துச் செல்லும் தன்மையன என்பது கண்கூடு.

# 55. கலைச்சொல்லாக்கமும் சாமுவேல் ஃபிஷ்கிறினும்

**இரா.பாவேந்தன்**
ஆய்வாளர்
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

## முன்னுரை

ஐரோப்பிய அறிவியலை தமிழில் தரும் முயற்சிகளின் விளைவாகதமிழில் அறிவியல் எழுதுமுறையும் (Science writing) கலைச்சொல்லாக்கவியல் துறையும் தோற்றம் கண்டன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் நடந்த கலைச் சொல்லாக்க முயற்சிகளை விவரிக்கிறது கட்டுரை.

## தமிழில் ஐரோப்பிய அறிவியல்

ஐரோப்பிய அறிவியலை தமிழில் தரும் முயற்சிகள் முதன்முதலில் இலங்கையில் மேற்கொள்ளப்பட்டது. இலங்கைக்குச் சமயப்பணிசெய்யவந்து, தன் பெயரை "பெரிய சஞ்சீவநாதசுவாமிகள்" என மாற்றம் செய்து கொண்ட கிருத்துவச் சமயத்துறவி ஒருவர் பதினேழாம் நூற்றாண்டில் கிரீஸ் நாட்டில் வழக்கில் இருந்த அறிவியல் உண்மைகளை தொகுத்து ஓலைச்சுவடிகளில் எழுதினார். அவர் காலத்தில் அச்சுமுறைகள் வழக்கில் இல்லாததால்அவருடைய முயற்சிகள் அச்சேறவில்லை. (அச்சுவடி "அண்டபிண்ட வியாக்கியானம்" என்று தலைப்பில் 1874 ஆம் ஆண்டு அச்சேறியது)

1818 இல் சென்னையில் கிருத்துவ சமயத் துண்டறிக்கைச் சங்கத்தை தொடங்கிய இரேனியுசு பாதிரியார் பொதுமக்களுக்காககாலரா தொடர்பான துண்டறிக்கையை வெளியிட்டார் (ஹென்றிமோரிஸ் : 1906) இதனையடுத்து இரேனியுசு 1832 இல் 'பூமி சாஸ்திரம்' என்ற அறிவியல் நூலை வெளியிட்டார் தமிழின். முதல் அறிவியல் நூலான பூமி சாஸ்திரத்தின் முன்னுரையில் இரேனியுசு இம்முயற்சியைப் பற்றி பின்வருமாறு கூறுகிறார்.

> ..... நீங்கள் குடியிருக்கிற தேசத்தின் வயனங்களையும்இந்தத்தேசம்
> அடங்கிய பூமியின் வயனங்களையும் அறியாமல் இந்தத் தேசமே
> பூலோகமென்று அநேகர் நினைக்கிறபடியினாலே, நான் அந்த
> வயனங்களை உங்களுக்கு அறிவிக்க விரும்பி, ஐரோப்பா
> கண்டத்திலுள்ள கல்விமான்கள் பூமியைக் குறித்து செய்தபுத்தகங்களை
> பார்த்து பூமி சாஸ்திரமெனப்பட்ட இந்தப் புத்தகத்தைச்செய்தேன்

(இரேனியுசு 1832:3)

## இரேனியுகம் கலைச்சொற்களும்

பூமி சாஸ்திரத்தில் பயன்படுத்தப்பட்ட கலைச்சொற்களை இரேனியுக "நாமங்கள்" என்றே அழைக்கிறார். இந்நூலில் "பூமி சாஸ்திரத்திலே குறிக்கப்பட்டிருக்கிற நாமங்களின் அட்டவணை" என்ற பெயரில் 51 கலைச் சொற்களடங்கியப் பட்டியலை வெளியிட்டுள்ளார். அவர் கலைச் சொல்லாக்கத்துக்கு எந்தவித கோட்பாடுகளைக் கடைப்பிடித்தார் என்பதை அறிநற்கில்லை. இரேனியுசின் கலைச்சொல் பட்டியலே தமிழில் வெளிவந்த முதல் கலைச் சொல் பட்டியலாகும். இரேனியுசே தமிழின் முதல் கலைச் சொல்லாக்குனரும் (Science Terminologist) ஆவார்.

## சாமுவேல் ஃபிஷ்கிறிலும் அறிவியல் நூல்களும்

பூமி சாஸ்திரத்துக்கு அடுத்து ஒரு சில அறிவியல் நூல்கள் வெளிவந்து இருந்தாலும் நமக்கு பார்வைக்கு கிடைப்பவை சாமுவேல் ஃபிஷ்கிறினின் அறிவியல் நூல்கள் மட்டுமே. மருத்துவப்பணிகள் செய்ய 1847 ஆம் ஆண்டு அமெரிக்க மிஷன் சார்பாக இலங்கைக்கு வந்த சாமுவேல் ஃபிஷ்கிறின் சுதேசிகளில் மருத்துவர்களை உருவாக்க விரும்பினார். சுதேசிகளுக்கு முதலில் ஆங்கில வழி மருத்துவக் கல்வியை கற்பித்து தோல்வியடைந்தார். எனவே சுதேசிகளின் தாய்மொழியாக தமிழில் மருத்துவக் கல்வியைவழங்கத் திட்டமிட்டு தமிழ் மொழியைக் கற்றார்.

அவர் தமிழ்க் கற்றுக்கொண்ட முறை பற்றி அம்பிகைப்பாகன் பின்வருமாறு கூறுகிறார்.

"தமிழ் கற்றுப்பாண்டியத்தியம் பெறும் நோக்கத்தைக் கைவிடவில்லை, அதற்கும் இருவழிகளைக் கையாண்டார். தம்மிடம் வந்தநோயாளிகளுடன் தமிழில் பேசியதன் மூலம் வழக்குச் சொற்களையும் தமிழ் உச்சரிப்பையும் பயின்றார். ஆசிரியர் ஒருவரிடம் முறைப்படி சிரமமாகத் தமிழ்கற்றுத் தேர்ச்சிப்பெற்றார் (அம்பி.1995:35)

தமிழை முறையாகக் கற்றுக்கொண்ட கிறின் ஐரோப்பாவில் அன்றைய நாட்களில் புகழ்பெற்றிருந்த மருத்துவ நூல்களில்பதிப்பாளர்களின் அமைதியுடன் தமிழில் மருத்துவ அறிவியல் நூல்களையும் இரண்டு அறிவியல் கலைச் சொல்லகராதிகளையும் தயாரித்தார்.

அவருடைய நூல்கள் வருமாறு: அங்காதிபாதம் சுரேணவாதம் உற்பாலனம் (1852, 1857) பிரசவ வைத்தியம் (1857) இரண வைத்தியம் (1867) அங்காதிபாதம் (1872) வைத்தியாகரம் (1872) கெமிஸ்தம் (1875) மனுஷகரணம் (1883) மனுஷகரண கலைச்சொற்கள் (1872) அருஞ்சொல்லகராதி (1875)

## கலைச்சொல்லாக்கம்

தமிழின் முதல் கலைச்சொல்லாக்குனரான இரேனியுசு கோட்பாடுகளையும் எதுவும் பயன்படுத்தவில்லை. ஆனால் கிறீன் கலைச்சொல்லாக்கத்துக்கு விதிகளை வகுத்துக் கொண்டதுமட்டுமல்லாது அவற்றை தம் நூலின் இறுதியில் வெளியிட்டுள்ளார்எனவே கிறீன் தமிழின் முதல் அறிவியல் கலைச்சொல் கோட்பாட்டாளர் என்ற பெருமையையும் பெறுகிறார். கிறீனின் கலைச்சொல்லாக்க கோட்பாடு வருமாறு;

I. சொல் இணக்கமும் சுருக்கமும் ஓசையுமாயிருக்கவும்

II. அச்சொல் தமிழில் உண்டோவென்று பின் சொல்லப்படும் எட்டு விதங்களுள் ஓர் விதப்படி முதலில் தேடிப்பார்க்கவும்

1. ஒரு மொழியாவது தொடர் மொழியாவது வழங்கிவரும் சொல்லை நல்லதென்றெடுக்கவும்.
2. வழக்கமான உரிய சொல்லில்லாதிருந்தால் சற்றே கருகலானாலும் குறிப்பான சொல்லாய் எடுக்கவும்.
3. குறிப்பான தனிமொழி இரண்டாவது பகவாவது சேர்த்து ஓர் சொல்லாக்கவும்.
4. குறிப்பான பகுதியும் விகுதியும் சேர்த்து சொல்லாக்கவும்
5. குறிப்பான ஓர் பகுதியை ஓசையான யாதேனும் ஓர் ஈற்றசை சேர்த்து வேறுபடுத்தி சொல்லாக்கவும்.
6. இங்கிலீஷ் மொழிமூலத்தின் பயனையுள்ள சொல்தெரிந்தெடுக்கவும்.
7. ஒரு பயனுக்கு பல மொழியாவது ஒரு மொழிக்கு பல பயனாவதஇருந்தால் சொல் தேவைக்கிணங்கிய பொருள்பட அதை வரைவுப்பண்ணிக் கொள்ளவும்.
8. இங்கிலிஷ் தொடர் மொழியின் உறுப்புக்களை தனித்தனியே மொழி பெயர்த்து அம்மொழிக்கு சரியான சொல் பிறக்க இவைகளை புணர்க்கவும்.

III. பூரணமான சொல் தமிழிலே பெற வழுவும்போது பின்காட்டப்படும் பத்து விதிகளுள் ஓர் விதப்படி சமஸ்கிருதத்தில்தேடவும்

1. இங்கிலிஷ் சமஸ்கிருத அகராதி ஒன்றில் பார்த்து அதிலே தெரிந்து கொள்ளவும்.
2. சமஸ்கிருத இங்கிலிஷ் அகராதி ஒன்றிலே தெரிந்தெடுக்கவும்.
3. இவ்விரு அகராதிகளம் சரியொத்து காட்டும் சொல்சிறந்ததென்றெடுக்கவும்.
4. பெயரிடப்படவேண்டிய பொருளுக்கு உரிய சொல்காணாதிருந்தால் அப்பொருளின் குறிப்புக்களில் ஒன்றையாவது பலவையாவது வாடிக்கைப்படாத ஓர் சொல்லை அதற்குரியதாக்கவும்.

5. குறிப்பான தனிமொழி இரண்டாவது பலவாவது சேர்த்து ஓர் சொல்லாக்கம்.

6. காரியத்திற்கு அதிக இணக்கமானால் ஏற்றபகுதி விகுதிசேர்த்து ஓர் சொல் ஏற்படுத்தவும்.

7. இங்கிலிஷ் மொழிமூலத்தின் பயனையுள்ள ஓர் சொல்லாகவும்

8. ஒரு பயனுக்கு பலமொழியாவது மொழிக்கு பல பயனாவது இருந்தால் சொல் தேவைக்கிணங்கிய பொருள்பட அதை வரைவு பண்ணிக் கொள்ளவும்.

9. தொடர்மொழிகள் யாதொன்றின் உறுப்புக்கிணக்கமான தமிழ்மொழி உண்டானால் அதை ஆரிய மொழியுடன் சேர்த்து சில இடங்களில் வழங்கலாம்.

10. இங்கிலிஷ் தொடர்மொழியின் உறுப்புக்களை வெவ்வேறாய் மொழி பெயர்த்து அதற்கு சரியான தொடர்மொழியாய் இதன்வழி இவைகளை புணர்த்தவும்.

IV. தமிழாவது சமஸ்கிருதத்திலாவது சொல்காணாதபோது பின் சொல்லப்படும் மூன்று விதங்களில் ஓர் விதப்படி இங்கிலிஷ்சொல்லைச் சேர்க்கவும்.

1. சொல்லை அதன் ஒலிப்படி தமிழ் எழுத்தால் எழுதிக்கொள்ளவும்.

2. தேவையான இடங்களில் இணக்கமான விகுதிகூட்டி அதை வேறுபடுத்திக் கொள்ளவும்.

3. தொடர்மொழி யாதொன்றின் உறுப்புக்கு வாடிக்கைப்பட்ட தமிழ்மொழி உண்டானால் அதை இங்கிலிஷ் மொழியோடு சேர்த்துசொல்லாக்கவும் (கிறீன் 1857:205)

கிறீனின் இக்கோட்பாடு சொற்களை முதலில் தமிழிலும், பின் சமஸ்கிருதத்திலும் பின் ஆங்கிலத்தில் கலைச் சொற்களை ஆக்கிக்கொள்ள வழிகாட்டுகிறது.

## பதிவமைப்பு

கிறீனின் இக்கோட்பாட்டின்படி தாம் ஆக்கிக்கொண்ட கலைச் சொற்களை தம் நூல்களின் இறுதியில் அருஞ்சொல்லகராதி என்றதலைப்பில் தமிழ் – ஆங்கிலம், ஆங்கிலம் – தமிழ் என்ற பதிவமைப்பு முறையில் வெளியிட்டுள்ளார். பெரும்பாலான கலைச்சொற்களின் இறுதியில் தாம் உருவாக்கிய கலைச்சொற்களை அனைவருக்கும் புரியும் வகைகளில் தமிழில் ஆக்கப்பட்ட சொல்லை (T.1) சமஸ்கிருதத்தில் ஆக்கப்பட்ட சொல்லை (S.2) ஆங்கிலத்தில் ஆக்கப்பட்ட சொல்லை (E.1) எனவும் குறிப்பிட்டுள்ளார்.

T.S.E. இவைகளுக்கு அடுத்தப்படியாக வரும் எண்கள் முறையேதமிழ், சமஸ்கிருத ஆங்கில கலைச் சொல்லாக்க விதிகளைகுறிப்பவை.

T.1 அனுமானம் – Inference

S.3 அபசஞ்சாரி – Disinfectant

E.1 அல்புமின் – Albumen

சில கலைச்சொற்களுக்கு எந்த விதிகளின்படி ஆக்கப்பட்டனஎன்பதற்கு எந்தவித குறியீடுகளும் இடம் பெறவில்லை. சில கலைச்சொற்களுக்கு சமஸ்கிருத, ஆங்கில சொற்களும் இடம்பெற்றுள்ளன.

எ.கா. Choroid - கோறடு (E.1) தாரகம் (S.1) கிறீனின் கலைச்சொற்களில் சமஸ்கிருத சொற்களே அதிகம் காணப்படுகின்றன. கலைச்சொற்களை உருவாக்கும் போது 1832 இல் கல்கத்தா நகரிலிருந்து வெளிவந்த வில்சன் என்பவர் தயாரித்த சமஸ்கிருத ஆங்கில அகராதியையும், வில்லியம்ஸ்என்பவர் 1836 ஆம் ஆண்டு இலண்டனில் இருந்து வெளியிட்ட ஆங்கில சமஸ்கிருத அகராதிகளையும் பயன்படுத்தியுள்ளார். பெபரிஷியஷ், ராட்லர் போன்றோர் தயாரித்த தமிழ் அகராதிகள் கிறீனின் காலத்தில் இருந்துள்ளன. இவை அவருக்கு கிடைத்தனவா என்பது அறிதற்கில்லை.

## வேதியல் கலைச்சொல்லாக்கம்

மருத்துவக் கலைச்சொற்களை தமிழில் உருவாக்கிய கிறீன்வேதியல் கலைச் சொற்களை உருவாக்குவதற்கு சில சிறப்பு விகுதிகளை பயன்படுத்தியுள்ளார்.

| ஆங்கிலம் | லத்தின் | தமிழ் | எ.கா |
|---|---|---|---|
| ate | as | அசு | Oxalate - ஆக்சலசு |
| id | idum | இரம் | Oxide - ஆக்கிரம் |
| ite | is | இசு | Aconite - அகனிசம் |
| etted | ens | எற்று | Phosphuretted - ஐதருபாஸ்வரெட்டு |
| ic | icm | இக் | Oxalic acid - ஆக்சலிக் அமிலம் |
| ous | Osum | ஒசு | Nitrous - நீதுரோசு |

(கிறீன் 1875:455 – 516)

மேலும் சில முன்னோட்டுக்களும் சில வரையறுக்கப்பட்டபொருளிலேயே பயன்படுத்திப்பட்டன.

| ஆங்கிலம் | தமிழ் | எ.கா. |
|---|---|---|
| hypo (or) sub | அத | hyposulphuric acid - அதசல்புரேசமிலம் |
| hyper (or) super | அதி | hyperchlorate - அதிகுலோறகு |
| perபிர | peroxide | பிரவக்சிரம் |
| sesqui | சார்ந்த | sesqui oxide - சார்ந்தவக்சிரம் |
| bi (or) dent | துவி | bibasic - துவிதிாரக |

(கிறீன் 1872:455 – 516)

## முடிவுரை

கிறீனின் கலைச்சொற்களில் அதிக அளவில் சமஸ்கிருத சொற்களும், ஆங்கிலச் சொற்களுமே இடம்பெற்றுள்ளன. தமிழ்மொழியில்அறிவியல் பூர்வமான சொல்லாக்கத்தை முதன்முதலில் அறிமுகப்படுத்திய கிறீன் அன்றைய காலகட்டத்தில் சமஸ்கிருத தாக்கத்துக்கு உள்ளாகியதில் வியப்பில்லை. மேலும் அவருடைய காலகட்டத்தில் வெளியான ஆங்கில – தமிழ், தமிழ் – ஆங்கில அகராதிகள் அவருக்கு கிடைத்திருக்குமானால் தமிழ் சொற்களும் அவருடையப் பட்டியலில் இடம் பெற்றிருக்ககூடும். கிறீனின் நூல்களில் இடம் பெற்ற கலைச்சொற்களை முழுமையாகத் தொகுத்து இன்றைய கலைச்சொற்களுடன் ஒப்பிடும் முயற்சிகள் எதிர்காலத்தில் தேவை.

## பார்வை நூல்கள்

1. இரேயுகு, பூமி சாஸ்திரம், சென்னப்பட்டினம் சார்ச்மிசியோன் அச்சுக்கூடம், சென்னை, 1832.

2. சமுல் பி.கிறின் இரணவைத்தியம், அமெரிக்க மிஷின் அச்சகம் யாழ்ப்பாணம், 1867.

3. கெமிஸ்தம் நாகர்கோயில் லண்டன்மிஷன் அச்சியந்திரசாலை, நாகர்கோயில் 1875

4. அம்பிகைபாகன், மருத்துவத் தமிழின் முன்னோடி டாக்டர் கிறின், தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை 1995

5. Henry Morris, The life of John Murdoch, Christion literature Society, Madras 1906.

# 56. அகிம்சையும் ஜீவகாருண்யமும்

*முனைவர் வீரா.அழகிரிசாமி*

விரிவுரையாளர், காந்திய வள்ளலார் தத்துவத்துறை

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

உயிரையும் உடம்பையும் இணைத்துக் கண்டது சமணம். இராமலிங்க வள்ளலார் உடலை உயிர் தங்கும் இடமாகக்கொண்டு உடலைக் காக்கவேண்டிய முறைகளாக நித்திய கரும விதிகளையும் வகுத்தளித்தார். இந்தியச் சிந்தனை மரபில் 'அன்பு' பற்றிப் பேசிய சமய முறைகளில் கொலைபுலையை மறுத்துப்பேசிய சமயத்தின் பண்புக் கூறுகளை வள்ளலார் பிரதிபலிக்கின்றார்.

'கொலைப்பலியும் புலைப்புசிப்பும் வழக்கத்தில் உள்ளோர் அனைவரும் புறவினத்தார்' என்று இனத்தாரைப் பாகுபடுத்தினார். இந்திய மரபில் கொலைப் புலையை மறுத்துப் பேசியதொன்மையானது சமணம். பிற சமய மரபுகள் சமணர் அளவிற்கு மிகுத்துப் பேசவில்லை எனலாம். சமணத்தின் 'அகிம்சை', நீதி நூல்களிலும் காப்பியங்களிலும் பதிவாகியுள்ளன. பல நூல்கள் வடநூல் மரபின என்றாலும் இருப்பு மரபின் மாற்றுக் கருதாயினும் பின்னாளில் தமிழ் உணவு முறைகளோடும் நம்பிக்கையோடும் கலந்தன. 6ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட சமயவாதிகளின் இலக்கிய வளர்ச்சி சமயாச்சாரிகளின் பயணம் சமணத்தை மட்டுப்படுத்தியது. எனினும் பண்பாட்டுத் தளத்தில் பலவகையிலும் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன சமண சமய நெறிகள்.

19 ஆம் நூற்றாண்டு வடலூர் இராமலிங்க வள்ளலாரின் கோட்பாடுகளிலும் குறிப்பாக 'ஜீவகாருண்யம்' என்ற கோட்பாட்டில் இணைநிலையில் அகிம்சையை ஒப்பிட்டுக்காண்பதன் மூலம் சில முடிவுகளைப் பெற முயலலாம். அவ்வகையில் ஜீவகாருண்யம் அகிம்சையின் தாக்குரவால் வெளிப்பட்டிருக்கலாம் என்பதற்கான சில கருதுகோள்களைக் கொண்டு விளக்க முற்படு தே இக்கட்டுரையின் நோக்கம்.

'சம்பந்தரும் சமணரும்' என்ற நூலில் தெ.பொ.மீ. சமணபவுத்தக் கொள்கைகள் தமிழ்நெறிப்பட்டவை என்றுரைப்பார். "ஒரு சிலர் பால் மறைந்து மழுங்கி நின்ற சமணக் கொள்கைகள் சம்பந்தராலேயே தமிழர் அனைவரிடத்தும் பரவின என்பதை மறுத்தல் இயலாது" (ப.11) எனக்கூறுகின்றார். தமிழகத்தே சமண சமயக் கொள்கைகள் சம்பந்தர் காலத்துக்கு முன்பே பரவி நிலைபெறவில்லையா? என்ற கேள்வி எழலாம். இங்கு கருத்தில் கொள்ளவேண்டியது. முன்பு பரவியிருந்த சமணர்க்கு உரிய கொள்கைகள் மீண்டும் புதிய வடிவில் புகுந்தன என்பதே எண்ணுதற்குரியது. பண்டைய இனக்குழு மக்கள் தொடங்கி சங்ககாலத்தின் பிற்பகுதிவரை உயிர்ப்பலியும் புலால் உணவுப் பழக்கமும் இருந்தன என்பதை தெரிவிக்கின்றன. தென்னிந்திய மண்ணில் நிலைகொண்ட சமண பவுத்தம் தம் கொள்கையின் முதன்மையான

அகிம்சை, புலால் உண்ணாமை ஆகிய சீர் பெருகொள்கைகளை தாங்கி வந்தன. சமயம் அறியவொண்ணா நிலையினராய் புலப்பட்ட வள்ளுவரும் புலால் உண்ணாமை , கொலை மறுப்பு ஆகிய கொள்கைகள் பற்றி பேசினார். 7 ஆம் நூற்றாண்டு வாக்கில் சைவ உணவு முறை மூலம் உயிர்க்கொலையை மறுத்துரைத்த ஞானசம்பந்தரைத் தம் குருவாகக் கொண்டவள்ளலார் அகிம்சை எனும் கொள்ளாமையை உயிரக்கத்தை ஆழ்ந்து கண்டு முறைப்படுத்திச் சமரச சுத்த சன்மார்க்க சத்தியத் தருமசாலையின் ஒழுக்க விதிகளாய் ஜீவகாருண்யமாய் செயல்வடிவமாக்கினார். "பேச்சு செயல்" என்ற மூன்றும் ஒருமுகப்பட்டது.

உணவு வழங்கும் இச்சீவகாருண்ய முறை சைவ அடியார்கள் மடம் வைத்து உணவளித்த முறையினின்றும் சற்று வளர்ந்தமீள்பார்வைப்பட்ட ஒன்று. சைவம் மடம் வைத்து உணவு வழங்கினும் 'உடல், உயிர், மாயை, பதி' என்று நின்று உடலைவிட ஆன்மா அல்லது உயிர் புனிதமானது எனக் கொண்டது. வள்ளலார் உணவு வழங்கியதோடு உடலையும் மதித்தார். உடலே உயிர் உறையும் இடம் இவ்வுடல் மூலமே இறவாப் பேரிப் நிலையை, ஆன்ம நேய ஒருமைப்பாட்டு உரிமையை அடைய முடியும் என்றார். முன்னைய சமணமும் வடக்கிருந்து உடலைக் கொண்டே விடு பெற்றது; கொலை மறுத்தலை வேண்டியது.

வள்ளலார், சமரச சுத்த சன்மார்க்க சத்தியப் பெரு விண்ணப்பத்தில் 'எனக்கு சைவம், வைணவம், சமணம், பவுத்தம் ஆகியவற்றை தத்துவ சித்திக் கற்பனைக் கலையென்று அறிவித்தாய்' என வேண்டுகிறார். இங்கு மேற்குறித்தவைகளை வள்ளலார் கற்பனைக்கலை என்று கூறி இருப்பினும் சமணத்தையும் கற்றிருக்கின்றார் என்பது புலனாகின்றது.

வள்ளலார் வெள்ளையாடை பற்றியும் அதற்கு வேண்டி தம் சீடர்கள் மூலமாக வெள்ளை லாங்கிளாத் துணிகளைப் பெற்றது பற்றியும் அவரது படைப்புகள் வழியாக அறியலாம். அவ்வெள்ளையாடைப் போர்த்தி இருக்கும்முறை அவருக்கு கிருத்தவப் பாதிரிமார்கள் மூலமோ இஸ்லாமிய சூஃபிகளின் மூலமோ ஏற்பட்டிருக்கலாம் என்று சில ஆய்வு முடிவுகள் கூறுகின்றன. ஆனால்சமணத் துறவியர்களும் திகம்பர நிலையை அடைவதற்கு முன்பு வெள்ளையாடையையே பயன்படுத்துவர்.

சமணர்கள் உண்ணா நோன்பிலிருந்து உயிர் விடுவது வடக்கிருத்தல் ஆகும். இம்முறைபற்றி சங்க இலக்கியப்பாடல்கள் பல கூறுகின்றன. பவுத்தக் காப்பியமான குண்டலகேசி இம்முறையை தற்கொலை என்று கூற அது தற்கொலையன்று எனக்கூறுகின்றது. நீலகேசி (சமணமும் தமிழும் ப.81) இறவாப்பேரின்ப வாழ்வை மிகுத்துப் பேசிய வள்ளலாரும் தம் இறுதிக்காலத்தில் மேட்டுக் குப்பத்திலுள்ள சித்திவளாகத்தில் உள்புகுந்து பலநாள் தங்கி மறைந்தார் என்கிறது. எனவே வடக்கிருத்தலைக் கற்ற வள்ளலார் இம்முறைக் கையாண்டுள்ளார். பல இடங்களில் தம் உடலை கற்பூர உடல் என்றும் பொன்னுடல் என்றும் கூறுவது எண்ணுதற்குரியது.

மேற்குறித்த இக்கருத்துக்கள் மட்டுமன்றி வள்ளலார் பலஇடங்களில் சமண சமயத்தைக் குறித்துப் பேசுகின்றார். இந்த அடிப்படையில் சமண சமயத் தத்துவத் தாக்கும் ஒரு சமூகவியல்நோக்கில் அறிதற்கு இடமளிக்கின்றது.

சமண முனிவர் ஒழுக்கங்கள் 28 னுள் முதன்மையான மகாவிரதங்கள் அய்ந்தனுள் முன் இலங்குவது 'அகிம்சை' எனும் கோட்பாடாகும். சமண இல்லரத்தாராகிய சாவக நோன்பிகள் கடைபிடித்தொழுக வேண்டிய 10 விரதங்களுள் முதலாவது கொல்லாமை. சமணச்சிந்தனையின் முழுமைத்தன்மை அகிம்சையிலேயே உள்ளது எனலாம். பிற சமயங்களின் நடைமுறைப் படுத்துவதற்கு இயலா ஒன்றாக இக்கோட்பாடு விளங்கிற்று. எனவே சமணம் இருப்பு வாழ்வின் வாழ்வியல் யதார்த்தங்களைப் பிரதிபலிக்க இவற்றைச் சாற்றியது.

பகுத்தறிவு படைத்த மானிடர்க்கு மட்டுமே உரிய ஒன்றாக இக்கோட்பாட்டை சமணம் பிற உயிரினத்திற்கு உரியதாகக்கொண்டது சமணம் வள்ளலாரும் மனிதர் மட்டுமின்றி, 'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்' என்கிறார். இவரது அகிம்சைச் சிந்தனை அவர் காலச் சூழலையும் காட்டுகின்றது. பேசுகையில் மூக்கின் சுவாசக் காற்றாலும் புலனாகா உயிர்கள் மாண்டுபோகும் என எண்ணி வெண்துணியால் மறைத்து பேசுவர். மெல்லப்பேசுதல் அவர் தம் வழக்கு வள்ளலாரும், பெருந்தீனி, பெருந்தூக்கம், பேரொலி கூடாது மெல்லப் பேசுதல் சன்மார்க்கிகளுக்கு உகந்தது எனக் கூறுவார்.

வள்ளலாரின் சமரச சுத்த சன்மார்க்கத்தைப் பின்பற்ற விழையும் சன்மார்க்கிகள், ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமை பெற்றுத்திகழ, இறவாப் பெரு வாழ்வு எனும் ஆன்ம லாபத்தைப் பெற தலைவாசலாய் அமைவது ஜீவகாருண்யமாகும். வள்ளலார் நல விரும்பிகள் அவருக்கு அளித்த பொன்னும் பொருளையும் புறக்கணித்து பிறர் பசி ஆற சமரச சுத்த சன்மார்க்கச் சத்திய கருமசாலையை 1867 இல் நிறுவினார். இவ்உணவுச் சாலையின்கண் நடைமுறைப்படுத்தவேண்டியும் ஜீவகாருண்யச் சிறப்பை விளக்க வேண்டியும் சில நியதிகளைக் கூறும் ஓர் ஒழுக்கநூலே அவர்பொழிந்த "ஜீவகாருண்ய ஒழுக்கம்" ஆகும். இது ஏழு பிரிவுகளை உரைநடைகளிலும் அவரது உயிரியக்கச் செயற்பாட்டியல் எண்ணம் பரந்துள்ளது. இவற்றின்றும் சமணத்தின் அகிம்சைச் சிந்தனைக்கு உகந்த கோட்பாடு நிலைப்பட்ட கருத்துக்கள் ஒப்பிட்டுக் காட்டப்படுகின்றன.

சமணத்தின் அகிம்சையில், இன்னா செய்யாமை, அருளுடைமை கொல்லாமை, புலால் மறுப்பு என்ற நான்கு உள்வீடாய்அமைந்துள்ளன (சமணமும் தமிழும் ப.17) சமணர்கள் மலருக்கும் நீருக்கும் மரத்திற்கும் உயிருண்டு என்றுரைப்பர். வள்ளலார் பல்வேறு கொள்கைகளைக் கூறுவார். அவற்றிற்கெல்லாம் மூலாதாரமான ஜீவகாருண்யத்தில் சமணம் கூறும் இன்னா செய்யாமை, அருளுடைமை, கொல்லாமை, புலாலுண்ணாமைமிகுத்துப் பேசும் பொருட்கூறுகளாய் அமைகின்றன.

சொல்லாலும் மனத்தாலும் செயலாலும் பிறருக்குத் துன்பம் நேராவண்ணம் செயலாற்றல் இன்னாசெய்யாமை. சமணம் சற்று முன்சென்று துன்பப்படும் பிறருக்கு உதவாது செயலற்று இருப்பதும்தீங்கு செய்தலாகும் என்றுரைக்கும் (இந்திய தத்துவ ஞானம் ப.115) உலகப் பொதுநெறி கண்ட வள்ளுவரும், '

நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம் நோய் செய்யார்
நோயின்மை வேண்டு பவர்' என்கிறார்.

இராமலிங்க வள்ளலார், "கருணையே வடிவாய்ப் பிறர்களுக்கடுத்த
கடுந்துயர் அச்சம் ஆதிகளைத்
தருணம்நின் அருளால் தவிர்த்து அவர்க்கு இன்பம்
தரவும் ... " என்று

இன்னா செய்யாமை என்பதை மாறூட உடலுடன் இணைத்துப்பேசினார். இறவாப் பேரின்ப வாழ்வு எனும் நிலையடைய முக்கியமான இம்மானிட தேகத்தாலன்றி வேறு தேகத்தால் அடைவது அரிது (திருவருட்பா – உபதேசப் பகுதி) எனவே இம்மாறூட உடலை தீது நேராமல் காத்தல் வேண்டும் என்பார். எனவே, தேகத்திற்கு இன்னாமை எனும் நட்டம் உண்டாக்கும் ஆகாரம், நித்திரை மைதுனம், பயம் என்ற நான்கிலும்ஜாக்கிரதையாக இருத்தல்வேண்டும் என்கிறார். அதேபோல் இன்னா செய்யாமை எனும் " ஆன்ம உருக்கம் எப்போது உண்டாகுமெனில்; சீவர்கள் பசி தாகம் பிணி இச்சை பயம்கொலை இவைகளால் துன்பத்தை அநுபவிக்கக் கண்ட போதாயினும் ஆன்ம உருக்கம் உண்டாகுமென்று அறியவேண்டும்"

சமண அருளுடைமை அகிம்சைக் கொள்கையென்பது,

"அருளெல்லா மகத்தடக்கி யடிநிலை யடைந்தோர்க்குப்
பொருளெல்லாம் நீ விளங்கப் புகரில்லா வகையினால்
இருநில்லா மனஞானம் இயம்பிதும் இயலாமோ" என்பதோடு

அரசரும் அமரமும் மனிதரும் மகிழும் படியாக அருள் எனும் திருமொழியினை வழங்கினாய். உன் அருளுடைமையால் இருள்சூழ்ந்த கதியெல்லாம் அகன்று போக பலரும் புகழ்ந்தேத்தும் வீடுபேற்றை தருவாய் எனக்கூறும் சமணம், "மன்னுயிர் காத்தலான் மறம்விட்ட அருளினோடு" என்கிறது உயர்ந்தவர்கள் உள்ளத்திலுள்ள இப்பண்பினை வள்ளலார், அருள் என்பதற்கு விரிந்த பொருளைத் தருகின்றார். ஜீவகாருண்யம் என்ற ஒன்றும் மூலமே அருளைப் பெற இயலும். எவ்வாறெனில் "இயற்கை இடத்தைப் பெற்றுத் தடைபடாமல் வாழ்கின்ற அந்தப் பெரிய வாழ்வை எதனால்அடையக் கூடுமென்று அறிய வேண்டில் கடவுள் இயற்கை விளக்கமாகிய அருளைக்கொண்டே அடையக்கூடும் என்றறியவேண்டும் கடவுளின் இயற்கை விளக்கமாகிய அருளை எதனாற் பெறக் கூடுமென்று அறிய வேண்டில் ஜீவகாருண்ய ஒழுக்கத்தினால் பெறக் கூடுமல்லாது வேறெந்த வழியாலும் சிறிதும் பெறக்கூடாது என்று உறுதியாக அறிதல் வேண்டும் (திருவருட்பா – வசனப்பகுதி)

அறவழிப்பட்ட சமணம் கொல்லாமையையும் புலால் உண்ணாமையையும் வலியுறுத்தி புலால் மறுத்தல் என்பது சமணம் தவிர்த்த பிற சமயங்கள் எந்த அளவிற்கு நடைமுறைப்பட்டது என்பது கேள்விக்குரிய ஒன்று. சங்கப் பாடல்கள் அக்கால மக்களின் ஊனுணவுப் பழக்கத்தைத் தெற்றெனப்புலப்படுத்தும்இந்தியச் சமய முறைகளில் ஜீவகாருண்யம் அல்லது கொலை மறுத்தல் என்பது எந்தளவிற்கு சாத்தியப்பட்டது எனில், "பௌத்த சமண சமயங்களின் செல்வாக்கினாலோ என்னவோ ஊனுண்ணலாகாது என ஓர் இயக்கம் முக்கியமாகச் சமய நூல்களைக் கற்றோரிடையே பரவி வந்ததெனத் தெரிகிறது என்பர் (காமாட்சி சீனிவாசன், குறள் கூறும் சமயம் ப.199) சமண சமயத்தார் தென்னகத்தில் ஆட்கொண்ட நாட்களில் ஊன் உண்ணும்வழக்கும் மிகுத்து இருந்திருக்கவேண்டும். எனவே தான் வள்ளுவரும், 'தெளிவுள்ள அறிஞர்கள் ஓர் உயிரிடத்து இருந்து பிரிந்த மாமிச உணவை உட்கொள்ளமாட்டார் என்று கூறுகிறார் போலும்.

கொலை என்பதை இரண்டு சூழலில் வள்ளலார் குறிப்பிடுகின்றார்ஒன்று பசியால் வரும் கொலை மற்றொன்று கடவுள் பெயரால் உயிர்ப்பலி இடுதலாகும். பசியை நீக்கினால் அப்பசியினால் வரும் கொலையும் நீக்குதற்கு உரியது. வள்ளலார் ஜீவகாருண்யத்தை அபர ஜீவகாருண்யம் என்றும் பர ஜீவகாருண்யம் என்றும் பிரித்து, பசியினாலும் கொலையினாலும் வருந்துன்பத்தை நிவர்த்தி செய்வது பரசீவகாருண்யம் என்பார். "பசியினால் வரும் அவஸ்த்தைகளும் துன்பங்களும் கொலையினால் வரும் அவத்தைகளும் துன்பங்களும் தம்முள் ஒத்திருக்கின்றன. ஆதலால் பசியினால் வருந்துன்பத்தையும் கொலையினால் வரும் துன்பத்தையும் நிவர்த்தி செய்விப்பதே ஜீவகாருண்யத்திற்கு முக்கிய லட்சியமென்றறிய வேண்டும் (வசனப்பகுதி) மானிடர்க்கு மட்டுமின்றி புலி சிங்கம் போன்ற மிருகங்களையும் ஊன் உணவினின்று நீக்க முடியும் என்கிறார் வள்ளலார். இப்பண்புகள் யாவும் சமண அகிம்சையுடன் நெருங்கிய ஒப்புமை"புடையன.

# 57. "பெண் மதிமாலை" கேட்கும் பெண் கல்வி

எம்.கே.சிவகாமசுந்தரி
கல்வியியல்துறை, தொலைநிலைக்கல்வி இயக்ககம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

"பெண்' என்பவள் இந்த சமுதாயத்தின் ஓர் அங்கம். அவள் ஆணுக்கு இணையாக சமமாக இயங்க வேண்டும். பெண்ணும் ஆணும் இச்சமுதாயத்தின் இரு கண்கள் என்று போற்றப்படவேண்டும்" என்று முழங்கும் சமூகசீர்த்தவாதிகளால் நிரம்பி வழியும் இச்சமூகத்தில் பெண்ணிற்கு உரிமைகள் மறுக்கப்பட்டு வந்துள்ளன என்பதை இலக்கியங்கள் வெளிச்சம் போட்டுக் காட்டுகின்றன. பெண்ணிற்கு மறுக்கப்பட்ட உரிமைகளுள் ஒன்று கல்வி. கல்விச் செல்வத்தைப் பெண் பெற வேண்டிய நிலையில் உள்ளாள் என்பதைமாயூரம் வேதநாயகம் பிள்ளை, தம் நூலான பெண்மதி மாலையில் கூறுகிறார். பதினொரு தலைப்புகளில் பயனுள்ள கருத்துக்களைத் தருகிறார். ஒப்பில்லாத சமுதாயம் உருவாக வேண்டுமானால் 'பெண்கல்வி' வேண்டும் என்று பேசுகிறார் வேதநாயகர். ஒவ்வொரு குடும்பத்திலும் ஒளி தருபவளாய் விளங்கும் பெண், அன்பும், பண்பும், பக்தியும், ஒழுக்க நெறியும், அறமும் மறமும் கொண்டுவிளங்க ஞான நெறியுடையவளாய் வாழ்வது தேவை என்று உணர்ந்த வேதநாயகர் 'பெண்கல்வி' தேவை என்பதை தன் படைப்பான "பெண்மதி மாலையில்" வலியுறுத்துகிறார். ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமை என்று எண்ணிய கால கட்டத்தில் பெண்கள் தாங்களே தங்களின் கல்வித் தேவையைக் கூறுவதுபோல "கல்வி உரிமையை" வெளிப்படுத்துகிறார் வேதநாயகர்

"அணி வேண்டாம் நல்ல
துணி வேண்டாம் நவ
மணி வேண்டாம் காமப்
பிணி வேண்டாம் நல்ல
வித்தையைக் கற்பியுங்கள்" (பக்.23) என்ற அடிகளில் கல்வி கற்கப் பெண்கள் கொண்ட ஆர்வத்தைக் கூறக்காணலாம். வாழ்க்கையில் ஒரு விபத்தாகக் கல்வி பெண்களுக்கு அமையக்கூடாது. பெண்ணின் அறிவு மலர்ச்சிக்கு வாய்ப்பளித்து, அதே நோக்கில் சமுதாயச்சடங்குகளுக்கு உட்பட்டு வாழ, பெண் கல்வி தேவை என்றகருத்தை பெண்மதி மாலையில் காணமுடிகிறது. பாரதிக்கு முன்னோடியாக, பெண் கல்வியைப் பற்றிப் பேசியவர் வேதநாயகர் எனலாம்.

பெண்மதி மாலையில் "புத்தி" என்ற தலைப்பின் கீழ்,

"கற்றவளே துரைசாணி – கல்லா
மற்றவளே மடைச் சாம்பிராணி" (36)
"வீட்டுக் கணக்கெல்லா மொழுது – நல்ல

ஏட்டுக் கணக்கருக்கில்லையே பழுது'' (63)

என்ற அடிகளில் கல்வி என்னும் கருவியை எப்படிப் பயன்படுத்தவேண்டும் என்று கூறக் காணலாம். எழுத்தறிவு தரும் படிப்பைப் பெற்ற பெண்சமுதாயத்தில் மதிக்கப்படுவாள், ''என்னும் எழுத்தும் கண்ணெனத் தகும்'' என்று கூறும் கல்விச் சிந்தனையின் அடிப்படையில் 'கணிதக்கல்வி வீட்டுவரவு செலவு எழுத பெண்ணுக்குத் தேவை, அந்த அளவு கணிதக் கல்வி கற்றால்போதும் என்ற சிந்தனை தெறிக்கக் காணலாம். [Basic arethematic Lg will do]

"பாலரை வளர்த்தல்" என்ற செய்தியில் குழந்தைகளுக்கு இளமையில் கல்வி கற்பிக்கும் பொறுப்பு பெண்ணினுடையது[Nursery education teacher should be a lady] என்கிறது பெண்மதிமாலை

"இளமையிலே கல்வி போதி – மிக
வளர்ந்தபின் அழுதாலும் வருமோ நன்னீதி (112)
பாலர்க்கு நல்வழி காட்டித் தினமும்
படிப்பிப்பாள் வேதாந்த சாரம்'' (பக்.20) என்ற அடிகளில்

குழந்தைக் கல்வியின் ஆசிரியர் பெண்களாகத் தான் இருக்கவேண்டும் என்ற உயரிய சிந்தனை வெளிப்படக் காணலாம்.

பெண், கல்வி கற்கும் போது அக்கல்வியால் அவள் பிறர்க்கு உதவி செய்யும் நல்லெண்ணத்தை வளர்க்கும்படி கல்வி, அமையவேண்டும் என்ற தம் எண்ணத்தை பெண்மதி மாலையில் வெளிப்படுத்துகிறார் வேதநாயகர். எனவே பெண்கல்விக்கு எனத் தனிக்கல்வித் திட்டம் தேவை என்று கூறுவதாக கொள்ளலாம்.

"புத்தியில்லார்க்கு நீ போதி – தெய்வ
பக்தியில்லார்க்கு நீ படிப்பித்தால் நீதி'' (120)

என்று கூறுவது கொண்டு, பெண்கள் ஆசிரியர்களாக சமுதாயத்தில் மலரவேண்டும், அறிவொளியும் ஆன்ம ஒளியும் அவர்களால் ஏற்றமுடியும் என்ற சிந்தனையைக் காணமுடிகிறது. தான் வாழும்சமுதாயத்தில் தான் என்ன கடமை ஆற்ற முடியும் என்ற சிந்தனைத் தூண்டலை பெண்மதி மாலையில் காணமுடிகிறது. ஒரு சமுதாயத்தின் நாகரிகமும், பண்பாடும் பெண்ணிடத்தில் தான் உள்ளது. அறிவுடைய மாந்தர்களை உருவாக்குபவள் பெண்,சமயநெறியைக் காப்பவள் பெண் எனவே அவளுக்குக் கல்விதேவை என்று பெண்மதி மாலை வலியுறுத்துகிறது. தன்னை அறிதலும் தன்னை வெளிப்படுத்தலும் கல்வியின் முதன்மையான நோக்கங்களாகக் கருதப்படுகின்றன. பெண்ணுக்குஇந்தச் சமுதாயத்தில் சமநீதி கொடுக்கப்படவில்லை என்பதைஉணர்ந்த வேதநாயகர் வீட்டு வேலைகள் அனைத்தும் செய்பவள், வீட்டின் பொருளாதாரத்தில் வரவு செலவு கணக்கை மேற்கொள்பவள் பெண் என்பதை,

"காரியம் பார்ப்பவள் கணக்கு மெழுதுவள்'' (பக்.18)

என்று கூறக் காணலாம். மனையியல் துறையில் பட்டம் பெறாமலே வீட்டை நிர்வாகம் செய்யும் திறமையுடைய பெண் மந்திரியாக, சஞ்சீவியாக தலைமகளாகக்

காணப்படுகிறாள் என்பதை "தாதன் பார்த்து வந்து சொல்லுதல்" என்ற தலைப்பில்

"ஆபத்து வேளையிலறிவு சொல் மந்திரி
அரும்பிணிக்கவ ளொரு சஞ்சீவி – துன்பம்
அணுகும் போதாறுதல் தரித்ர காலத்தில்
அருநிதியாம் அந்தத் தேவி உம்மை
பாபத்தில் வீழாமற் போதிக்குஞ் சற்குரு
பாடஷம் வல்லமே தாவி" (பக் 19)

என்று கூறுகிறது பெண்மதி மாலை.

ஆணாதிக்க சமுதாயத்தில் பெண்கள் அடிமைகளாக நடத்தப்படும் நிலை கண்ட வேதநாயகர் பெண்கள் தங்கள் தேவைகளைக்கேட்டுப் பெறும் நிலையில் வாழ்கின்றனர் என்று கூறுகிறார். "அறிவு ஒளி" தனக்குத் தேவை என்றுணர்ந்த பெண் ஆண் சமுதாயத்திடம் இருந்து கேட்பதாக எழுதியுள்ளார். ஆண்களின் கண்களே பெண்கள் தான். விழி வழி இவ்வுலகைக் காணும் ஆண்சமுதாயத்திடம் கல்வியை விழிகள் கேட்பதாகக் கூறுகிறார்.

"வித்தையைப் படிப்பியுங்கள்" என்ற அடிவழி ஆண் சமுதாயத்தின் அனுமதி பெற்றெ பெண்கள் அறிவுக் கண் திறக்க வேண்டியஅவலமான சமுதாயச் சூழலைப் பெண் என்ற சமுதாயச் செய்தியைக் கூறும் ஆசிரியர் பெண் தன்னிலையைக் கூறுவதாகக் கூறக் காணலாம். படிப்பு அல்லது கல்வி என்று ஒன்று பெண்களுக்குத் தரப்படுமானால் குடும்ப நிர்வாகம், கணக்கியலில் பெண் பங்கு கொள்வாள். தையல் கல்வியால் ஆண்களின் புறத்தோற்றத்தை வியக்கச் செய்வாள். ஆண்கள் விரும்பும் வாழ்க்கைத் தொழில்கள் செய்யத்துணை நிற்பாள் என்கிறது பெண்மதி மாலை. ஆணுக்கு எல்லா வசதிகளையும் செய்து தரும் உயிராகப் பார்த்த பெண், தன் கல்வி உரிமையைப் பெற எங்ஙனம் இரந்து நிற்கிறாள் என்ற நிலையை தம்நூலில் வேதநாயகர் கூறக் காணலாம்.

சமயவாதியான வேதநாயகர் சமுதாயப்புரட்சி என்று கூறாமல் சமுதாய விழிப்புணர்வை தம் நூல் வாயிலாக ஏற்படுத்தியுள்ளார்.பெண்ணுக்கு முறையான பள்ளிக்கல்வி தேவையில்லை என்ற அவர்கால சமுதாயச் சிந்தனையை அவரின் நூலில் காண முடிகிறது.பெண்களின் அறிவு வளர்ச்சிக்குப் பெண்கல்வி அவசியம் என்று கூறும் வேதநாயகர் கருத்து கல்வியாளர் பெஞ்சமின் புளுமின் ஓர்தல் புலக்கல்வியின் (Cognative Domain) முதலிரு படிநிலைகளான அறிந்து கொள்ளுந்திறன், புரிந்து கொள்ளுந்திறன் ஆகியன பற்றிப் பெண்கல் எனும் தலைப்பில் கூறக் காணலாம். (பக்.272. "கல்வி யென்கிற ஆகாரத்தைக் கொடுத்துப் புத்தியை அபிவிருத்தி செய்ய வேண்டியது நம்முடைய கடமையாயிருக்கிறது)

மனத்தை ஒருமுகப்படுத்த (convergent thinking) கல்வி பெண்களுக்குத் தேவை. கவனம் சிதறாமல் ஒருமுகச் சிந்தனையை வளர்க்கும்கருவியாம் கல்வி பெண்ணுக்கு துணைவன் போன்றது என்ற செய்தியை பக்.28 இல் கூறுகிறது

பெண்கல்வி. வேதநாயகர் காலச் சமுதாயம் கல்வியறிவு பெறாத பெண்ணிடம் மிகுதியும் சமுக ஒழுக்கத்தையும், வீட்டின் நிர்வாகத்தையும் எதிர்பார்த்து மாற்றம் அடைந்தது என்பதை அவரின் எழுத்துக்காட்டுகிறது. (பக்.29)

"பகவானை கல்வி அறிவினால் அறியலாமே
அல்லாமல் வேறொன்றினாலும் அறிய கூடாதே" (பக்.31)

என்பதால் கடவுளை உணர, இயற்கையை உணர பெண்கல்விதேவை என்று வலியுறுத்தக்காணலாம். பக்.36 இல் பெண் கல்வி தடை செய்யப்பட்டதைக் கண்டிக்கும் போக்கு காணும் போது அறிவு வளர்ச்சியில் பெண்ணுக்கு அளிக்கப்பட்ட அநீதியைச் சாடுகிறார் வேதநாயகர் எனலாம்.

மனித வாழ்வில் தொடர்பு கொள்ளுந்திறன் வளர்ச்சிக்கு (communication) கல்வி தேவை அதிலும் பிறரிடம் எளிய மொழியில் தொடர்பு கொள்வதே கல்விக்கழகு என்பதை "நம்முடைய கருத்தைப் பிறர் அறியவும், பிறருடைய கருத்தை நாம் அறியவும் கடவுள் நமக்கு வாக்கையும் பாஷைகளையும் கொடுத்திருக்கிறார். ... ஊமைபோல் மௌனமாயிருந்தது விடுவது ச்ரேஷ்த்தமம் (பக்.54) எனக் கூறக் காணலாம். மாயூரம் வேதநாயகரின் 'பெண்மதி மாலை பெண்கல்வி' என்ற படைப்புக்களில் பின்வரும் உண்மைகள் கூறக் காணலாம்.

1. பெண்கல்வியின் தேவை வலியுறுத்தப்படுகிறது.
2. பெண்ணுக்குக் கல்வி விபத்தாக அமையக்கூடாது என்கிறது.
3. பெண்ணுக்குக் 'கணிதக் கல்வி அறிவு' வற்புறுத்தப்படுகிறது.
4. 'குழந்தை வளர்ப்புக் கல்வி' பெண்ணுக்குத் தேவை என்கிறது.
5. சமுதாயத்தில் 'பெண் ஆசிரியர்கள்' அவசியத்தை வற்புறுத்துகிறது.
6. நிர்வாகக்கல்வி (Managerial Science) பெண்ணுக்கு அளிக்கச் சொல்கிறது.
7. கணக்குப் பதிவியல் கல்வியும், நுண்கலைக் கல்வியும் (Accountancy & fine Arts edn) பெண்ணுக்கு அளிக்கச் சொல்கிறது.
8. பெண்கல்வியில் பூகோளம், அண்டசாஸ்திரம் (Geography & astronomsy) போன்ற பாடங்களைக் கற்பிக்கச் சொல்கிறது.
9. சமுதாயம் பொருத்தப்பாடு (Social adjustment)ஏற்பட பெண்கல்வி தேவை என்கிறது.
10. பெண்கல்வியில் வழிகாட்டுதலும் நெறிப்படுத்தலும் (Guidance & counselling) தேவை என்கிறது.
11. 'தாய்மொழிக் கல்வி' பெண்கல்வியில் வேண்டும் எனப்பேசுகிறது.
12. தொடர்பு கொள்ளுந்திறன் வரை கல்வி பெண்ணுக்கு அளிக்கப்படவேண்டும் என்கிறது.
13. பெண்கல்விக்கெனத் தனிக்கல்வித்திட்டம் (Curriculun for Women's Edn) தேவை என்று உறுதிப்படுத்துகிறது.
14. பெண் பொருளாதார தற்சார்புக்காகப் படிக்கவில்லை தன் அறிவு வளர்ச்சிக்குப் படிக்க வேண்டும் என்கிறது.

# 58. THE CONTRIBUTION OF P.V.MANICKAM NAICKER TO TAMIL LANGUAGE AND LINGUISTICS

**S. Jayalakshmi**
Ph.D. Research Scholar
Tamil University, Thanjavur

## Introduction

P.V.Manickam Naicker was born on Feb. 25, 1871. He was sent to school only at the age of 12; he started composing verses even when he was just 14 yrs. old and he became well versed in astrology when he was 16. He was able to predict his own future till the age of 59 and it was a real wonder that his predictions were acute. Though the rich family of his birth went poverty-stricken, he was patronised by many people who were impressed by his intellect and infallible intelligence. This enabled him get through his engineering course successfully. P.V. Manickam Naicker's scholarship had been variously proved by his ability to guess the time with the help of sun and stars and to predict the activities of animals from their bodily movments.

In his realm of engineering, he discovered more than 60 hidden facts of science and he also formulated a short-cut way in Maths called 'Calculograph', which gained universal applause. It is a wonder that P.V. Manickam Naicker, who was by profession and calibre an engineer or in other words a science-oriented person, he had got his own inclination towards other areas of knowledge which include the study of Tamil language too. This article aims at delineating some of his contributions to Tamil language and linguistics.

## His Books and reserches

There are numerous opinions regarding P.V. Manickam Naicker's researches during the 1920s. Some of these notices have been compiled together and published. According to an extract from Rev. W.H.Farrar's letter dated 15.10.1919, P.V. Manickam Naicker had given samples of various different languages to show the extent of his research, proving his command over the languages and also over his vocal organs to produce with ease any sort of phonetic sound that was ever heard of.

**The Science of the Universal Tamil Phonetics**

This was a collection of lectures delivered by P.V. Manickam Naicker compiled together, which exposed Tamil Phonetics that lay buried for centuries in the ancient Tamil Grammar, Tholkappium. It explicated several sentences of Tamil which were dictated from English and other languages. He states, "unlike the prosody of other languages which lay down rules of measure and matter as the most important for versification, the Tamil prosody is primarily based upon sounds and their natural expressions of emotions. It is a serious fault that the Tamil country should leave their invaluable treasure of phonology buried without either using themselves or giving to others". According to R. Ganapathy Iyerr who was a High court Vakil of Madura and a Varnasramadharma Leader, the point of P.V.Manickam Naicker is that the oldest grammar of Tamil (Tholkappium) not only recognises various forms and sounds in nature but `provides script also for them all'.

Starting with the fact that the Tamil alphabet is based on the organis system, he proceeds to explain them. His concept is that "the system of symbolisation may be either organic or accoustic but the exact timbre of phones cannot be reproduced by another unless the moulds of the various parts of the vocal organs are identical between the person who first produce the phones and the one who tries to reproduce the same and yet the letter sounds can be accurately identified with the aid of organic symb ls".

He also defines vowel, contactal and glottal efforts, investigates into the old Vatteluthu script and into Gopinath Rao's theory of the Pali origin of the Tamil script. He states that all the sounds necessary for learning all foreign languages can be extracted from the Orthography of Tholkappiar and that Tamil Alphabet is capable of recording any sound. The Tamilian Sangam of Trivandrum acknowledged the brilliant merits of P.V. Manickam Naicker as a Tamil scholar, speaker and expounder of the Tamil Phonetics. This impression of him was strengthened by a course of learned lectures which he deliverred during his visit to Trivandrum.

## The Tamil Phonology

From the point of view of P.V.Manickam Naicker, the characteristics of a nation are in great measure revealed by the characteristics of their phonetics, and marked changes in the character of a nation are accompanied by corresponding changes in the phonation of their language. He fet that the Tamil language had got only the semblance of an artificial and conventional language, but it was the one which had been developed rigidly basing the natural laws of phonology. He has explained what emotion do vowels, consonants, plosives, nasals and medials etc. express in nature and what emotions do the long and short phones express. He compares the Sanskrit language and the Tamil language and says that in the Sanskrit language, long phones unduly dominate over the short ones, and that the aspirates and vibrated consonants (voiced letters) abound in Sanskrit. He feels and does attempt to seek the reason for it in Tamil Phonology. He has provided original compositions of poetic-prose and poetry in illustration of phonological laws and also quotations from eminent authors in illustration of phonology.

## The Tamil Alphabet, Its Mystic Aspect*

The subject matter dealt with by the author is such that it was necessary for him to make brief but specific mention of his views about

- the Tamil Phonetics
- the importance of Tholkappiam to the historians
- the status and age of Tamil
- the Aryan migration theories
- the South Indian rules of life
- the Vatteluthu character of the Tamil language,

and a few other minor subjects.

He has also dealt with the form of the Tamil letters. He feels similar integral parts in the Tamil letters have similar phonetic significances.

He explains these facts with the help of illustrations and the changes in the original letter forms have also been explained. His view is that restoration of the correct scientific forms in place of the few deformed letters is essential to render the script capable of universal application of all human phones.

## Social and Political Sciences of the Dravidians

A series of highly instructive and interesting lectures they are, the subject was subject was enturely original and his treatment of the same was inspired by a great devotion to science and truth, continued with a patriotic sentiment of revealing to the west, vistas of great scientific truths lying still undiscovered in the neglected sciences and philosophies of ancient southern India. The lectures werre evidently the outcome of profound scholarship and research, and as the learned man went on unfolding the basic elements of Earth, Water, Fire, Air and Ether as constituting the foundation of all branches of science. It had been registered that in the course of the lectures many questions were put and many intelligible challenges were made, to one and all of which the learned lecturer gave definite and convincting replied.

## His Calculograph

P.V.Manickan Naicker has displayed remarkable ability and originality in constructing a 'calculograph' by means of which all the calculations required in connection with the theory of reinforced concrete aire conducted graphically with the aid. By means of this calculograph he was able to solve graphically and with great rapidity and accuracy, a number of complex mathematical problems which continually presented themselves in that branch of engineering.

P.V. Manickan Naicker was the person who was believed to have brought to light the ancient Tamil Grammar. From an extract passed at a mass meeting held at the Fort Maidan, Vellore, on 14th April 1920, we come to know that he was honoured with due credits. The resolution of this meeting states. "..... that the above authorities be also requested that Mr.P.V.Manicka Naicker be appointed as Universiy lecturer in Tamil as the Phonetic and Classical importance of the Tamil language is accepted by scholars". Thus in a period when the field of linguistics was just coming up the researches made by P.V.Manicka Naicker were really remarkable contributions to the Tamil language and linguistics.

## References

1. P.V.Manicka Naicker, The Universal Tamil Phonetics, Justice Printing Works, Madras, 1924.
2. ................., The Tamil Phonology, Justice Printing works, Madras, 1926.
3. ____________, தமிழ் எழுத்துக்களின் நுண்மை விளக்கம், தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை, 1968.
4. ____________, செந்தமிழொலியிலக்கணம், (விவரம் இல்லை)
5. ____________, தமிழலகைத் தொடர், ஜெகம் அண்டு பாட்சன் அழுத்தம், திரிசரபுரம், 1924

கட்டுரை

காழி.சிவ.கண்ணுசாமி, திரு.பா.வே.மாணிக்க நாயக்கரின் சில வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள், சிலம்பு 10, செந்தமிழ்ச் செல்வி, (1932– 1933).

